# கல்கி பொருளடக்கம்



ஒரு சிலர் அதிகாரம் கைப்பற்று வதனால் உண்மையான சுயராஜ்யம் வந்ததாகாது. கைப்பற்றிய அதிகாரத் தைத் தவறாகப் பிரயோகிக்கும்போது, அதை எதிர்த்து நிற்கும் சக்தி எல்லா ரும் பெற்றிருப்பதுதான் உண்மை யான சுயராஜ்யமாகும்!

—காந்திஜி

**விசுவாவசு புரட்டாசி 17 – அக்டோபர் 3**



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பிரச்னை தீரவில்லை

இந்தியா-பாகிஸ்தான் போர்

காஷ்மீர் பிரச்னை

காஷ்மீர் பிரச்னை

அது ஆயிற்று
இனி இது!

பாகிஸ்தானுடன் போர்

மக்களுடன் போர்

PK



மலர் 25 ★ இதழ் 10

# காந்தி ஜயந்தி நினைவுகள்

ராஜாஜி

நமது தேசத்தில் தொழில்களைப் பெருக்க வேண்டும் என்று கருதுகிறவர்கள், அபிவிருத்தி அடைந்த மேல்நாடுகளோடு நாமும் போட்டியிட வேண்டும் என்ற எண்ணத்தில் செயலாற்றக் கூடாது. நம்முடைய அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும், நமது மக்களுக்கு நிறைய வேலை வாய்ப்புக்களைத் தேடித் தர வேண்டும் என்ற இலட்சியத்துடனேயே அதற்குகந்தபடி தொழில்களைப் பெருக்க வேண்டும். நம் நாட்டின் மக்களில் பெரும்பாலோர் விவசாயம் என்ற ஒரு துறையிலேயே ஈடுபட்டிருப்பதுதான் நம் வறுமை நிலைக்குக் காரணம். விவசாயத்தில்தான் வேலை கிடைக்கும் என்று தற்போது நம்பியிருக்கிறவர்களை உபயோகப்படுத்திக் கொள்ளக்கூடிய மற்றத் தொழில்களைச் சிறுகச் சிறுக விஸ்தரித்து, தற்போது இந்த ஒரே துறையில் ஏற்பட்டுள்ள நெரிசலைக் குறைக்க வேண்டும். இதுவே நமது தொழில் வளர்ச்சித் திட்டத்துக்கு வழிகாட்டும் குறிக்கோளாக இருத்தல் வேண்டும்.

சர்வதேச வாழ்வு முற்றிலும் மாறி வருகிறது என்பதை நாம் உணர வேண்டும். அபிவிருத்தி அடைந்த நாடுகளுடன் நாம் போட்டியிட வேண்டியவர்களல்ல. அவர்களுடன் பாகஸ்தர்களாக ஒத்துழைக்க வேண்டியவர்களே நாம். இந்த உண்மையை அறியத் தவறியதன் விளைவாகவே, வேறு நாடுகளில் மலிவாகச் செய்யப்படும் பொருட்களை நம் நாட்டில் அதிகச் செலவிட்டு உற்பத்தி செய்து நம்முடைய ஆதார வசதிகளை வீணடித்து வருகிறோம். முற்றுகையிடப்படும் ஒரு கோட்டைக்குள் உள்ள மக்களைப் போல் நம் தேவையவ்வளவையும் நாமே பூர்த்தி செய்து கொள்ள முயலுவது அநாவசியம். அபிவிருத்தியடைந்த மேல்நாடுகளுடன் போட்டியிட்டுப் பெருந் தொழிற்சாலைகள் அமைப்பதாலேயே கிராமப்புற மக்கள் ஏராளமாகப் பட்டணச் சீமைகளுக்குக் குடிபெயர்கிறார்கள். இதனால் நகரங்களில் இடநெரிசல் ஏற்படுகிறது. கிராமங்களிலிருந்து உணவுப் பண்டம் போதிய அளவு நகரங்களுக்குக் கிடைக்க முடியாமல் தட்டுப்பாடு ஏற்படுகிறது. பெரிய தொழிற்சாலைகளில் வேலை தேடி வந்து ஏமாந்து போன மக்கள் மனமுடைந்து போவதற்கும் அரசாங்கத்தின் நிகழ்காலக் கொள்கையின் தவறுதலே காரணமாகும்.

தொழில்கள் பெருக வேண்டியது அவசியம். ஆனால் எத்தகைய தொழில்கள் என்பதே கேள்வி. அடிப்படை உண்மைகளை மறந்து, பேய்த் தேரை நாடி ஓடியதால் இவ்வளவு காலமும் தவறான வழியிலேயே சென்று விட்டோம். அடிப்படைத் தவறுகளிலிருந்து கவடு விடுகிற திட்டங்களை மேன்மேலும் அமுலாக்கும்போது, பழைய தவறுதல்கள் தவறான திசைகளில் விஸ்தாரமாகப் பரவுகின்றன. நமக்கு உதவியளிக்கும் அபிவிருத்தியடைந்த தேசங்கள் இவ்விஷயத்தில் நமக்குச் சரியான நல்லுரை அளிக்க முடியாத நிலையில் உள்ளன. 'இன்னின்ன பண்டங்களை மட்டும் நீங்கள் உற்பத்தி செய்து கொள்ளுங்கள்' என்று அவை நமக்கு யோசனை கூறினால் நாம் அதைத் தப்பர்த்தம் செய்து கொள்வோம். அவை தயாரிக்கும்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
— பாரதியார்

பண்டங்களில் நாம் போட்டிக்கு வராமல் தடுப்பதே அவற்றின் நோக்கம் என்று உள்ளர்த்தம் கற்பித்துக் கொள்வோம். எனவே, நமது பொருளாதாரத்துக்கு உகந்தபடி நாம் எத்தொழில்களில் ஈடுபடலாம் என்பது குறித்து மற்ற நாடுகள் யோசனை சொல்ல இயலாது. நம் விவேகத்தின் மீதேதான் இவ் விஷயத்தில் நாம் முடிவெடுக்க வேண்டும். தேசத்துக்கு உடனடியாக அவசியமானதும், டாம்பீகச் செலவற்றதும், இயந்திரங்களை அதிகம் நம்பி இராமல் அதிக பட்ச மக்களுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதுமான துறைகளிலேயே கவனம் செலுத்த வேண்டும். நமது தேசத்தில் சாலைகள் விஸ்தரிப்புக்கு இன்னும் எவ்வளவோ இடமிருக்கிறது. எவ்வளவோ இடங்களில் வண்டிகள் செல்லக் கூடிய பாதைகள் அமைக்கத் தேவையுள்ளது. இதே போல் கிராம மக்களுக்கு வீடுகள் கட்டித் தருவதும் ஒரு பெரும் தொழிலாக அமையும். இது ஏராளமான மக்களுக்கு வேலைவாய்ப்புத் தருவதோடு பொதுஜனங்களுக்கு உடனடியாகப் பயன் தரும். பொதுஜன ஜாகை வசதித் திட்டமென்பது ஒரு மகத்தான தேச அபிவிருத்திப் பணியாக விளங்கும். கிராம மக்களுக்குச் சுத்தமான குடிநீர் வழங்குவதும், சுகாதார நிலைமையைச் சீர் செய்வதும், கழிவுகால்களைத் துப்புரவாகத் தேசமெங்கும் அமைப்பதும் இதில் அங்கங்களாகும். சுகாதாரத்தில் நம் நாட்டுக் கிராமங்கள் இன்று எவ்வளவு இழிநிலையில் உள்ளன என்பதைக் கவனித்தால் இத்திட்டங்களின் அவசியம் புலனாகும். இவை யாவும் நாடு முழுதும் நடைபெற வேண்டிய திட்டங்களானபடியால், ஆங்காங்கே விவசாயத் துறையில் இடம் கிடைக்காதவர்களுக்கெல்லாம் அந்த அந்த இடங்களிலேயே வேலை வாய்ப்புக் கிடைக்கும். தொழிற்சாலைகளை ஓரிடத்தில் குவிப்பதால் ஏற்படும் நகர்ப்புற நெரிசலும், அம்மக்களுக்கு உணவு விநியோகம் கிடைப்பதில் உள்ள தட்டுப்பாடும் இதனால் தவிர்க்கப்படும்.

மேற்சொன்னவையும் இவை போன்ற மற்ற அடிப்படையான தேச அபிவிருத்தித் திட்டங்களையும் மேற்கொள்வதால் நாட்டின் பொருளாதாரமே முற்றிலும் சிறப்பான முறையில் மாறி விடும். கிராமங்களில் முன்னேற்றம் ஏற்படுவதுடன், பொதுவாகவே தேசம் முழுவதிலும் க்ஷேமம் உண்டாகும். அந்நிய நாடுகளிலிருந்து அவசியமாக இறக்குமதி செய்ய வேண்டிய பொருட்களை இறக்குமதி செய்துதான் ஆக வேண்டும். அந்நியச் செலாவணியைச் சரிவர ஈடுகட்டுவதற்காகத் தனி மனிதர்கள் விரும்பும் டாம்பீகப் பொருட்களை இறக்குமதி செய்ய முடியாமல் போனால் அதனால் ஒரு கெடுதலும் இல்லை. நம் நாட்டின் பல வர்க்கத்தினரிடையே நிலவும் பெருத்த தாரதம்மியங்கள் இதனால் குறைந்து, நமது மனச் சாட்சியைத் துன்புறுத்தும் ஓர் அம்சம் மறையும்.

பெரிய கனரகத் தொழில்களை அபிவிருத்தி செய்வதன் மூலமே அந்நியச் செலாவணி பெற முடியும் என்ற வாதம் செல்லாது. தொழில் துறையில் நன்கு அபிவிருத்தி பெற்ற நாடுகளுடன் போட்டியிட்டு, நம்முடைய குறைந்த ஆதார வசதிகளை விரயம் செய்வதன் மூலம் கணிசமாக அந்நியச் செலாவணி பெறுவது சாத்தியமில்லை.

இப்போது மக்களின் அன்றாட வாழ்க்கைக்கு உதவாத பெரும் திட்டங்களின் கோடிக்கணக்கான ரூபாய்கள் முடக்கப்பட்டாலும், மூலதனத்தோடு இணைத்துப் பார்க்கும்போது இவற்றால் மிகக் குறைந்த அளவு மக்களுக்கே வேலை தர முடிகிறது.

நாட்டின் நலனுக்கு உகந்தவழியில் எப்படித் திட்டமிட வேண்டுமோ அதற்கும், தற்போது எப்படித் திட்டமிடப்படுகிறதோ அதற்கும் இடையுள்ள வேறுபாடு ஜனநாயகத்துக்கும், ஏகாதிபத்தியத்துக்கும் உள்ள வேறுபாட்டின் அடையாளம்; மக்களின் தேவைக்கு முதலிடம் அளிப்பதற்கும் மக்களின் தேவைகளை அடியோடு அலட்சியம் செய்வதற்குமிடையேயுள்ள வேறுபாட்டின் அடையாளம்.

உலகத்தின் ஒருமையை மறந்து, முன்னேற்றமடைந்த நாடுகளோடு போட்டி போடுவதாலேயே அபிவிருத்தியடையலாம் என்று கருதுவதே இன்றைய இன்னல்களுக்கு ஆணி வேர். நம் நாட்டுக்குத் தேவையான உடனடிக் காரியங்களை மட்டுமே நாம் செய்தால் போதும். சரித்திரத்தின் ஓட்டத்தில் சில அநுகூலங்களைக் கண்ட நாடுகள் தொழில்துறையில் அடைந்துள்ள முன்னேற்றத்தை நமக்குத் துணையாகக் கொள்ள வேண்டுமேயன்றி, போட்டியாகக் கருதலாகாது. வேறொருநாட்டினர் கடிகாரமோ, மோட்டார் காரோ செய்வதில் தனிச் சிறப்புப் பெற்றிருப்பின், நாமும் நமது திறமையைக் காட்டி அவற்றை உள்ளூரில் செய்ய வேண்டும் என்று நினைக்க வேண்டிய அவசியமில்லை.

அவர்களும் நாமும் ஒருவருக்கொருவர் எப்படித் துணை புரிந்து, ஒருவரின் குறையை இன்னொருவர் இட்டு நிரப்பலாமோ அவ்வாறு செய்வதே அறிவுடைமை. நம்முடைய அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளாத நிலைமையில், நமது மனித சக்தி என்கிற மகத்தான செல்வத்தை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளாத நிலையில், அந்நிய நாட்டினரோடு அநாவசியமாகப் போட்டியிடாதிருப்போம்.

# வீர வணக்கம்

ஐ.நா.வின் கோரிக்கைப்படி இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே போர் நின்றுள்ளது; இந்திய சர்க்காரின்மீது இல்லாத – பொல்லாத குற்றங்களைச் சாட்டியனை, பிறகு அவை நிவிருத்தியாகிவிட்டதாக மறுபடியும் புளுகிவிட்டுப் போர் மிரட்டலைக் கைவிட்டதால் இரண்டாவது முனையிலும் போர் ஏற்படவில்லை. இப்போதைக்கு இது ஆறுதலான விஷயம் எனினும் அடிப்படைப் பிரச்னைகளோ இன்னும் தீர்த்தாகவில்லை. இரு முனைகளிலும் மீண்டும் அபாயம் தலைதூக்கக் கூடிய ஏதுக்கள் அப்படியேதான் உள்ளன. எனவே, ராணுவ ரீதியிலும், அரசியல் ரீதியிலும் இந்திய சர்க்கார் தமது பிடிவாதங்களை விட்டுச் செயலாற்ற வேண்டியது மிக மிக அவசியம். ராஜாஜி கூறியது போல் அந்நிய எதிரிகள் தொடுக்கும் போர் ஒருபுறமிருக்க, வரிகள் என்ற பெயரில் இந்திய சர்க்காரே மக்கள் மீது தொடுத்து வரும் போர் நீங்க வேண்டும். வரிப் பணம் தந்து தளவாடம் வாங்குவதைவிட உடன்படிக்கை மூலம் தளவாடங்களை உதவியாகப் பெறும் புத்திசாலித்தனத்தைச் சர்க்கார் அநுசரிக்க வேண்டும். ராணுவத்திலும் பொருளாதாரத்திலும் உலக நாடுகளைச் சார்ந்தும் நம்பியும் வாழ வேண்டியுள்ள நாம், 'அவற்றின் கருத்தைப் பற்றி இலட்சியம் செய்ய மாட்டோம்; காச்மீர விஷயத்தில் எங்கள் கருத்தே முடிவானது; ஆனால் பாகிஸ்தானுடன் போர் மூண்டால் அந்நியர்கள் எங்களுக்கே ஆதரவு தர வேண்டும்; அவர்கள் உதவி தராவிட்டால் தூஷிப்போம்' என்றெல்லாம் நினைப்பது சிறிதும் அறிவுக்குப் பொருந்தாது. இப்போதைய பாகிஸ்தான் ஊடுருவலைத் தடுப்பதிலும், போர்நிறுத்தம் செய்வதிலும், சீன மிரட்டலுக்குத் தகுந்த பதில் தருவதிலும் நமது பாராட்டைப் பூரணமாகப் பெற்றுள்ள ஸ்ரீ லால்பஹாதூர் அவர்களின் சர்க்கார் இனியும் இதே போல் பாராட்டுக்குரிய விதத்தில் செயல்படுமாக!

நமது ஜவான்களின் அற்புத சாதனைகளும், அவர்கள் உற்ற சோதனைகளும், அவர்கள் புரிந்த மகத்தான தியாகங்களும் நம் நெஞ்சை விட்டு என்றும் நீங்கா.

நமது சைனியத்தை இன்னும் பெருக்க வேண்டும். ராஜாஜி கூறியிருப்பது போல் இருபத்தி மூன்று வயதிலிருந்து ராணுவப் பயிற்சி அளித்து முப்பத்தைந்து வயதுவரையில் பணி புரியுமாறு, இருபது லட்சம் பேர் கொண்ட ரிஸர்வ் படையை அமைக்க வேண்டும். இதனால் ஜனப்பெருக்கம் ஓரளவு கட்டுப்படும் என அவர் ஹாஸ்யமாகக் குறிப்பிட்டதை முக்கியமாக நினைத்தாவது அரசாங்கம் இவ்வழியில் ஆவன செய்ய வேண்டும்.

போர்முனையிலும், பாகிஸ்தானின் அக்ரமப் போர் காரணமாக ஆஸ்பத்திரியிலும் ஸிவிலியன் பகுதிகளிலும் உயிர் துறந்த அனைவரது குடும்பத்தினருக்கும் நம் மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். பாகிஸ்தானின் முறையற்ற குண்டு வீச்சுக்கு ஆளாகி உயிரிழந்த பழம் பெரும் காந்தியவாதியான குஜராத் முதன்மந்திரி ஸ்ரீ பல்வந்த்ராய் மேதா, கணவருடனே பொன்னுடல் ஏகிய அவரது மனைவி ஸ்ரீமதி சரோஜா பென், மற்றும் பிராணத் தியாகம் புரிந்த அனைவரது ஆன்ம சாந்திக்கும் இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

# வெற்றியுடன் வரும் கலைஞர்கள்

பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் அவர்கள் அமோக வெற்றியுடன் எடின்பரோ கலைவிழாவிலிருந்து அக்டோபர் 1ந் தேதி காலை 8-30 மணிக்குச் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் வந்து இறங்குகிறார். பகைவரும், சண்டையும் இல்லாமலே வெற்றி காண்கிற துறை கலை. அனைவரையும் இசையால் இணைப்பதே சங்கீதக் கலையின் வெற்றி. அந்நிய நாட்டு உள்ளங்களை நமது சங்கீத சம்பிரதாயத்துடன் ஸ்ரீ மணி அய்யர் அவர்கள் எப்படி இணைத்துள்ளார் என்பதற்குப் பத்திரிகைகளின் பரவசச் செய்திகளே சான்று. ஸ்ரீ மணி அய்யர் அவர்களின் மிருதங்க லய விந்நியாசங்கள் எடின்பரோவில் கூடியிருந்த தேர்ந்த கலை ரசிகர்களை அப்படியே சொக்கச் செய்திருக்கிறது. நமக்கு இதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. பூரண சந்திரன் எந்த நாட்டினருக்கும் இன்பம் அளிக்கத்தான் வேண்டுமெனில் ஸ்ரீ மணி அய்யரின் வாசிப்பும் எந்த நாட்டினரின் இதயத்தையும் தொட்டுத்தானே ஆக வேண்டும்?

வைர மணியைத் தங்க 'உம்மிச'த்தில் வைத்துத்தான் நகை செய்ய முடிகிறது. ஸ்ரீ மணி அய்யரின் மிருதங்க வாசிப்புக்கு 'உம்மிச'மாக இருந்த ஸ்ரீ கே. வி. நாராயண ஸ்வாமியின் வாய்ப்பாட்டும் பாராட்டுப் பெற்றுள்ளது. லால்குடி ஸ்ரீ ஜயராமனின் வயலின் இசையைக் கேட்டு அக்கருவியின் மாமேதையான யெஹூதி மெநுஹின் அவர்களே சிலாகித்து விட்டார்கள்! காமன்வெல்த் நாடுகளின் கலைஞர்களிடையே நம் சங்கீதக் கலைக்கு மகோன்னதமான பெருமையைத் தேடித் தந்த நமது கலைஞர்களின் சாதனையை எண்ணிப் பெருமை கொள்கிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

பாகிஸ்தானும் இந்தியாவும் போர் நிறுத்தம் செய்ய வேண்டும் என்கிற ஐ. நா. பாதுகாப்புச் சபைத் தீர்மானத்துக்கு இந்தியா ஆரம்பத்திலிருந்தே ஒப்புதல் அளித்து வந்திருக்கிறது. ஆக்கிரமிப்பை வெற்றிகரமாக முறியடிக்க இந்தியாவுக்கு ஆற்றல் இருந்த போதிலும் போர் நிறுத்தத்துக்கு ஆதரவு தெரிவித்து வந்திருக்கிறது. மீண்டும் இதே போல் ஊடுருவலும் ஆக்கிரமிப்பும் நிகழாமல் இருக்க உலக நாடுகள் திருப்தியான முறையில் வழி காண வேண்டும் என்பதே இந்தியா ஆரம்பத்தில் விதித்த நியாயமான நிபந்தனை.

முடிவில் எவ்வித நிபந்தனையுமின்றிப் போர் நிறுத்தத்துக்கு இந்தியா இசைந்துள்ளது. ஜயசாலியான இந்தியா போரை நிறுத்தியது பெருமிதத்துக்கு உரிய செய்கை. வெற்றி பெற்று வந்த நாம் போரை நிறுத்தி விட்டோமே என்பதில் வருந்துவதற்கெதுவுமில்லை. சர்வதேச ஆலோசனைக்கிணங்க நாம் யுத்தத்தை நிறுத்தியுள்ள போதிலும், நமது ஆற்றலை நன்கு வெளிப்படுத்தி ஆக்கிரமிப்பைத் தடுத்து விட்டதாலேயே வெற்றியின் உண்மையான சாரத்தைப் பெற்று விட்டோம். இதே சமயத்தில் ஐ. நா. சபையின் கௌரவமும், ஸ்திரத்தன்மையும், முக்கியத்துவமும் பெருக உதவி புரிந்துள்ளோம். தற்போது நமது ராணுவ வீரர்கள் முறியடித்த தந்திரங்களைப் பாகிஸ்தான் மீண்டும் பின்பற்றாமலிருக்கப் பாதுகாப்புச் சபை வழி காணுமா என்பதே இப்போது கேள்வி. மீண்டும் பாகிஸ்தானைச் சீனம் தூண்டி விடாமல் இருக்க வழி என்ன?

ஃஃஃ

சீன அபாயமும் உபத்திரவமும் இன்னமும் சமாளிக்கப்படாமலே உள்ளன. நாமே தனித்து நின்று சீனம்—பாகிஸ்தான் இரண்டையும் எதிர்த்து வெல்லலாம் என எண்ணுவது எவ்வளவு 'மகத்தான அபிலாஷை'யாக இருப்பினும் அது காரிய சாத்தியமல்ல. வேறு நாடுகளின் உறுதியான நட்பும் உதவியும் இன்றி இந்த அபாயத்தை நாம் தீர்க்க முடியாது. எனவே, அநாவசியமாக நாம் கற்பித்துக் கொண்டுள்ள மானசிகத் தடைகளையும் கூச்சங்களையும் விட்டுப் பலம் தேடுவதற்கான ஒரே வழியைப் பின்பற்ற வேண்டும். நமக்கு உதவ இணங்கும் நாடுகளுடன் உடனடியாகப் பாதுகாப்பு உடன்படிக்கை செய்துகொள்வதே அந்த வழி. இது அரசாங்கம் செய்யவேண்டிய காரியம்:

மக்களைப் பொறுத்தமட்டில் செய்ய வேண்டியதொன்றுண்டு. சீனப் பலத்தின் இரகசியம் என்னவென்று மக்கள் கவனிக்க வேண்டும். சீனத்தின் பலத்துக்கும், திமிருக்கும் காரணம், கொள்கையும் தர்க்கவாதமும் அல்ல. சீன மக்கள் சோர்வின்றிச் சுறுசுறுப்பாகச் செயலாற்றுவதுதான் அத்தேசத்தின் பலத்துக்குக் காரணம். நமது மக்கள் பொறுப்பைத் தள்ளிப் போடுவதையும், சோம்பிக் கிடப்பதையும் விடவேண்டும். தேசங்கள் பரஸ்பரப் பாதுகாப்பில் எப்படி நேர்மையுடன் இருக்க வேண்டுமோ, அவ்வாறே நமது மக்கள் பரஸ்பரம் நேர்மையுடன் பழக வேண்டும். மக்களின் நேர்மையான உழைப்பும் வியாபாரிகளின் நேர்மையும் சேர்ந்தே தேச பக்தி உருவாகிறது. இவற்றோடு சர்க்கார் பிறநாடுகளின் உதவியுடன் ராணுவ பலத்தைச் சரியான முறையில் பெருக்க வேண்டும். எனினும், பிறரிடமிருந்து வாங்கும் ஆயுதத் தளவாடத்தின் எடையைக் கொண்டு மட்டும் போரில் வெற்றி பெற முடியாது; மக்களின் நேர்மையைக் கொண்டு மக்களின் ஆன்மிகச் சக்தியின் மூலமே வெற்றியை நிலைப்படுத்த முடியும்.

ஃஃஃ

இந்திய மண்ணில் சிறிது தூரம் முன்னேறித் தன்வசமாக்கிக் கொண்டு, பிறகு தானாகவே போர் நிறுத்தம் செய்து விடுவது மாவ் — சே — துங்கின் யுத்த தந்திரம். இப்படியே சிறிது சிறிதாக அந்நிய நாட்டுப் பகுதியை விழுங்குவது அவரது திட்டம்.

சிறுசிறு துண்டங்களாக விழுங்கிப் போர் நிறுத்தம் செய்கிற சீனத் தந்திரம் இந்தியாவில் இப்போது இரண்டாம் அத்தியாயத்தைத் தொடங்கியுள்ளது என்பதைப் பாரத சர்க்கார் உணர வேண்டும். 1962ம் ஆண்டுக் கடைசியில் முதல் அத்தியாயத்தைச் சீனம் வெற்றிகரமாக முடித்தது. இப்படியே சீனத்தின் ஆக்கிரமிப்பு விஸ்தரிக்காமலிருக்க வேண்டுமாயின் நாம் எப்படியேனும் பாகிஸ்தானைச் சீனத்தின் வலைவீச்சிலிருந்து மீட்டு, நம்மிரு நாடுகளிடையே இணக்கம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்வாறு சொல்லுவது எவ்வளவு அருசியாக இருப்பினும், எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் இது ஒரு மிக அவசியமான ஏற்பாடாகும். எடுத்த எடுப்பில் பாகிஸ்தானிடம் ஏற்படக் கூடிய விளைவுகள் எதுவாயினும், அதைப் பற்றி நாம் சிந்தை செய்யாமல், சர்வதேச சம்மதம் பெறக்கூடிய வகையில் காச்மீரப் பொதுஜன வாக்கெடுப்புக்கு ஒருதலைப்பட்சமாக இணங்கினால், உலக நாடுகள் யாவும் சீனாவுக்கு எதிராக நமக்கு உதவி புரியும்; அதோடு மட்டுமின்றி, காலக்கிரமத்தில் பாகிஸ்தானும் மற்ற உலக நாடுகளின் வழியைப் பின்பற்றத்தான் வேண்டியிருக்கும். இந்தியா, பாகிஸ்தான் இவற்றில் எதனுடனும் சேராமல் காச்மீர முஸ்லிம்கள் தனிச் சுதந்திர நாடாக இருக்க வேண்டுமெனப் பெருவாரியாகத் தீர்மானித்தால், அதனைப் பாகிஸ்தான் ஒப்புக் கொண்டுதானாக வேண்டும். காச்மீரம் இந்தியாவுடனோ, பாகிஸ்தானுடனோதான் சேர வேண்டும், தனிச் சுதந்திர நாடாக இருக்கக் கூடாது என்று கூறி, வாக்கெடுப்பை முற்றிலும் சமயச் சார்புடையதாகச் செய்வதற்குப் பாகிஸ்தான் வற்புறுத்தினால் காச்மீர மக்கள் அதனை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இந்தியா — பாகிஸ்தான் இரண்டின் நட்புடனும், ஐ. நா.வின் காப்பில் தனி நாடாக இருக்க வேண்டும் என்ற ஷேக்அப்துல்லாவின் கருத்தைத்தான் காச்மீர மக்கள் தேர்வு செய்வார்கள்.

அகிலன்

எழுதும்

புதிய சரித்திரத்
தொடர் நாவல்



# வெற்றித் திருநகர்

கல்கி

அக்டோபர்
24ந் தேதி
இதழில் ஆரம்பம்





# புதிய
# சக்திவாய்ந்த
## மர்பி டிரான்ஸிஸ்டர் 8






**அதன் ஒலி-மணியோசையின் மதுர நாதம் போல இனிமையானது!**

மர்பி மாடல் டிபி 0816 எட்டு டிரான்ஸிஸ்டர்களும், ஒரு டயோடும் அடங்கியதொரு ஆல்-வேவ், 8 பாண்டு போர்டெபிள் ரேடியோவாகும். இது மத்திய அலை ஒலிபரப்பிற்கென உட்புறமாகப் பொருத்தப்பட்ட ஃபெர்ரைட் ராட் ஏரியலும், சிற்றலை ஒலிபரப்பிற்கென ஒரு டெலஸ்கோபிக் ஏரியலும் கொண்டது. வீட்டில் தேவைப்பட்டால் வெளிப்புற ஏரியல் பொருத்துவதற்கென சாக்கெட் (பொருத்தக் குழிவு) அமைப்பும் இதில் இருக்கிறது. முட்டை வடிவமான ஒலிபெருக்கியும், இரு-நிலை தொனிக் கட்டுப்பாடும், உண்மையான தொனித்தரத்தைக் கொடுக்கின்றன. அதன் சக்தி பூரண திருப்தி அளிக்கும் ஆற்றலுடையது

பக்கவாட்டில் ரெக்ஸின் பொருத்தப்பட்ட இதன் பகட்டான ப்ளாஸ்டிக் காபினெட்டின் பின்பக்கத்தில், பக்கவாட்டில் சாவியும் சிறு கதவும் இருக்கிறது. இதனுள் பாட்டரிகளைச் சுலபமாக மாற்றமுடிகிறது.

மர்பி மாடல் 0816 வீட்டினுள்ளும் சரி, வீட்டிற்கு வெளியேயும் சரி, உங்கள் இல்லத்தை மகிழ்விக்கிறது.

புதிய
சக்திவாய்ந்த
மர்பி டிரான்ஸிஸ்டர் 8
மாடல் டிபி 0816
ரூ. 415/-

**murphy radio** மர்பி ரேடியோ இல்லத்தை மகிழ்விக்கிறது!

MAS 6 315 b A

*Murphy sets the standard*

# பல்சுவைப் பக்கங்கள்



காந்திஜி ஒரு பெரிய மகானாயிருந்தார். ஆனால் அதே சமயத்தில் குழந்தைகளோடு ஒரு குழந்தையாகவும் விளையாடினார். பாப்பாக்களுக்கு ஒரு நண்பராகவும் விளங்கினார். அவர்களுடன் வேடிக்கை விந்தைகள் பல புரிந்தார். அவற்றுள் ஒன்று இதோ இருக்கிறது.

ஒரு சிறுமி. வயது ஐந்து இருக்கும். பெயர் சுமித்திரா. பார்க்க அழகாய் இருப்பாள். அவளைவிட அவளுடைய தலைமயிர் இன்னும் அழகாய் இருக்கும். 'கன்னங் கரே'லென்று இருக்கும். சுருட்டை சுருட்டையாய் இருக்கும். முகமெல்லாம் கவிந்திருக்கும். அதைச் சீவி முடிப்பதற்குள் அவளுடைய அம்மாவுக்குப் பாதி உயிர் போய்விடும். இத்தனை கஷ்டப்பட்டுத் தலை வாரிவிட்டாலும்கூட, கூந்தல் அப்படியே நிற்குமென்று நினைக்கிறீர்களா? ஊஹூம். மறுபடியும் நாலாபுறமும் சுருண்டு சுருண்டு நிற்கும். காந்தித் தாத்தாவுக்குப் பல பேத்திகள் இருப்பார்கள். அவர்களில் இவளும் ஒருத்தி.

ஒரு நாள் அவள் தன் தாத்தாவைப் பார்க்கப் போனாள். அன்று புத்தாண்டு. புத்தாண்டில் பெரியவர்களைப் பார்த்து அவர்களுடைய ஆசிகளைப் பெற வேண்டுமாம். இது குஜராத்தி வழக்கம். சுமித்திரா தன் தாத்தாவைப் பார்த்ததும் கையெடுத்து அவரைக் கும்பிட்டாள். தாத்தாவும் அவளைத் தம் அருகே வைத்து அன்புடன் பேசிக்கொண்டிருந்தார். அப்போது சுமித்திரா சொன்னாள்: "தாத்தா, நேற்று அம்மா நிறைய லட்டு, ஜிலேபி, அல்வா செய்தாள். எல்லோருக்கும் நான் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வந்தேன்." — இதைப் பெருமையுடன் சொன்னாள் அவள். ஒரு பெரிய காரியத்தைச் செய்துவிட்டதாக அவளுக்கு நினைப்பு.

"ம், அப்படியா? ஆனால் நீ எனக்கு ஒன்றும் கொண்டு வந்து கொடுக்கவில்லையே!" என்றார் தாத்தா.

இதற்கு என்ன பதில் சொல்வது? தெரியவில்லை. குழந்தை திகைத்தாள். பிறகு, "மறந்து போச்சு பாபு! இப்போது கொண்டு வந்து கொடுக்கட்டுமா?" என்றாள்.

அவளுடைய வீடு சற்று அருகில்தான் இருந்தது.

காந்தித் தாத்தா லட்டு, ஜிலேபி சாப்பிட மாட்டார். உங்களுக்குத் தெரியும் அல்லவா? ஆட்டுப் பாலும், வேர்க்கடலையும் பழங்களும் தான் அவர் சாப்பிடுவார். இது அந்தக் குழந்தைக்குத் தெரியாது. "இப்போது அதெல்லாம் வேண்டாம். வேறொன்றுதான் வேண்டும். அதை நீ கொடுப்பாயா?" என்று கேட்டார் தாத்தா.

"என்ன வேண்டும்?" என்று கேட்டாள் சூது வாது இல்லாத அந்தக் குழந்தை.

"நான் என்ன கேட்டாலும் அதைக் கொடுப்பாயா? முதலில் அதைச் சொல்!" என்றார் காந்திஜி.

"கட்டாயமாய்க் கொடுக்கிறேன், தாத்தா!" என்றது அந்தக் குழந்தை. பாவம், அவளுக்கு என்ன தெரியும், அந்தக் கள்ளத் தாத்தா மனத்திலே என்ன இருந்தது என்று?

"உன் தலைமயிர் வேணும்" என்றார் காந்தி. திடுக்கிட்டுப் போனாள் சுமித்திரா.

இங்கே உங்களுக்கு ஒரு விஷயம் சொல்ல வேண்டும். காந்தித் தாத்தா அவள் கூந்தலை ஏன் கேட்டார், தெரியுமா?

அவளுக்குக் கண்ணில் ஏதோ ஒரு குறை இருந்தது. போதாததற்கு, சுருட்டை மயிரும் அவள் முகத்தில் விழுந்து பார்வையை மறைத்தது. இதனால் பாவம், அவள் எதையும் விழித்து விழித்துத்தான் பார்க்க வேண்டியதாயிருந்தது. இதனால் அவள் கண்ணில் இருந்த குறை இன்னும் அதிகமாயிற்று. அவளுடைய அம்மாவும் அப்பாவும் இதை நினைத்துக் கவலைப்பட்டார்கள். தலைமயிரை ஒட்ட வெட்டிவிட்டால் நல்லது என்று அண்டை அயல் வீட்டுக்காரர்கள் சொன்னார்கள். சுமித்திரா இதற்கு இணங்கவில்லை. "முடியாது. மாட்டவே மாட்டேன்" என்று பிடிவாதம் செய்தாள்.

"இதோ பார், நீ வாக்குக் கொடுத்து விட்டாய். கொடுத்த வாக்கை மீறக் கூடாது" என்றார் காந்தி.

வேறு வழியில்லை. என்ன செய்வது? தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள் அவள். "ஆகட்டும். அப்படியே கொடுக்கிறேன். ஆனால் அதை நீங்களே உங்கள் கையால் வெட்டி எடுத்துக் கொள்ள வேண்டும். வேறு யாரும் என் தலையில் கை வைக்கக் கூடாது" என்றாள் சுமித்திரா.

"அப்படியே செய்கிறேன்" என்றார் காந்தி. மயிர் வெட்டும் கருவி ஒன்றைக் கொண்டு வரச் சொன்னார். சுமித்திராவின் தலை மயிரை ஒட்ட வெட்டி விட்டார். பாவம், குழந்தைக்கு அழுகை அழுகையாக வந்தது; ஆனால் அடக்கிக் கொண்டாள்.



மொட்டைத் தலையோடு வீட்டுக்குப் போனாள். அம்மாவிடம் நடந்ததைச் சொன்னாள். இது அண்டை அயல் வீடுகளுக்கும் தெரிந்தது. அவர்கள் வியப்பு அடைந்தார்கள். "நீ பலே கெட்டிக்காரி. உன் தலைமயிரை வெட்ட பாபுவையே பிடித்து விட்டாயே, அம்மா!" என்றார்கள் அவர்கள்.

—தேவி

## மனம் போல....!




## திராவிடர் யார்?

பிராமணர்கள் உள்படத் தென்னகத்திலுள்ள அனைவரும் திராவிடர்களே. இந்தக் கருத்துக்கு ஆதாரமாக ஸ்மிருதிகளிலிருந்து எண்ணற்ற ஆதாரங்களை மேற்கோள் காட்டலாம்.

தென்னகத்து மக்கள் பஞ்சதிராவிடர்கள் என்று அழைக்கப்பட்டு வந்தனர். எல்லா சாதியினரும் தான் இப்படி குறிப்பிடப்பட்டு வந்தனர். சரித்திரபூர்வமான காரணங்களினால் அவர்கள் இடம் பெயர வேண்டி வந்த போதும் அவர்கள் ஒன்று சேர்ந்தே இடம் பெயர்ந்து வந்தனர். அடிப்படை ஒற்றுமையைப் பேணி வளர்த்து வந்தனர்.

இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால் திராவிடநாடு என்று அழைக்கப்படும் தட்சிணப் பிரதேசம் எல்லா சாதியினருக்கும் சொந்தமானது தான்.

இப்படிச் சொன்னவர்: ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகள். (ஆதாரம்: தினமணி 30-1-61)

## ஒரு பத்திரிகையின் விலை ரூ. 105

கம்யூனிஸ நாடுகளான ருஷ்யாவிலும், போலந்திலும், அண்மையில் வெளியாகி இருபத்திநான்கு மணி நேரத்துக்குள் 95,000 பிரதிகள் விற்பனையான ஒரு பத்திரிகையின் பெயர்:

''அமெரிக்கா!''

கலாசாரப் பரிவர்த்தனைத் திட்டத்தின் கீழ் ருஷ்யா தனது ''சோவியத் நாடு'' ஆங்கிலப் பதிப்பை அமெரிக்காவில் விநியோகிக்கவும், அமெரிக்கா தனது சஞ்சிகையான ''அமெரிக்கா''வை ருஷ்யாவில் விற்கவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ருஷ்யாவில் ஏழு வருடமாகவும், போலந்தில் இரண்டாண்டுகளாகவும் ''அமெரிக்கா'' விற்பனையாகிறது.

சில மாதங்களுக்கு முன்பு ''அமெரிக்கா'' அமரர் கென்னடியைப் பற்றி விசேஷ மலர் ஒன்று வெளியிட்டது. கென்னடியின் முழு சரிதமும், பிரபல புகைப்படக் கலைஞர் கார்ஷ் அப் ஒட்டாவா எடுத்த பல அரிய புகைப்படங்களும் அதில் வெளியாகியிருந்தன. ஜாக்குலின் கென்னடி தன் புதல்வன் ஜானுடன் கடற்கரையில் அமர்ந்திருக்கும் போட்டோ நான்கு வர்ணங்களில் அட்டைப் படமாகத் திகழ்ந்தது. இந்நினைவு மலருக்காகத் தான் அப்படி ஓர் அமோக வரவேற்பு!

பத்திரிகை விற்பனையில் இந்த மலர் ஒரு ரிகார்டையே ஏற்படுத்தியிருக்கிறது. அதன் விலை என்னவோ குறைச்சல். ஆனால், 'பிளாக்கில்' விற்ற விலை சுமார் 21 டாலர்--ரூ. 105!

தகவல்: பா. கண்ணன்

காரின் முன்பக்க விளக்குக்கு மஞ்சள் கண்ணாடி இருந்தால் பனிப் படலத்தை ஊடுருவும் என்பது உண்மையா?

உண்மையல்ல. ஆனால் மஞ்சள் நிறக் கண்ணாடி



போடுவதனால் மற்றொரு தன்மை உண்டு. மஞ்சள் நிறக் கண்ணாடி வழியே செல்லும் சிவப்பு, நீல நிற ஒளிக் கதிர்கள் இழுத்துக் கொள்ளப்பட்டுவிடும். இதனால் எதிரே வரும் காரோட்டியின் கண் கூசாது.

❀ ❀ ❀

வௌவாலுக்கு இரவில் கண் தெரியுமா?

தெரியாது. வௌவால் நம்மால் கேட்க இயலாத சப்தத்தை எழுப்புகிறது. அதற்கு எதிரொலி கேட்கா




விட்டால், எதிரே ஒன்றுமில்லை என அனுமானித்துப் பறக்கிறது. இப்படித்தான் வௌவால் இரவில் பறக்கிறது.




## வானம் ஏன் நீலமாயிருக்கிறது?

சூரியனிலிருந்து வரும் ஒளியில் ஏழு வண்ணங்கள் உள்ளன. சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் உள்ள காற்றில் தூசுகள் மிதக்கின்றன. இவை ஊதா, நீல நிறக் கதிர்களை விட்டுவிட்டு மற்றவைகளைக் கிரகித்துக் கொள்வதால் வானம் நீலமாயுள்ளது.

❀ ❀ ❀

ஒலியினால் ஆடைகளைச் சலவை செய்ய முடியும் என்பது உண்மையா? எப்படி?

உண்மை. நம் காதுகளால் கேட்க முடியாத ஒலி உள்ளது. இதைக் 'கேளாத ஒலி' என்று கூறுவர். இந்த வகை ஒலியை அழுக்குத் துணிகளின் மீது பாய்ச்சினால் அழுக்கு தானே உதிர்ந்து விடுகிறது. எனவே ஒலியினால் சலவை செய்ய முடியும் என்பது உண்மையே.



## இரத்த தானம்

இரத்தத்தை மற்றவருக்குச் செலுத்துகையில் எந்தவகை இரத்தம் யாருக்குத் தீங்கு தராது?

இரத்தத்தில் ஏ, பி, ஏபி, ஓ, ரீசஸ் என ஐவகை உண்டு. இதில் 'ஓ' வகை ரத்தம் எல்லோருக்



கும் ஏற்றது. ஆனால் மற்றவை அந்தந்தப் பிரிவுள்ளவர்க்கு மட்டுமே ஏற்றது. மாறினால் சாவு நிச்சயம்.

## பாலும் நீரும்!

பால்களில் யானைப் பாலே சிறந்தது. அதில் நீர் குறைவாகவும், வெண்ணெய் சர்க்கரை அதிகமாகவும் இருக்கிறது.

குளிப்பதை 'பாத்' என்று ஆங்கிலத்தில் சொல்கிறோமல்லவா? இதற்குத் துக்கத்தை மனத்திலிருந்து விரட்டுதல் என்று பொருள்படும். இது கிரேக்க மொழியிலிருந்து வந்தது.

## எடை மாறுபாடு!

எடையைக் குறைக்கச் சாப்பாட்டைக் குறைத்தும், எடை குறைக்கும் மருந்துகளைச் சாப்பிட்டும், தண்டால், பஸ்கி போட்டும் அவஸ்தைப்பட வேண்டாம். ராக்கெட்டில் ஏறிச் சந்திர மண்டலத்துக்குப் போய்விட்டால் எடை தன்னால் குறைந்துவிடும்! பூமியில் 200 பவுண்டு எடை உள்ளவன் சந்திரனில் 34 பவுண்டுதான் இருப்பான். அப்படியே அவன்



சூரியன் பக்கத்தில் வாழ முடியும் என்று வைத்துக் கொண்டால் அங்கு அவன் எடை: 5580 பவுண்டுகள்.

| | | |
|---|---|---|
| புதன் கிரகத்தில்: | 58 | ,, |
| சுக்கிரனில்: | 172 | ,, |
| அங்காரகனில்: | 74 | ,, |
| குருவில்: | 528 | ,, |
| சனியில் | 234 | ,, |
| யுரேனஸில்: | 182 | ,, |
| நெப்டியூனில்: | 226 | ,, |
| புளூட்டோவில்: | 100 | ,, |

தகவல் : **சரவணன்**

# B·I



# S. S. ரஜுலா

**சென்னையிலிருந்து**

1965 அக்டோபர் 16          1965 நவம்பர் 9

*சென்னையிலிருந்து பினங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.*

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7. அரமனைக்காரத் தெரு. சென்னை -1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம்
பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

| | |
|---|---|
| **C. M. குட்டி.** | **மெஸர்ஸ் கோஸா டிராவல்ஸ்** |
| புரொப்ரைட்டர் குட்டி டிராவல் சர்வீஸ் | மாஸ்காட் ஹோட்டல் |
| 38, அங்கப்ப நாயக்கன் தெரு | திருவனந்தபுரம் |
| சென்னை -1 | |

**நாகப்பட்டினத்திலிருந்து**

1965 அக்டோபர் 17          1965 நவம்பர் 10

நாகப்பட்டினத்திலிருந்து பினங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்.

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

| | |
|---|---|
| **பின்னி & கம்பெனி லிமிடெட்** | **மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.** |
| 7. அரமனைக்காரத் தெரு. சென்னை-1 | முதல் லேன் பீச் ரோடு. நாகப்பட்டினம் |

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்




சிலர் கிழக்கே போக வேண்டும் என்ற எண்ணத்துடன் புறப்படுவார்கள். ஆனால் உண்மையில் மேற்கு நோக்கிப் போய்விட்டுப் பிறகு திரும்பிச் சரியாகக் கிழக்கு நோக்கிப் போவார்கள் ! இது மனத்தின் இயல்பு !

அதனால்தான் நல்ல நீதிகளைப் போதிக்க வேண்டுமென்றும், நீதிகளை அப்படியே சொல்வதில்லை. ஏதோ ராஜா ராணிக் கதை சொல்வது போலும் நரி சிங்கம் பற்றிய கதை சொல்வது போலும் சொல்லி, நீதியைத் தெளிவாக விளக்காமல், கூடமாகப் புரிந்து கொள்ளும்படியும் ரஸிக்கும்படியும் விட்டு விடுவது ஆதிநாளிலிருந்து கடைப்பிடித்து வரும் ஒரு யுக்தி.

அந்த யுக்தியில் கைதேர்ந்தவர்கள் சோவியத் நாட்டினர்.

சோவியத் நாட்டினர் தங்கள் கம்யூனிஸத்தைப் பற்றியோ, தங்கள் ஆட்சி முறையைப் பற்றியோ பேசுவதே இல்லை. ஆயினும், அவர்கள் ஆசிய நாடுகளில், சிந்திக்கும் திறம் படைத்தவர்களை, கலைஞர்களை, எழுத்தாளர்களையெல்லாம் மிகச் சாமர்த்தியமாகத் தங்கள் வசமாக்கிக் கொள்கிறார்கள். எழுத்தாளர்களைப் பாராட்டுவது, அவர்கள் மொழிபெயர்ப்புக்களைப் பிரசுரிப்பது, தங்கள் நாட்டில் சுற்றுப் பிரயாணங்கள் செய்யக் கலைஞர்களுக்கு வசதி செய்து தருவது ஆகிய வற்றின் மூலம், மிக நுட்பமாக மனத்தில் கம்யூனிஸத்தை நுழைத்து விடுகிறார்கள். ''கலாசாரப் பரிவர்த்தனை'' என்ற பரந்த தலைப்பில் சிந்திக்கும் திறம் படைத்தவர்களிடையே மன மாற்றம் ஏற்பட்டு விடுகிறது. பிறகு அவர்கள் தங்கள் நாட்டில் சொந்த மொழியில் எழுதும் புத்தகங்கள், எடுக்கும் படங்கள், நிகழ்த்தும் உரைகள் யாவும் கம்யூனிஸச் சாயலுடன் வெளிவருகின்றன! அவற்றைப் படிக்கும், பார்க்கும், கேட்கும் கோடானு கோடி பாமர மக்களிடையே கம்யூனிஸக் கருத்து சுலபமாகப் பரவுகிறது. முதலில் புத்தியைக் கொண்டு வாழ்க்கை நடத்துபவர்களை வெற்றி கொண்டபின், கம்யூனிஸப் பிரசாரத்துக்குத் தங்கு தடையே இருப்பதில்லை !

மேற்கண்ட சிந்தனைகள் தாம் சென்ற சென்னை சினிமா ரஸிகர்கள் சங்கக் கூட்டத்தின் சார்பில் நான்கு நாட்கள் நடைபெற்ற சோவியத் திரைப்பட விழாவுக்குச் சென்றபோது ஏற்பட்டன !

தொடக்க விழாவன்று, 'பெண்கள்' என்று ஒரு படம் காண்பித்தார்கள். அது தான் எவ்வளவு நன்றாக இருந்தது.

காட்டில் மரங்களை வெட்டும் வேலை நடக்கிறது. பல ஆட்கள் வேலை செய்கிறார்கள். அவர்களுக்கு உணவு சமைத்துப் போட ஒரு சமையல் வீடு உண்டு. அங்கு பெண்கள் தான் வேலை செய்கிறார்கள். அங்கு ஒரு பெண் புதிதாக வேலைக்கு வந்து சேருகிறாள். அவள் அப்போதுதான் பள்ளியில் சமையல் கலை படித்துத் தேறி வேலைக்கு வந்திருக்கிறாள். அவளுக்குக் காதல் என்றால் என்ன என்று தெரியாத பருவம். அப்படிப்பட்டவள் காதல் உணர்ச்சிக்கு வயப்பட்டும், அவளை எச்சரிக்கை செய்யும் மற்றப் பெண்களிடையே சிக்கியும் படும் தொல்லைகள் எவ்வளவு நன்றாக, நகைச்சுவை ததும்ப, உண்மைக்கு மாறுபடாமல் படமாக்கப்பட்டிருக்கிறது என்கிறீர்கள். ஒரு பட்டிக்காட்டு இந்தியப் பெண்ணின் அச்சம், நாணம் 'மடம்' பயிர்ப்பு ஆகிய குணங்கள் பொருந்திய பெண்ணின் வாழ்க்கையைப் பார்ப்பதுபோலவே இருந்தது.

ஷேக்ஸ்பியர் பிரிட்டிஷ் நாட்டு நாடகக் கவிஞன். அவன் எழுதிய அற்புத சோக நாடகம் ''ஒதெல்லோ''. இதுவரையில் பிரிட்டிஷாரே இவ்வளவு நன்றாக இந்த நாடகத்தை மேடையில் நடித்தோ, திரைப்படமாக்கியோ இருக்க முடியாது என்று சொல்லும்படியாக எடுத்திருக்கிறார்கள் ! ஷேக்ஸ்பியரின் வசனங்கள் ஓடிக் கொண்டிருக்கும் படத்தின் மீது வரும்போது வசனத்தின் சிறப்பை அநுபவிப்பதா, நடிப்பை ரஸிப்பதா என்று மயங்கும்படி ஒன்றையொன்று போட்டி போடுகின்றன.

''வசந்த கால உறைபனி!'' என்ற பெயரிலே வார்த்தைகள் ஒன்றுக்கு ஒன்று பொருத்தமில்லாமல் இருக்கிறது. ஆனால் கதைக்குத் தலைப்பு ரொம்பவும் பொருத்தம் தான் ! ஆம், இளமை துடிக்கும் அவனைக் காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ள இருந்த கட்டினம் மங்கை, பல்லுப் போன தொண்டு கிழத்தைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள நேர்ந்தால் வசந்தகாலத்தில் தோன்றிய உறைபனி மாதிரிதானே ? — கிராமத்து ஏழை விவசாய மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு புனையப்பட்ட பலப் பல நிகழ்ச்சித் திருப்பங்களுடனும், உணர்ச்சித் திருப்பங்களுடனும் மிக அழகாகப் படம் ஓடுகிறது. மிக அருமையான படம்! இந்திய நாட்டு வாழ்க்கையைப் பிரதிபலிப்பது போன்ற உணர்ச்சி எழுகிறது.

இவை தவிர ருஷ்ய, 'பாலே' நடன நாடகமாக ''லைலா மஜ்னு'' கதை காட்டப்பட்டது. ஸர்க்கஸ் பள்ளியில் எப்படி ருஷ்யச் சிறுவர்கள் சிறுமிகளுக்குப் பயிற்சியளிக்கிறார்கள் என்ற துணுக்கையும் காட்டினார்கள். நமது ராஷ்டிரபதியின் ருஷ்ய விஜயத்தையும் காண்பித்தார்கள்.

இச்செய்தித் துணுக்குகளும், டாக்குமெண்டரிப் படங்களும் சில நீளமாகவும் தலைவலியூட்டுவனவாகவும் இருந்தன. எனினும், முக்கியமான கதைப் படங்கள் தரமாக ரஸிகர்களுக்குத் திருப்தியளிக்கும் வகையில் இருந்தன !

காலம் பறக்கிறது... ஆயினும் அவள் எழில் நிலைக்கிறது





திரைப் படங்கள் பார்ப்பதில் மாணவர்கள் அதிக கவனம் செலுத்துவது நல்லதல்ல.

‘**வர வரக் கெட்டுப் போச்சு — வழக்கமில்**லாதபடி செய்துவிட்டான்’ என்ற நந்தன் சரித்திரப் பாட்டுத்தான் இந்தக் காலத்தில் பையன்களைப் பார்க்கிறபோது நினைவுக்கு வருகிறது. சினிமாப் படம் பார்க்கிற வகையிலே இவங்க கெட்டுப் போகிறது இந்த அளவு, அந்த அளவு என்று சொல்ல முடியாமல் மீறிப் போய்விட்டது.

பெற்றவர்கள் கஷ்டப்பட்டு, சிரமப்பட்டுப் பிள்ளைகள் முன்னுக்கு வரணும் என்ற ஆசையில் படிக்க வைக்கிறார்கள்; காலேஜுக்கு அனுப்புகிறார்கள். பையன் எங்கே ஆசையோடே முன்னுக்குப் போகிறான் என்றால் சினிமாக் கொட்டகை வாசலில் டிக்கட் கொடுக்கும் இடத்தை நோக்கித்தான். அந்தக் கியூவிலே நின்று ஒவ்வோர் அடியாக முன்னேறுவதிலே அவர்களுக்கு இருக்கிற ஊக்கத்திலே நூற்றிலே ஒரு மடங்கைப் படிப்பிலே காண்பித்தால்கூட அவங்க ரிசல்ட்டுகளைப் பார்க்காமலே மேல் வகுப்புகளில் போய் உட்கார்ந்து கொள்ளலாம். மார்க்குகள் தன்னாலே வரும்! இப்போ தானாக வருவதெல்லாம் என்ன தெரியுமோ? ‘குமரிப் பெண்ணின் உள்ளத்திலே குடியிருக்க நான் வரவேண்டும்!’ என்ற பாட்டு!

அவனவன் குடியிருக்கிற வீட்டுக்கு மாசா மாசம் ஒழுங்காக மானமாக வாடகையைக் கொடுத்துக் காலட்சேபம் நடத்த வேண்டுமே என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறான். காலேஜிலே செலவழிக்கிற நேரத்துக்குச் சமமான நேரத்தைச் சினிமாக் கொட்டகையில் செலவழிக்க வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் இந்தத் துரை குமரிப் பெண்ணின் உள்ளத்திலே குடியிருக்க இடம் தேடுகிறாராம்! என்ன சினிமா! என்ன பாட்டு! என்ன பொருத்தம்! எனக்கு வயிற்றைப் புரட்டிக் கொண்டு வருகிறது. அவர்களுக்கோ...? ரசகுல்லா சாப்பிடுவது போலிருக்கிறது!

எங்க காலத்திலே படிக்கிற பையன்கள் நாடகம், சினிமா பார்ப்பது ஒரு குற்றமாகவே நினைக்கப்பட்டது. அந்த நேரத்தையும் அவர்கள் கல்விக்காகச் செலவழிக்க வேண்டுமென்ற தாத்பர்யம்தான். எப்போதாவது ஒன்று இரண்டு படம் பார்ப்போம். நடிகர்களின் பெருமைக்காகவோ, பாட்டுக்களின் புகழுக்காகவோ இல்லை. கதையில் லயித்துப் பிரமிக்க! இப்போதுதான் காலம் மாறிப் போச்சே!

காலேஜிலே இன்னிக்கு ஒரு பாடத்திலே பரீட்சை என்றால் அதற்குப் படிக்க வேண்டுமே என்ற கவலையோ பயமோ துளியத்தனை இருக்க வேண்டுமே! ஊஹூம். அன்றைக்கு அந்த நேரத்திலே தன் அபிமான நட்சத்திரம் நடித்து ரிலீசாகும் புதுப் படத்தின் முதல் காட்சியைப் பார்க்க எப்படி டிக்கட் வாங்குவது என்பதுதான் கவலை! அந்தக் காட்சியில் இடம் பிடித்து உட்காராது போனால் மண்டை வெடித்து விடும். வயிற்றெரிச்சல் தாங்காது ஏதாவது கண்டிப்போமென்ற எண்ணத்தில் இரண்டு வார்த்தைகள் சொன்னால் துளி ரோஷம் வரவேண்டுமே! ‘நான் ஆணையிட்டால் அது நடந்துவிட்டால்’ என்று பாடிக்கொண்டு மாடிக்குப் போகிறான். உலகத்திலிருந்து பரீட்சையே ஒழிந்துவிட வேண்டும் என்று ஆணையிட்டு விடுவதாக அவன் எண்ணம்!

ஏதோ மாதத்தில் ஒருதடவை, இரண்டு தடவை விடுமுறை நாட்களில் திரைப்படம் பார்க்கட்டும். வேண்டாமென்று சொல்லவில்லை. பொழுதுபோக்கு என்று இருந்து விடலாம்! ஆனால் மாதத்தில் ஒரு நாள் சினிமாவுக்குப் போகாமலிருப்பது. போய் விட்டு வந்து குறளுக்குப் பரிமேலழகர் உரை எழுதினாற்போல் நாலு பேர்களை அழைத்து வைத்துக்கொண்டு பார்த்த படத்துக்கு விளக்கம் கொடுப்பது. அந்த நடிகன் மாதிரி பேசுவது, குதிப்பது, சுவரில் கிடைத்த இடங்களில் எல்லாம் கதாநாயகிகளின் படத்தை ஒட்டிவைப்பது, அவைகளைப் பார்த்துக் கொண்டு ‘அவனுக்கென்ன அழகிய முகம் இவனுக்கென்ன பழகிய முகம்’ என்று பாடிக் கொண்டு பொழுதைப் போக்குவது. கடைசியில் பரீட்சைகளில் பூரணமாகக் ‘கோட்’ அடிப்பது என்ற நிலைகளைப் பார்க்கிறபோது இந்த சினிமாப் பைத்தியத்தைப் போக்க மருந்தே கிடையாதா என்றுதான் பயப்படத் தோன்றுகிறது.

இந்தச் சினிமாப் பைத்தியம் மாணவர்களைக் குட்டிச்சுவராகத்தான் அடிக்கிறது. கவனமெல்லாம் இந்த வழியில் திரும்புவதால் கல்வியின் தரம் குறைகிறது. நாளை உத்தியோகம் தேடி அலையும்போது படிப்பின் தரத்தைத்தான் பார்ப்பார்களே தவிர எத்தனை தரம் குறிப்பிட்ட சினிமாப் படத்தைப் பார்த்தாய் என்று கேட்டு மகிழ மாட்டார்களே! **இவர்களுக்குப் புத்தி எப்படி வரப் போகிறதோ?**

# சிக்கல்கள்



சுட்டிக்காட்டுபவர் : எஸ். திருவரங்க முதலியார், திருவல்லிக்கேணி

மறுப்பவர் : திரு எஸ். ராஜரத்தினம், சட்டக் கல்லூரி மாணவர்

நந்தனார் காலம் வேறு! நம்ப காலம் வேறு! இரண்டுக்கும் இடையிலே எத்தனையோ வளர்ச்சி, வித்தியாசம். திரைப்படம் இன்றைய நாகரிகத்தின் சின்னம். அதோடு அறிவு வளர்ச்சியின் சின்னம் என்றுகூடச் சொல்வேன். மாணவர்களின் குறிக்கோள் அறிவை வளர்த்துக் கொள்வதுதானே! புத்தகங்களிலிருந்தும், ஆசிரியர்களின் போதனைகளிலிருந்தும் மாத்திரம்தான் அதைச் செய்ய வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் கிடையாது.

இன்றைய சினிமா ஒரு கலைப் பூங்கா! கலை நுணுக்கங்கள் என்ற பல்வேறு ரம்யமான மலர்கள் பூத்துக் குலுங்கும் ஒரு மலர் வனம். ஒரு திரைப் படம் பார்த்துவிட்டு வெளியே வரும்போது கற்பனை விசாலமடைகிறது. கண் கவரும் காட்சிகள், காதுகளுக்கினிய ஒலி, கருத்தை இயக்கும் வசனம், கவனத்தை ஈர்க்கும் நடிப்பு எல்லாம் சேர்ந்து நம்முடைய இரசனைவுத் தன்மையைத் தெளிவுறச் செய்கிறது. இந்த இன்பம் ஒரு 'கால்குலஸ்' வகுப்பிலிருந்தோ 'பொருளாதார' வகுப்பிலிருந்தோ வெளிவரும்போது உள்ளத்தில் நிலவுமா? பெரியவர்கள் பதில் சொல்லட்டும்.

'அந்தக் காலத்தில்' என்ற பாட்டை அவர்கள் அடிக்கடி சொல்வதில் பயன் ஒன்றும் இல்லை. இன்று மாதிரி அந்தக் காலத்தில் திரைப் படங்கள் வந்ததில்லை. அவ்வளவுதான்! இருந்திருந்தால் அவர்களும் நிறையப் பார்த்துத்தானிருப்பார்கள். வள்ளுவர் காலத்தில் டிரான்ஸ்போர்ட் பஸ் இல்லை என்ற காரணத்துக்காக இன்றும் அவர்கள் மயிலாப்பூருக்கும் திருவொற்றியூருக்கும் இடையே நடந்தா போகிறார்கள்? கால வளர்ச்சியைப் புரிந்து கொள்ள வேண்டாமா?

'பூம்புகாரை'ப் பார்த்து வந்து அந்தக் காட்சிகளை மனத்தில் பதித்துக் கொண்டு, 'திரைக்கதை எங்கெல்லாம் மூலத்தை விட்டு மாறியிருக்கிறது' என்று நான்கு நண்பர்களோடு விவாதிக்கும்போதுதானே நமக்கு இளங்கோவின் செம்மையும் இலகுவாக மனத்திலாக்கிக் கொள்ள முடிகிறது? கல்வி வளர்ச்சிக்குத் திரைப் படம் பாதகம் செய்கிறது என்று இதிலிருந்து சொல்ல முடியுமா?

'பெக்கெட்டை'ப் பார்த்துவிட்டுத் திரும்பும்போது சரித்திர கால இங்கிலாந்திலிருந்து திரும்பும் உணர்ச்சிதான் ஏற்படுகிறது. எத்தகைய உன்னதமான நடிப்பு. பீட்டர் ஓடும் பின்னாலேயே நம் சிந்தனையும் ஓடிவிடுகிறது.

இப்படிச் சுவையான விஷயங்களைப் பற்றி நான்கு நண்பர்களுடன் பேசி மகிழும்போதுதான் ரசனை ஏற்படுகிறது; மனித சுபாவத்தின் பரந்த தன்மை புரிகிறது. சினிமாப் பார்த்துவிட்டு வருவது என்ன மௌனமாக விரதம் ஏதும் அனுஷ்டித்துவிட்டு வருவதா?

இன்றைக்கு நமக்குக் கிடைக்கும் சிறந்த பொழுதுபோக்குச் சாதனம் சினிமா. உழைத்துக் களைத்துப் போவோர்களுக்கு மாத்திரம் அது பொழுது போக்கல்ல. ஓயாமல் படித்து மூளையைக் குழப்பிக் கொள்ளும் மாணவர்களுக்கும் அது ஒரு பயனுள்ள சாதனம்தான். ஒரு பரீட்சைக்கும் மற்றொரு பரீட்சைக்கும் இடையே இரண்டு மூன்று நாட்கள் இருந்தால் ஒழியப் பரீட்சைகளுக்கான பாடங்களை மறந்து புதுப் பரீட்சைக்குக் கவனத்தைத் திருப்ப நான் திரைப் படம் பார்ப்பதை உபயோகித்துக்கொள்கிறேன். அது மாத்திரமல்ல! 'அடடா! இந்த நேரத்தை வெட்டியாக்கி விட்டோமோ?' என்ற ஒருவித அச்சம் தோன்றும்போது அடுத்த பரீட்சைக்கான பாடங்களில் அதிகமாகவே அக்கறை எடுத்துக் கொள்கிறேன். அந்த அச்சம் படிக்கத் தூண்டுகிறது. அந்த அச்சத்தைத் திரைப் படம் பார்ப்பது தோற்றுவிக்கிறது. நான் சட்டம் படிக்கும் மாணவனாக இருப்பதால் விதண்டாவாதத்துக்காகச் சொல்கிறேன் என்று நினைக்க வேண்டாம். அனுபவபூர்வமான உண்மை!

மாணவர்கள் பாடுகிறார்கள், நடிகர்களைப் போல நீட்டி முழக்கிப் பேசுகிறார்கள் என்றால் அதைக் குறையாக நினைக்க வேண்டிய அவசியமே இல்லையே! அவர்களுள் முடங்கியிருக்கும் நுண்கலை உணர்ச்சிகளை வெளியே அவ்வளவா இழுத்து விடுகிறது! அந்த உணர்ச்சிகளே பிற்காலத்தில் வளர்ந்து புகழ் கொடுக்கலாமே! படங்கள் ஓட்டுவது வயசின் வேகம்! தானே தணிந்துவிடும் அந்தத் தாபம்! இதைப் பெரிதுபடுத்திக் கூறுகிறீர்களே? அந்தோ பரிதாபம்!

திரைப் படங்கள் பார்ப்பது மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்குப் பாதகமாகத் திகழ்கிறது என்று நான் ஒருகாலும் ஒப்புக் கொள்ள மாட்டேன். அதற்கு மருந்து தேட வேண்டிய அவசியமுமில்லை! அவர்கள் கலை உணர்ச்சிக்கும், ஏன், அறிவு வளர்ச்சிக்கும் கூடத்தான் அது ஒரு டானிக்!

# "ரெக்கரிங்" டெபாஸிட்டில்

# அக்கறை காட்டுகிறீர்களா?

உங்களுக்கு அதிக வட்டி அளிப்பதிலே நாங்கள் அக்கறை கொண்டிருக்கிறோம். தற்போது புது வழி யொன்றை கண்டு பிடித்திருக்கிறோம். "ரெக்கரிங்" டெபாஸிட் என்றால் ஒவ்வொரு மாதமும் ரூ. 10லிருந்து ரூ. 1000 வரை உங்கள் இஷ்டம்போல் 30, 40, 50 அல்லது 60 மாதங்களுக்கு எங்களிடம் டெபாஸிட்டு செய்யலாம். கால வரம்பு முடிந்ததும் நீங்கள் டெபாஸிட்டு செய்த பணத்தையும், 6¼ சத விகிதம் வரை வட்டியும் சேர்த்து கொடுக்கிறோம். கீழ்க்கண்ட அட்டவணையைக் கவனியுங்கள். உங்களுடைய மாதச் சேமிப்பின்மீது நாங்கள் எவ்வளவு வட்டி கொடுக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். குறைந்த தவணைகளுடன் அதிக வட்டியை நாங்கள் அளிக்கிறோம்.

**திருப்பி அளிக்கப்பட வேண்டிய மொத்தத் தொகை**

| மாதாந்திர தவணைத் தொகை ரூ. | 30 தவணைகளில் சேரும் தொகை ரூ. | 40 தவணைகளில் சேரும் தொகை ரூ. | 50 தவணைகளில் சேரும் தொகை ரூ. | 60 தவணைகளில் சேரும் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 10 | 323 | 443 | 568 | 709 |
| 20 | 646 | 886 | 1,136 | 1,418 |
| 30 | 969 | 1,329 | 1,704 | 2,127 |
| 40 | 1,292 | 1,772 | 2,272 | 2,836 |
| 50 | 1,615 | 2,215 | 2,840 | 3,545 |
| 60 | 1,938 | 2,658 | 3,408 | 4,254 |
| 70 | 2,261 | 3,101 | 3,976 | 4,963 |
| 80 | 2,584 | 3,544 | 4,544 | 5,672 |
| 90 | 2,907 | 3,987 | 5,112 | 6,381 |
| 100 | 3,230 | 4,430 | 5,680 | 7,090 |

மேற்கொண்டு விவரங்களுக்கு இன்றே வந்து விசாரிக்கவும் :

# தி சென்ட்ரல் பாங்க்

ஆப் இந்தியா லிமிடெட்

பதிவுக் காரியாலயம் : மகாத்மா காந்தி ரோடு, போர்ட், பம்பாய்-1

F. C. கூப்பர், ஜெனரல் மானேஜர்

CBI-26-65

# காலத்தினாற் செய்த உதவி

## தி.சா.ராஜு

பெரிய முதலாளி ரத்தினம் பிள்ளை தம்முடைய கணபதிநகர்ப் பங்களாவின் நடுக்கூடத்தை அடுத்த முன் அறையில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். அந்த அறையில் எல்லாப் பொருள்களும் கவர்ச்சிகரமாகவும் ஒழுங்காகவும் வைக்கப்பட்டிருந்தன. கிழ்ப்புறத்து மூலையில் மரக்கட்டில் கிடந்தது. அதில் அவருடைய மெத்தை சுருட்டி வைக்கப்பட்டிருந்தது. பக்கத்தில் ஒரு சிறிய மேஜை. அதன் மேல் ஒரு துணி விரிப்பு. மேஜையின் நடுவில் ஒரு பழைய நாளைய பஸ்ஸின் மர உருவம். இருபது பிரயாணிகள் எதிரும் புதிருமாக அமர்ந்து செல்லக் கூடிய பஸ்ஸின் பொம்மை அது. அதில் டி. ஏ. என். 555 என்ற எண்கள் பளபளத்தன. அதற்குப் பக்கத்தில் மூன்று சிறு புத்தகங்கள். புனிதச் சிலுவை உருவத்தின் சிறிய மாதிரி ஒன்றில் படிக ஜபமாலை ஒன்று தொங்கியது. பிள்ளை வாடிகன் நகருக்குச் சென்றிருந்த போது போப்பாண்டவர் அவருக்குத் தந்த அன்பளிப்பு அது. ஒரு குறிப்பு நோட்டும் பென்சிலும் கூட மேஜையின் மேலேயே இருந்தன.




இளம் பச்சை வர்ணம் அடித்த சுவரில் ஒரே ஒரு இயேசுவின் படம். மைக்கேல் ஆஞ்சலோ வரைந்த ஓவியத்தின் பிரதி அது. பெருமான் தம் கையில் உலக உருண்டையைத் தாங்கியிருந்தார்.

ரத்தினம் பிள்ளை தம் அறையில் நாற்காலியில் உட்கார்ந்திருந்த போதிலும் அவருடைய கவனம் முழுவதும் நடுக் கூடத்தில் நடக்கும் உரையாடலைச் சுற்றியே யிருந்தது. அங்கே அவருடைய மகன் மோஸஸ், வக்கீல் செல்வராஜ், அவருடைய குமாஸ்தா அந்தோணி மூவரும் அமர்ந்திருந்தனர். நடுவில் மேஜை மேலிருந்தவை அனைத்தும் பழைய தஸ்தாவேஜுகள், ஸ்டாம்பு காகிதம்.

''கோர்ட்டில்தான் நமக்குச் சாதகமாகத் தீர்ப்பாகியிருக்கிறதே, நாம் ஏன் சந்திரனுடைய சாமான்களை யெல்லாம் எடுத்து வெளியில் எறிந்து விட்டு, தர்வானிடம் சொல்லி அவனுடைய காரை நிறுத்தச் சொல்லக் கூடாது?' மோஸஸ் பதற்றத்துடன் கேட்டான். அவனுடைய முகத்தில் அமைதியின்மை பிரதிபலித்தது.

வழக்கறிஞர் மோஸஸை எதிட்டு நோக்கினார்: ''இவ்வளவு படபடப்புத் தேவையில்லை, சின்ன முதலாளி. நாற்பது வருடங்களாய்த் தொடர்ந்து வருகிற ஓர் உறவை இவ்வளவு மனக் கசப்போடு முறித்து எறியணுமா? முதலில் நோட்டீஸ் கொடுப்போம். பிறகு தவணை தருவோம். ஆகக்கூடி அவரும் சட்டத்துக்கும் நியாயத்துக்கும் கட்டுப்பட்டவர்தானே!''

''அதிலே ஓர் அபாயம் இருக்கிறது வக்கீல் சார். நிலைமை இதே மாதிரி நீடித்திருந்தால் அவன் ஸுப்ரீம் கோர்ட்டிலே ரிட் மனுவைத் தாக்கல் செய்து விடுவான். அங்கே தீர்ப்புக் கிடைப்பதற்கு வருஷம் மூணாகலாம். அது வரை அவனும் டைரக்டர் என்ற பெயரை வைத்துக் கொண்டு ஆபீஸ் காம்பவுண்டுக்குள் பயமில்லாமல் வளைய வருவான். அதை என்னால் பொறுக்க முடியாது.''

''சிறுபிள்ளைத்தனமாகப் பேசுகிறீர்கள், மோஸஸ்!'' தம் கழுத்துடையைச் சரி செய்தவாறே கூறினார் செல்வராஜ். ''சந்திரனுக்கு ஆதரவு தரக்கூடிய பல உழைப்பாளிகள் அங்கு இருக்கத்தான் செய்வார்கள். நாம் அவனை வலுக்கட்டாயமாக அப்புறப்படுத்தப் போய் வழக்கு கிரிமினல் உருவம் எடுத்தால் என்ன ஆகும்? யோசித்துப் பாருங்கள். இந்த விவகாரம் முள்ளின் மேல் போட்ட துணிமாதிரி. கையும் காயமாகக் கூடாது.



நகமும் சதையுமாகப் பழகினார் முத்து அங்கரும், ரத்தினம் பிள்ளையும். இவர்கள் பிள்ளைகள் தலையெடுத்ததும் இந்த விபரீதம் ஏற்படுமென்று யாருமே எதிர்பார்க்கவில்லை. காலத்தினால் செய்த உதவியை ரத்தினம் பிள்ளையின் மகன் மோஸஸ் மறந்தது எத்தகைய பேரிழப்புக்குக் காரணமாக அமைந்து விட்டது. இந்த நஷ்டம் ஈடு செய்ய முடியுமா? தி. கா. ராஜுவின் எளிமையான நடையிலே பழமைக்கும் புதுமைக்குமுள்ள வேற்றுமையைப் புரிந்து கொள்ள முடிகிறது.

துணியும் கிழியக் கூடாது. விவகாரத்தை என்னிடம் விட்டுவிடுங்கள்......சரி, உங்கள் கிரிக்கெட் கிளப் விஷயம் என்ன ஆயிற்று? வெஸ்ட் இண்டீஸ் டூர் தான் நிச்சயமாயிடுச்சே!'' பேச்சை வேறு திசைக்குத் திருப்பினார்.

கவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரம் இசையுடன் பத்தடித்து ஓய்ந்தது. பரபரப்புடன் எழுந்திருந்தார் வக்கீல். ''சரி, கோர்ட்டுக்கு நேரமாகி விட்டது. நான் வரட்டுமா?'' செல்வராஜ் புறப்பட்டார். காகிதக் கட்டுக்களைத் தோல் பையில் அடைத்தார் அந்தோணி. மோஸஸ் உடன் நடந்தான். போர்ட்டிகோ வரையில் வந்து வழி அனுப்பினான். காரில் ஏறி உட்கார்ந்த பிறகு தலையை வெளியே நீட்டினார் வக்கீல். ''என்னுடைய ஃபோன் நம்பர் மாறியிருக்கிறது. இருநூற்றுப் பத்து இல்லை. முந்நூற்று ஐந்து. இந்த வழக்கு விஷயமாக எனக்கு மேலும் அட்வைஸ் கொடுக்க விரும்பினால் மாலை மூன்று மணிக்கு மேல் ஃபோன் செய்யுங்கள்'' — பிளிமௌத் கார் சிமெண்ட் தரையில் வழுக்கிக் கொண்டு சென்றது. ரோஜாப் பாத்திகளை அடுத்து நடந்தான் மோஸஸ். அதையடுத்த கட்டாந்தரையில் சமாந்திர பார் இருந்தது. மரத்தின் மீதிருந்து தோலுறை போட்ட இரு இரும்பு வளையங்கள் தொங்கின. பார்க் கம்புகளைத் தடவிப் பார்த்துவிட்டு வீட்டுக்குத் திரும்பினான். தந்தையின் அறையை எட்டிப் பார்த்தான். அவர் கையில் ஒரு புத்தகத்துடன் உட்கார்ந்திருந்தார்.

மோஸஸ் பணிவுடன் அறையினுள் நுழைந்தான். ''நாங்கள் பேசியதை யெல்லாம் கேட்டுக்கிட்டுத்தானே இருந்தீக?'' என்று மெள்ள வினவினான்.

பெரியவர் தலையை அசைத்தார்.

''விவகாரம் முழுவதையும் வக்கீல் ஐயாவிடமே விட்டிருக்கிறேன். அவருக்கு இந்த விஷயங்களில் அநுபவம் மிகுதி.'' மகன் பேசுவதைக் கேட்க விரும்பாதவர் போல் ரத்தினம் பிள்ளை முகத்தை மூடிக் கொண்டார். தந்தையின் மன நிலை தெரிந்து மோஸஸும் பக்குவமாக எழுந்து வெளியேறினான்.

பிள்ளை தம் அறைச் சாளரத்தின் வழியாகப் பார்த்தபோது ஒரு பழைய செவர்லட் லாரி கலகலத்த சத்தத்துடன் நெடுஞ்சாலையில் செல்வது தெரிந்தது. அதன் பின்புறத்து மர உடல் முழுவதும் ஆடியது. டிரைவர் க்ளச்சை முழுதும் அழுத்தாமல் கியரை மாற்றினார். 'கர்ர்' என்று ஒலித்தது அவர் செவிக்கு நாராசமாக இருந்தது. இரண்டு விரல்களினால் அவர் செவிகளை நன்றாக மூடிக் கொண்டார்.

'இயந்திரங்களுக்கும் உயிர் இருக்கிறது. அவைகளைச் சிரத்தையோடு கையாளணும். உறுப்போடு உறுப்பு தோழன் மாதிரி இணையணும், இடையிலே ஃப்ரிக்ஷன்னு சொல்றது என்ன, நட்பின் கசிவுதானே! ரத்தினம்பிள்ளை இயந்திரத் தத்துவ சிந்தனையில் ஒட்ட வைத்து எண்ணிப் பார்த்தார். இந்த நெடுஞ்சாலை வழியாக ஒரு நாளைக்கு இருநூறு வண்டிகள் போகின்றன. வண்டிகளின் எண்ணிக்கை இப்போது நூறு மடங்கு அதிகமாகியிருக்கிறது. பெட்ரோல் எஞ்சின்களையெல்லாம் பிடுங்கிவிட்டு டீஸலைப் பொருத்திப்புட்டாங்க. பயன் என்ன? பாதிக்குமேல் டீஸல் நாத் கேக்குது. கல் ஏத்தற வண்டிக்கு டீஸல் ஃபிட் பண்ண வேண்டியதுதான். ஆனால் இலவ பருத்திக்கொட்டை வண்டிக்குமில்ல அதையே மாட்டறாங்க. அவருடைய இயந்திர மனம் தொடர்ந்து சிந்தித்தது. தம் மேஜையின் மேலிருந்த பஸ் உருவத்தைப் பரிவுடன் தடவிக் கொடுத்தார் ரத்தினம் பிள்ளை.

'கவிஞன் பிறக்கிறான், ஆக்கப்படுவதில்லை' என்று ஒரு பழமொழி உண்டு. அது எல்லாத் தொழில்களுக்கும் பொருந்தும் என்று வெகு பேருக்குத் தெரியாது. ரத்தினம் பிள்ளை பிறவிப் பொறி இயல் நிபுணர். அவருடைய விரல்களில் இயந்திரங்களை உருவாக்குவதற்கும் ஒக்கிடுவதற்குமான உயிர்ச் சக்தி எப்போதும் துடிதுடித்துக் கொண்டிருந்தது. திருவையாற்றிலிருந்து தஞ்சாவூருக்குச் செல்லும் நெடுஞ்சாலையின் மூலையில் ஒரு சிறிய கடையில்தான் அவர் தொழிலைத் தொடங்கினார். ஈயம் பூசினார், சிறு பித்தளை, டின் வேலைகளை மேற்கொண்டார். கத்தி, அரிவாள் கோடரி முதலியவைகளுக்குச் சாணை தீட்டினார். ஊருக்குச் சைக்கிள் வந்த புதிசு. அவற்றை ஒக்கிடும் சாமான்களைச் சேகரித்தார். நெல் மிஷின் ரிப்பேராகிப் போனால் ஊரில் குஞ்சுகவைத்தான்–ரத்தினம்பிள்ளையை அப்படித்தான் கூப்பிடுவார்கள் — அழைப்பார்கள். காப்பிக் கொட்டை இயந்திரம், பெட்ரோமாக்ஸ், ஸ்டவ், தையல் இயந்திரம், டைப்ரைட்டர், கிராமஃபோன், — மற்றும் பேறு எல்லாப் பொருள்களையும் அவர் ஒக்கிட்டுக் கொடுத்தார். வைத்தி ஸ்தானத்துத் திருவிழாக்களுக்குப் பல்லக்கிலும் தேரிலும் பாட்டரி விளக்கு அமைக்க ரத்தினம் பிள்ளைதான் முக்கியஸ்தர்.

இப்போதெல்லாம் ஒவ்வொரு துணைத் தொழிலுக்கும் தனித்தனி ஆட்கள் இருக்கிறார்கள். அவர் பழைய நாளைய எல். எம். பி. டாக்டரைப் போல. வெல்டர், டர்னர், எலக்ட்ரீஷியன், ஃபிட்டர், கருமான், தச்சர் எல்லாமே அவர்தான். அவருக்குத் தெரி

**விக்கோ**
**உருவாக்கிய**
**மற்றொரு பிரபல**
**அழகு சாதனம்**

....ஒப்பற்ற அழகு வாய்ந்த விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீம் ஈடு இணை இல்லாதது. வசீகரத் தோற்றத்திற்கு மிகவும் உதவியாக இருப்பதினால், அது உன்னத மதிப்புக்களைப் பெரிதும் பெற்றிருக்கிறது. மேலும் விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீமை யாவரும் பயன்படுத்திப் பயன் அடையலாம்.

ஆண்களும், க்ஷவரத்திற்குப்பின் உபயோகப் படுத்தலாம் அதில் சிறப்பு வாய்ந்த கிருமிநாசினி மருந்துகளின் குணங்கள் அடங்கியுள்ளதுடன் சருமத்தைப் போஷித்துப் பாதுகாக்கவல்லது.

இது ஒழகு சாதனம் மட்டுமல்ல ரோமம் வளர்வதைத் தடுக்கிறது. இது பண்டைக் கால முதற்கொண்டே அனுபவப்பட்ட விஷயம்.

## விக்கோ டர்மெரிக்
## வானிஷிங் க்ரீம்

**என்றால் மஞ்சள் ஸ்னோ**
**சந்தன நறுமணம்**
**கொண்டது**




விக்கோ லாபரட்டரீஸ்,
பம்பாய்-14

*STOCKISTS :* MADRAS : R. L. GOWDER & Co., 59, Bunder Street.
COIMBATORE : N. DESAI GOWNDER & Co., Avanashi Road
MANGALORE : K. S. GOWDER & Co., Subhedar Chatram Street

யாத பொறி இயல் தொழில் என்று தனியாக ஏதும் கிடையாது. எத்தனை புது மாதிரி இயந்திரமாக இருந்தாலும் அதைக் கூறு கூறாகப் பிரித்து ஒரு மரை, ஆணி, வில்கூட மிச்சமில்லாமல் நினைவோடு அனைத்தையும் ஒக்கிட்டுப் பொருத்தி விடுவார்.

அப்போது புதிதாக அந்த ஊருக்கு பஸ் வரத் தொடங்கியது. ஒரு முழு பஸ்—பழைய நாலைய உடலுடன் இரண்டாயிரம் ரூபாய்தான் விலை. திருவையாறு, தஞ்சாவூர், கும்பகோணம் பாதையில் நிறையக் கோயில்கள். வருஷம் முழுதும் திருவிழா இருக்கும். ஜனக் கூட்டம் மிகுதி. பிரயாணிகள் அதிகம். இந்தத் தொழிலில் புகுந்தவர்கள் நிறையப் பணம் பண்ணத் தொடங்கினார்கள். அந்த நாளிலே கலம் நெல் ஒன்றே முக்கால் ரூபாய்க்கு விற்கும். அப்படியும் நிலச்சுவான்தார்களிடையே பணம் மிஞ்சிற்று. அவர்களில் பலர் பஸ் வாங்கிவிடத் தொடங்கினார்கள்.

பல்லைப் பிடித்துப் பார்க்க அறியாதவர்கள் மாட்டுப் பண்ணை வைத்தது போல் ஆயிற்று அவர்கள் நிலை. முதல் இரு வருஷங்கள் பஸ் புதிதாக இருக்கும் வரையில் அவர்களிடம் செல்வம் கொழித்தது. பாதையும் நன்றாக இல்லை. பஸ்களில் தேய்மானம் அதிகம் கண்டது. சரியான சமயத்தில் தையல் போடாத துணியைப் போல் வண்டிகள் சீரழிந்தன. இந்தத் தொழிலில் புகுந்த பலருக்கு இயந்திர நுட்பம் தெரியாது. ஆகவே வெகு விரைவில் கீழே சரியத் தொடங்கினார்கள்.

அப்போது இந்தத் தொழிலில் புகுவதற்குத் துடித்துக் கொண்டிருந்தார் ரத்தினம்பிள்ளை. மூதாதையர் வைத்து விட்டுப் போன பூஸ்திதி, மனைவியின் நகைகள் அனைத்தையும் விற்றும் அவரிடம் எண்ணூற்றுச் சொச்சம் ரூபாய்தான் தேறிற்று. கும்பகோணத்து ரூப்பனார் ஒருவர் தம்முடைய ஒரே பஸ்ஸை விற்று விடுவதாக இருந்தார். இரண்டே வருஷங்கள் ஓடிய பஸ் ஆயிரம் ரூபாய்க்கு வந்தது. இன்னும் நூறு ரூபாய் வேண்டும். தெரு மூலையில் தாற்காலிகப் பட்டறை வைத்திருக்கும் தொழிலாளியை நம்பி யார் நூறு ரூபாய் கடன் கொடுப்பார்கள்? எந்த ஆதாரத்தின் பேரில்? அந்த நாளில் நூறு ரூபாய் என்பது பெரிய விவகாரம்.

அப்போதுதான் திவ்ய ஸ்தானத்துப் பட்டாமணியம் முத்து ஐயர் அவருக்குப் பழக்கமானார். முதல் நாள் ரூப்பனாரிடம் சென்று நான்கு நாட்கள் தவணை கேட்டுக் கொண்டு திரும்பி வந்திருந்தார் ரத்தினம் பிள்ளை. அதை அடைவதற்கு என்ன வழி என்று நிராசையுடன் துடித்துக் கொண்டிருந்தார். ஒரு வேலையும் ஓடவில்லை. வாழ்க்கையின் மாபெரும் சந்தர்ப்பம் மறுபடியும் எளிதில் கிட்டக் கூடாதது எதிரே வந்து நிற்கிறது. அதை அடைய நூறு ரூபாய்ப் பாலம் தேவை. அது இல்லாமல் போகிறதே என்று அவர் பதறினார்.

முற்பகல் மணி பதினொன்றிருக்கும். ஒரு யோசனையும் ஓடாமல் ரத்தினம் கடையில் உட்கார்ந்திருந்தார். சைக்கிள் ஒன்றைத் தள்ளிக் கொண்டு வியர்க்க விறுவிறுக்க அவரிடம் வந்தார் முத்து ஐயர். "குஞ்சு, கொஞ்சம் அவசரம். பின்சக்கரத்தில் காற்று இறங்கி விட்டது. சரியாக இந்த நேரத்தில் நான் ஜமாபந்தியில் இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அபராதம் விழும்" — முத்து ஐயர் அவசரப்பட்டார்.

ரத்தினம்பிள்ளை எழுந்திருந்து ரிப்பேருக்கு வந்திருந்த சைக்கிளை எடுத்து அவரிடம் கொடுத்தார். "நீங்கள் கச்சேரிக்குப் போங்க சாமி! நான் அதற்குள் இதைச் சரி பார்த்து விடுகிறேன்!"

நன்றி அறிவுடன் அவரைப் பார்த்தவாறு சைக்கிளின் பெடலை மிதித்தார் முத்து ஐயர். இவ்வளவுக்கும் இதற்கு முன்பு ஒரே ஒரு தரம்தான் அவர் பிள்ளையிடம் பழகியிருக்கிறார். தம் நண்பர் ஒருவரின் சைக்கிளை எடுத்துக் கொண்டு போய்க் கட்டை வண்டியில் மோதி உருமாற்றிய பிறகு அதைப் பிள்ளையிடம் தள்ளிக் கொண்டு



போனார். அது மறுபடியும் நேராகும் என்ற நம்பிக்கையே அவருக்கு இல்லை. ஆனால் பிள்ளை சைக்கிளை ஒக்கிட்டு வர்ணம் பூசிப் புதிதுபோல் ஆக்கிக் கொடுத்தார். அவர் இதற்காகப் பெற்றுக் கொண்டது இரண்டே ரூபாய்தான். அது நடந்தது மூன்று மாதங்களுக்கு முன்பு.

பிற்பகல் ஒரு மணிக்குத் திரும்பி வந்தார் முத்து ஐயர். "உன்னுடைய உதவியில்லாவிட்டால் நான் ரொம்பக் கஷ்டப்பட்டிருப்பேன். ஜமாபந்தி என்னவோ நடக்கவில்லையாம். ஸப் கலெக்டருக்கு உடம்பு சரியில்லையாம். என்றாலும் நான் நேரம் கழித்துப் போயிருந்தால் அந்தத் தாசில்தார் என்னை அவமானப்படுத்தியிருப்பார். எப்போதுமே எனக்கும் அவருக்கும் ஆகாது."

"உட்காருங்கள் சாமி!"

முத்து ஐயர் கடையினுள் உட்கார்ந்தார். மேல் துண்டினால் கழுத்துப் பிடியையும், நெற்றியையும் துடைத்து விட்டுக் கொண்டார். "உனக்கு எவ்வளவு தரவேண்டும் ரத்னு?"

"ஒண்ணுமில்லே சாமி." பிள்ளை கூறினார். "அதன் வால்ட்யூப்தான் போயிருந்தது. அதற்காக உங்களிடம் காசு வாங்குவேனா?" ரத்தினம் பிள்ளையின் பெருந்தன்மை அவருடைய நெஞ்சைத் தொட்டது. "பிள்ளை!" - இப்போது முதலாக அவர் மரியாதையோடு விளித்தார். "பக்கி கடையிலிருந்து காப்பி வரவழையுமே!"

ஹோட்டல் பையன் அல்வாவும் தோசையும் இரண்டு முக்கால் காப்பியும் கொண்டு வந்தான். பிள்ளைக்கு அது சாப்பாட்டு நேரம். ஐயருக்கு டிபன் வேளை. குஞ்சு டிபனை ஆவலோடு உண்பதைக் கவனித்தார் முத்து. அன்புடன் விடைபெற்றுக் கொண்டு நெகிழ்வுடன் புறப்பட்டார். அவர் தமது சைக்கிளில் ஏறிப் பத்தடிதான் சென்றிருப்பார். பிள்ளை அவரை விளித்தார். "பணப்பையை மறந்து விட்டீங்களே!" தோல் பையை எடுத்துக் கொடுத்தார் ரத்தினம்.

"சகுனம் சரியாகவில்லை" என்று கூறி மறுபடியும் கடையில் உட்கார்ந்தார் முத்து. தபால்காரன் ஒருவன் காலணாக் கார்டைக் கொண்டுவந்து கொடுத்தான். மறுநாள் பணத்தைக் கொடுத்து வண்டியை எடுத்துக் கொள்ளாவிட்டால் நாகூர் சாயபு ஒருவருக்கு பஸ்ஸை விற்று விடுவதாகக் கும்பகோணம் மூப்பனார் எழுதியிருந்தார். அதைப் படித்துக் கவலையில் ஆழ்ந்தார் ரத்தினம்.

"என்ன சமாசாரம் பிள்ளை?"

கடிதத்தை ஐயரிடம் கொடுத்தார் ரத்தினம். அதைப் படித்த முத்து ஒரு நிமிஷம் யோசனையில் ஆழ்ந்தார். "உமக்கு எவ்வளவு பணம் வேண்டும்?"

"நூற்றி இருபத்தேழு ரூபாய்தான் குறைகிறது...."

முத்து ஐயர் தோல் பையைத் திறந்தார். ஒரு நூறு ரூபாய் நோட்டையும் இருபத்தேழு வெள்ளிப் பணத்தையும் எடுத்து அவரிடம் கொடுத்தார். அப்போதெல்லாம் ஒரு ரூபாய்க்கு நோட்டுக் கிடையாது. தோல் பையை மூடிச் சைக்கிளின் பின் ஸீட்டில் வைத்துக் கொண்டு இல்லஸ்தானத்தை நோக்கிப் புறப்பட்டார் முத்து ஐயர். ஐயாறப்பன் பல்லக்கில் போவதைப் பார்ப்பது போல் பரவசமடைந்து போய் நின்றார் ரத்தினம் பிள்ளை.

"பிள்ளைவாள்!"

"ஸ்வாமிகளே!"

இப்படித்தான் இரண்டுபேரும் ஒருவரை ஒருவர் அழைத்துக் கொண்டார்கள். மூப்பனாரிடம் பணத்தைக் கொடுத்துக் கும்பகோணத்துத் தொழில் பட்டறையில் இலேசாக ஒக்கிடுதல் செய்த பிறகு வண்டியைப் பட்டாமணியத்தின் வீட்டுக்குத்தான் ஓட்டி வந்தார். "ஸ்வாமிகளே, நாளைக்குக் கிருத்திகை. முதன் முதலில் ஸ்வாமி மலைக்குப் போய் வருவோம், வாருங்கள்" என்று ரத்தினம் பிள்ளை கூறினார். அதற்கடுத்த நாள் ரத்தினம் பிள்ளையின் மனைவி குழந்தைகளுடன் அவர்கள் மைக்கேல் பட்டி மாதா கோவிலுக்குப் போய் வந்தார்கள்.

இப்படித் தொடங்கிற்று அவர்கள் நட்பு. ரத்தினம் பிள்ளை முத்துவிடம் வாங்கிய தொகையைத் திருப்பித் தரவில்லை. ஆனால் பிள்ளை அவரைத் தமது கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்டார். அந்த ஐயர் வீட்டுப் பிள்ளை வண்டி கழுவி, கியர்பாக்ஸுக்கு எண்ணெய் மாற்றி, ஸ்பிரிங்குகளுக்கு கிரீஸ் போட்டுக் கணக்கும் எழுதிற்று. பாட்டரி சார்ஜ் செய்து தந்தது. அடுத்த மூன்று ஆண்டுகளில் ஐயர், குஞ்சு கூட்டுறவில் அந்தப் பாதையில் இரண்டு பஸ்கள் ஓடின. முத்துவும் பஸ் ஓட்டினார், டிக்கட் கிழித்துக் கொடுத்தார். வண்டி அடியில் படுத்து யூனிவர்ஸல் ஜாயிண்டுகளின் கிரீஸ் நிப்பிள்களை நிரப்பினார். ப்ரேக் 'ரிவிட்' செய்யக் கற்றுக் கொண்டார். ரேடியேட்டர் தண்ணீர் மாற்றினார். பளபளவென்று பூசணிப் பழம் போலிருந்த உடல் கறுத்தது. தொப்பை சுருங்கிற்று. ஆனால் மாதாமாதம் மனைவியின் கழுத்தில் பொன் நகை ஏறிற்று. பெண் குழந்தைகள் வைரத் தோடு அணிந்துகொண்டனர். ஐயர் பரம்பரையாகச் செய்து வந்த கிராம முன்சிப் வேலையை விட்டபோது ஊரே அதிசயித்தது. அவருடைய செல்வம் பெருகுவதைக் கண்டு பொறாமை கொண்டது. முத்து ஐயர் பெட்ரோல் பங்க் திறந்தார். கூடவே ஒரு மெயிண்டனன்ஸ் ஸ்டேஷன் ஏற்பட்டது. அதற்குப் பக்கத்தில் இருந்த காலி இடம் விலைக்கு வந்தபோது வாங்கிப் போட்டார். அங்கு தகரக் கொட்டகை எழும்பிற்று. நாளடைவில் தொழிற்சாலையாக உருவெடுத்தது அந்தக் கட்டாந்தரை.

அவர்கள் நடந்த பாதை எப்போதுமே தார்ச் சாலையாக இல்லை. ஓரிரு முறை பஸ்கள் விபத்துக்குள்ளாகிப் பொருட்சேதம் ஏற்பட்டது. அந்தச் சமயங்களில் இருவரும் தம் மனைவிமார்களின் நகைகளை விற்றார்கள். முத்து ஐயர் தமது பூர்வீக நிலத்தையெல்லாம் அடகு வைத்து இந்தச் சூதாட்டத்தில் இறங்கினார். ஆனால் அவர் பிழைத்துக் கொண்டு கரை ஏறி விட்டார்.

காரைக்கால் ரூட் கிடைத்தபோது இவர்களுக்குக் கொள்ளை லாபம் கிடைத்தது. தொழில் என்று இறங்கிவிட்டால் அப்புறம் நியாய அநியாயம் பார்க்க முடியாது. அந்



முன்னீர் பள்ளம் ஸ்ரீ L. வெங்கிட கிருஷ்ணய்யர் புதல்வன் V. ராம **கிருஷ்ண**னுக்கும் களக்காடு சுப்பய்யர் புதல்வி வள்ளி என்ற **மைதிலி**க்கும் சமீபத்தில் களக் காட்டில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்
**ராமகிருஷ்ணன் - மைதிலி**



தேய்த்துத் தருவார். ரேடி யேட்டருக்குப் பற்ற வைப் பார். இடையே ப்ரேக் ஷூவை யும் அராவுவார். தொழிற்சாலை யில் பெரும்பாலும் அவருடைய நண்பர்களும் உறவினர்களுமே இருந்தனர்.

அவர்களுடைய டிரான்ஸ் போர்ட் கம்பெனி இந்த இரண்டு சிறகுகளின் உதவி யோடு உயர உயரப் பறந்தது: அதாவது அவருடைய பிள்ளைகள் தலையெடுக்கும் வரை. சந்திரன் முத்து ஐயரின் மூத்த பிள்ளை. மோஹன் ரத்தி னம் பிள்ளையின் இரண்டாவது மகன். இரண்டுபேரும் உயர் தரப் பள்ளியில் ஒன்றாகப் படித் தார்கள். கல்லூரி ஹாஸ்டலி லும் அடுத்தடுத்த அறைகளில் வசித்தார்கள். சமூக இயல், அரசியல் சூழல், பழக்க வழக்கம் அனைத்தும் இருவரையும் வெவ்வேறு திக்கில் கொண்டு சென்றன. மோஹன் விளையாட்டுக்களில் தீவிரம் காட்டினான். சந்திரன் கணக்கில் புலி. காமர்ஸில் மாநிலத்திலேயே முத லாவதாக விளங்கினான். இருவருக்கும் நண்பர் குழாம் வேறு; அபிலாஷைகள் வேறு—இருவரும் எதிரெதிரான திசையில் அடி யெடுத்து வைத்தனர்.

இருந்து துணிமணிகளும், போலி வைரங் களும், பகட்டுச் சாமான்களும் வந்தன. ஒன்றுக்கு ஐந்து விலை கிடைத்தது. ஒரு தரம் சுங்க அதிகாரிகளிடம் மாட்டிக் கொண்டு சிறைக்குச் செல்லவிருந்தார் ரத்தினம் பிள்ளை. எப்படியோ தப்பி விட்டார்.

இரண்டாவது உலகப் போர் இவர்களுக்கு வரப்பிரசாதமாக அமைந்தது. பெட்ரோல் கிடைப்பது நின்று போயிற்று. பஸ்கள் கரித் தூளில் ஓடின. முத்து ஐயரின் பூர்விகப் புளியந் தோப்பு பொன்னை வாரிச் சொரிந்தது.

ஐயரும் பிள்ளையும் பூண்ட நகச் சதை உறவு மேலும் மேலும் இறுகிற்று. அவர்கள் ஒரே தாலத்தில் உண்டார்கள். ஒரே படுக்கை யில் உருண்டார்கள். என்றாலும் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் மரியாதை, பரிவு, நாண யம் இவற்றுடன் பழகினார்கள். இருவருக்கும் குடும்பம் வளர்ந்தது. பஸ்களின் எண்ணிக்கை பெருகிற்று. வாழ்க்கை வசதிகளும் அவர் களுக்கு வளர்ந்தன.

ஆபீஸ் கணக்குகள், வருமானவரி, வழக்கு, மற்ற அலுவல்களுடன் கடிதப் போக்கு வரத்து, இவ்வாறாக அலுவலகப் பணிகள் பெருகின. அவற்றையெல்லாம் முத்து ஐயர் தமது கூரிய அறிவுத் திறனால் நிர்வாகம் செய்தார். அந்த வேலை அளவில் விரிந்தது. அங்கே தமது பல உறவினர்களைக் கொண்டு வந்து சேர்த்தார்.

பிறவிப் பொறியியல் நிபுணரான பிள்ளை யால் தொழிற்சாலையை விட்டே வெளியே வர முடியவில்லை. தகரக் கொட்டகையின் நடுவிலிருந்த பரணில் நின்றுகொண்டே, 'அடைக்கலத்தின் வண்டியில் இரண்டு ஸிலிண் டர் அவுட், மூந்நூற்றுப் பத்தின் அவுட்டர் பேரிங் சத்தமிடுகிறது. வேலியர் பெட்ரோல் ரொம்பச் சாப்பிடுகிறான்' என்று அவர் கூச்ச லிடுவார். தொழிற்சாலை முழுதும் பம்பர மாகச் சுழலுவார். காய்ந்து கொண்டிருக்கும் பாட்டரிகளுக்குச் சுத்த நீர் வார்ப்பார். கட் அவுட் 'அட்ஜஸ்ட்' செய்து கொடுப்பார். இஞ்செக்டரின் ஊசியை எண்ணெய்க் கல்லில்

ஆண்டுகள் சென்றன. முத்து ஐயர் கால மானார். பெரியவர் ரத்தினம் பிள்ளையினால் முன்னைப் போல் ஓடியாடி வேலை செய்ய முடியவில்லை. தமது இறுதி நாட்களைச் சமய வாழ்க்கையில் செலவிட்டார். மூன்று ஆண்டுகளுக்கு முன்பு பக்க வாதம் வந்து அவருடைய நாவு புரள மறுத்தது. செவி எல்லாவற்றையும் கேட்டது. சைகையினால் பதில் கூறினார். நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் காட்டினார். எப்போதாவது ஓரிரு நிமிஷம் பேச வந்தது. அப்போதெல்லாம் தமக்கும் முத்து ஐயருக்கும் இருந்த இறுகிய உறவைப் பற்றித்தான் அவர் பேசுவார். தமது அடுத்த தலைமுறையும் அதே நேச பாவத்தில் வாழ வேண்டும் என்றுதான் அந்த வேளைகளில் வற்புறுத்தினார்.

முத்து ரத்தினம் டிரான்ஸ்போர்ட் இரண்டு அணிகளாகப் பிரிந்து நின்றது. சிறிய சிறிய விஷயங்களுக்கெல்லாம் சந்திரனும் மோஹ னும் மோதிக் கொண்டார்கள். தொழிற் சாலைக்குள் எந்தப் படத்தை வைப்பது, புதிய மோட்டாருக்கு என்ன பெயரிடுவது, யாரை வேலையிலிருந்து நீக்குவது, சேர்ப்பது என்ற எல்லா விஷயங்களிலும் இருவருக்கும் தனித் தனி அமைச்சர்கள் இருந்தார்கள். இவர்களுடைய பிளவை விரிவுபடுத்தினர். இருவரும் வழக்கு மன்றம் ஏறினார்கள். மன்றிலும் படலம் தொடங்கியது.

இரண்டு பேருமே பணத்தை நீராகச் செலவழித்தார்கள். துவேஷம், பொறாமை,

அருமை, இலேசான கை கலப்பு, கடைசியில் ஹைகோர்ட் தீர்ப்பு மோஸஸுக்குச் சாதகமாக முடிந்தது. பரம்பர நம்பிக்கையின் ஆதாரத்தினால் பழைய தஸ்தாவேஜுகளில் முத்து ஐயர் எழுதாமல் விட்ட சில வாசகங்கள் சந்திரனுக்கு அந்தக் கம்பெனியில் உள்ள உரிமையைத் தர மறுத்தன. சட்டம் எப்படி இருந்தாலும் நியாயம் சந்திரனின் பக்கம் இருப்பதை ரத்தினம் பிள்ளை உணர்ந்தார். அவர் சந்திரனுக்காக வாதாடினார். ஆனால் மகன் அதை ஏற்கவில்லை.




பிற்பகல் ஒரு மணிக்கு வீடு திரும்பிய மோஸஸ் தந்தை உணவு உட்கொண்டாரா என்று சமையற்கார ஜோஸப்பைக் கேட்டான். இல்லை என்று அவன் பதிலளிக்கவும் தந்தையின் அறைக்குச் சென்றான் மோஸஸ். ரத்தினம்பிள்ளை கட்டிலில் சோர்ந்து படுத்திருந்தார். அவருடைய பார்வை எதிரே யிருந்த இயேசு பெருமானின் திருவுருவத்தில் பதிந்திருந்தது. தனயன் தந்தையின் நெற்றியைத் தொட்டுப் பார்த்தான். பெரியவரின் கண்கள் கசிந்து வந்தன. 'தோட்டகஸ் கொடுத்தாயிற்று?'' என்று சைகையின் மூலம் கேட்டார். ''சாயங்காலம் டெலிவரி ஆகும், அப்பா. அதைப் பற்றியெல்லாம் நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்?'' என்று செல்வமாகக் கடிந்து கொண்டான் மோஸஸ். ரத்தினம் பிள்ளை கண்களை மூடிக் கொண்டார். அவர் கண் முன்பு தோல் பையிலிருந்து முத்து ஐயர் பணத்தை எடுத்துக் கொடுத்த காட்சி நின்றது. மேஜையிலிருந்த மோட்டாரின் மாடலை அவர் தொட்டுக் காட்டினார். மூப்பனாரிடமிருந்து வாங்கிய 555 என் வண்டியை அவனுக்கு நினைவூட்டினார். மோஸஸுக்கு எரிச்சல் வந்தது. அரை குறையாக அந்த ஞாபகங்கள் வந்து அவனுடைய மனச் சாட்சியையும் துன்புறுத்தத் தொடங்கின. அதைத் தன் நெஞ்சிலிருந்து அழிக்க முயன்றான்.

இந்தக் காட்சியை நெடு நாட்களாக அவர்கள் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த சொக்கலிங்கம் கண்டான். அவனுடைய கண்கள் கலங்கின. மோஸஸை அவன் தனியாக அழைத்தான். 'பெரிய விஷயத்தில் எல்லாம் நான் தலையிடக் கூடாது என்றாலும் ஐயா மனத்தை நோக விடாதீர்கள்'' என்று பணிவுடன் கூறினான்.

''சரி, சரி, வாயை மூடு.'' — மோஸஸ் தன் அறைக்குச் சென்றான். 'வயதான கிழங்கள் தங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போகாமல், ...சூ. இது என்ன தொந்தரவு?' — அவனுக்கு அப்போது சாப்பிடக் கூடப் பிடிக்கவில்லை. சட்டையையும் கழற்றாமல் சாய்வு நாற்காலியில் மல்லாந்து படுத்துக் கண்ணயர்ந்தான்.

மணி மூன்றிருக்கும். பெரியவரின் அறையின் அழைப்பு மணி ஒலித்தது. சொக்கலிங்கம் உள்ளே ஓடினான். சற்று நேரத்துக்கெல்லாம் அவருடைய குறிப்புப் புத்தகத்துடன் மோஸஸின் அறையினுள் நுழைந்தான் அவன்.

ரத்தினம் பிள்ளை தெளிவான எழுத்துக்களில் எழுதியிருந்தார்:

'முத்து ஐயரின் கடனை நான் இதுவரை தீர்க்கவில்லை. பாக்கி நிற்கிறது. எனக்கு உடனடியாக நூற்று இருபத்தேழு ரூபாய் வேண்டும்.'

மோஸஸின் உடம்பு புல்லரித்தது. முத்து ஐயர் தன் தந்தையின் தொழிலுக்கு விளக்கேற்றி வைத்த சம்பவம் அவனுக்குத் தெரியும். அது அவனுடைய அடி மனத்தில் ஆழப் பதிந்திருந்தது. எழுந்து டெலிபோன் மேஜையை அணுகினான். மூன்று பூஜ்யம், ஐந்து என்று அவனுடைய விரல்கள் தடுமாறின.

ஜோஸப் உள்ளே ஓடிவந்தான்.

மோஸஸ் புருவத்தை உயர்த்தினான்.

''ரெவரண்ட் ஃபாதருக்கும் செய்தி கொடுத்திடுங்க — ஐயா — கர்த்தர்......''

அதற்கு மேல் பேச அவனால் இயலவில்லை.

உடல் வலுவெல்லாம் இழந்து திகைத்துப் போய் நின்றான் மோஸஸ். எதிர்ப்புறத்திலிருந்து 'ஹல்லோ, ஹல்லோ' என்ற குரல் கேட்டுக் கொண்டே யிருந்தது.



புகழ் பெற்ற போலிகள்

# கொடுத்து வைத்தவன்

**பிரஞ்சுக்காரர்களுக்கு** அமெரிக்கர்கள் மீது ஒரே கோபம்; ஆத்திரம். 'யுத்தத்தை முடித்துக் கொண்டு இந்த அமெரிக்கர்கள் ஹாய்யாக பாரிசை, நியூயார்க்காகவோ, சிகாகோவாகவோ நினைத்துக் கும்மாளம் அடிக்கிறார்களே தவிர வெளிப் பிரதேசங்களில் அகப்பட்டுக் கொண்ட பிரஞ்சு யுத்தக் கைதிகளை மீண்டும் தாய் நாட்டுக்கு அழைத்து வந்து விடுவதில் அக்கறை காட்டவில்லை' என்ற தாபம். இந்த நிலை படித்தவர்கள், பாமரர்கள் என்ற வித்தியாசமில்லாமல் பிரஞ்சு மக்களிடையே 1945ல் பரவியிருந்தது. புதிதாகக் கைப்பற்றப்பட்ட ஜெர்மானியப் பிரதேசங்களில் கடின உழைப்புக்காகப் பிரஞ்சுக்காரர்களை வேண்டுமென்றே அமெரிக்கர்கள் விட்டு வைத்திருக்கிறார்கள் என்ற அபவாதமும் ஏற்பட்டது.

உண்மையோ இதற்கு முற்றிலும் மாறுபட்டது. பிரஞ்சுப் போர்க் கைதிகளை, சீராகப் பிரித்து அவ்வப்போது ஆயிரக்கணக்கில் கொண்டு வந்து சேர்த்துக் கொண்டுதான் இருந்தார்கள் அமெரிக்கர்கள். ஆனாலும் பிரஞ்சுக்காரர்கள் இதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. குற்றம் சாட்டுவதிலேயே குறியாக இருந்தார்கள். இந்த அவநம்பிக்கை உணர்ச்சியை எப்படி அவர்கள் மனத்திலிருந்து அகற்றுவது என்று அமெரிக்க அதிகாரிகள் தீவிரமாகச் சிந்தித்தார்கள். கடைசியில் இந்த நம்பிக்கையைப் பெரிய அளவில் தடபுடலாக உருவாக்கப்பட்ட நிகழ்ச்சி மூலம் பிரஞ்சுக்காரர்கள் உள்ளத்தில் பதிய வைக்க வேண்டும் என்று தீர்மானமாயிற்று. அதன் பூர்வாங்கப் பொறுப்பை ஜான் ஹோம்ஸ் என்று புனை பெயரில் அழைக்கப்பட்ட பத்திரிகைக்காரரிடம் ஒப்படைத்தார்கள். 'பத்து லட்சத்தியோராவது பிரஞ்சுக் கைதிக்குப் பாரிஸ் நகரில் வரவேற்பு' என்ற அடிப்படையில் விஷயங்களைக் கவனித்து ஏற்பாடு செய்ய ஜான் ஹோம்ஸ் ஜெர்மனியிலுள்ள ஃபிராங்பர்ட்டுக்குக் கிளம்பினான். இந்தப் பிரம்மாண்ட ராஜ வரவேற்புக்குத் தகுதியான நபரைத் தேர்ந்தெடுக்க வேண்டியதும் அவன் பொறுப்புக்களில் ஒன்று.

ஃபிராங்பர்ட்டுக்கு ஹோம்ஸ் வந்து சேர்ந்த பொழுது அவனுக்கு மாபெரும் அதிர்ச்சியே காத்திருந்தது. ஜெர்மானியப் பிரதேசங்களிலிருந்து பரிவர்த்தனை செய்யும்படியாக ஒரு பிரஞ்சுப் போர்க் கைதிகூட அங்கு கிடையாது. எல்லாரும் திருப்பி அனுப்பப்பட்டிருந்தார்கள். ஹோம்ஸுக்கு மற்றொரு விஷயமும் தெரிய வந்தது. ஏற்கனவே பன்னிரண்டு லட்சம் நபர்களுக்குமேல் தாயகமாகிய பிரான்சுக்குத் திருப்பி அனுப்பப்பட்டிருந்தார்கள். துல்லியமாகச் சொல்ல வேண்டுமானால் பன்னிரண்டு லட்சத்து நானூற்று முப்பது பேர்கள் திரும்பிப் போயிருக்கிறார்கள். இந்த விஷயங்களை எப்படி எடுத்துச் சொன்னாலும் பிரஞ்சு மக்கள் நம்ப மாட்டார்கள் என்று ஹோம்ஸுக்குத் தெரியும். ஒரு பிரும்மாண்ட நிகழ்ச்சியினால்தான் நம்பிக்கை ஊட்ட முடியும். யாராவது எங்கேயாவது மறைந்திருக்கும் போர்க் கைதியைப் பிடித்துத் திருப்பி அனுப்பினாலும் அவன் பன்னிரண்டு லட்சத்து நானூற்று முப்பத்தி ஒன்றாவது ஆசாமியாகத்தான் இருக்க முடியும். இந்த எண்ணிக்கைக்கு விளம்பர மதிப்பு கிடையாது. ஆகவே அவன் பத்து லட்சத்து ஒன்று (ஒரு மில்லியன் கடந்த முதல் ஆசாமி) என்ற எண்ணிக்கைக்கு முக்கியத்துவம் அளித்து அந்தப் பெருமைக்கு ஆளாக்க ஒரு நபரைத் தேட முயன்றான்.



ஜெர்மனியில் அமெரிக்க பிரஞ்சுப் பகுதிகளில் ஓர் ஆசாமிகூட அந்த அந்தஸ்தைப் பெறத் தகுதியுள்ளவனாக இல்லை. பிரிட்டிஷ் பகுதியில் ஒருவன் இருந்தான். அவன்கூட ராணுவத்தில் எந்த முக்கியத்துவமும் பெற்றவன் இல்லை. தன் நண்பர்களெல்லாம் பிரான்சுக்குத் திரும்பிய பிறகும் அவன், பிரத்தியேக அனுமதி பெற்று அங்கேயே தங்கி விட்டான். அவனுக்கு அந்த ஜெர்மானியப் பிரதேசம் பிடித்துப் போய்விட்டது. அங்கேயே ஏதோ சிறு தொழில் செய்து பிழைக்க ஆரம்பித்து விட்டிருந்தான். அவனுக்கு ஒரு காதலியும் கிடைத்து விட்டாள். அவள் பெயர் ஜீன்ஸ்.

ஹோம்ஸ் ஹான்பர்க் என்ற இடத்தில் வசித்த ஜீன்னைக் கண்டு பிடித்து விட்டான். பத்து லட்சத்தி ஓராவது ஆசாமி என்ற பெருமையை அவன் தலையில் சுமத்தத் தீர்மானித்து விட்டான். ஜீன்னிடம் அதை அவன் விளக்க முற்பட்டபோது ஜீன்ஸ் சீறி விழுந்தான். தான் அங்கிருந்த இடமும்

கிளம்பி வரத் தயாரில்லை என்றும் தன்னைச் சும்மா விட்டு விடும்படியும் அழுத்தமாகவே கூறினான். அவனுக்கு ஆசை காட்டும் வகையில் ஹோம்ஸ் கணிசமான ஒரு லஞ்சத் தொகை கொடுக்க முன்வந்தபோதும் ஜீன்ஸ் அதை நிராகரித்து விட்டான்.

ஹோம்ஸுக்குப் பளிச்சென ஒரு யோசனை தோன்றியது. ஜீன்ஸ் ஒரு காலத்தில் பிரஞ்சு ராணுவ சேவையில் ஈடுபட்டவன். அதிகார பூர்வமாக அவன் இன்னும் அதிலிருந்து விடுபடவில்லை. ராணுவ அதிகாரிகளைக் கொண்டு அவனை மிரட்டத் திட்டமிட்டான். அதன்படி ஒரு ராணுவக் காப்டன் ஜீன்ஸைச் சந்தித்து அவன் தாயகம் திரும்ப வேண்டும் என்று வற்புறுத்தினர். ஜீன்ஸ் தன்னை, ராணுவப் பட்டியலிலிருந்து விடுவிக்கத்தான் வேண்டினானே தவிர பிரான்ஸுக்குத் திரும்பச் சம்மதிக்கவில்லை. கடைசியில் கோபமடைந்த காப்டன், ஜீன்ஸை 'கோர்ட் மார்ஷலு'க்கு உள்ளாக்க நேரிடும் என்று அறிவித்தபோது ஒரு வகையாக ஜீன்ஸ் சம்மதித்தான்.

அவ்வளவுதான்; ஆனந்தம் பொங்க ஹோம்ஸ் அன்று இரவே பாரிஸ் தலைமைக் காரியாலயத்துக்கு வந்து, தான் வரவேற்புக்கேற்ற நபரைத் தேர்ந்தெடுத்து விட்டதாகச் சொல்லித் திட்டமிட்டதை விட, இன்னும் பெரிய அளவில் தடபுடலாக நிகழ்ச்சிகளை அமைக்கச் சொல்லிவிட்டு மீண்டும் லூனா பார்க்குக்குத் திரும்பினான்.

இப்போது ஹோம்ஸுக்குப் பெரிய ஏமாற்றம் காத்திருந்தது. முன்பு சம்மதித்த ஜீன்ஸ் இப்போது மறுத்து விட்டான். தான் 'கோர்ட் மார்ஷல்' தண்டனையை அடைந்தாலும் அடைவானே தவிரத் தன் காதலியைப் பிரிந்து பிரான்சுக்கு வர முடியாது என்று சொல்லிவிட்டு ராணுவ அதிகாரிகளிடம் சரண் புகுந்து விட்டான். அந்த அதிகாரிகளோ, ஜீன்ஸின் காதலியை பிரான்ஸுக்கு அனுப்பத் தயாராயில்லை. ஜீன்ஸைக் கைது செய்து வைத்திருந்தார்கள்.

ஹோம்ஸ் ராணுவ அதிகாரிகளுடன் கலந்து ஆலோசித்தான். ஏற்பாடுகளோ தடபுடலாக நடந்து கொண்டிருக்கின்றன. பிரஞ்சு மக்களிடையோ அந்தக் காட்சி நம்பிக்கை ஊட்டியாக வேண்டும். இந்த ஒரு ஜீன்ஸையும் விட்டு விட்டால் அந்த வாய்ப்பை இழக்க நேரிடும். ஜீன்ஸ் பரிவர்த்





பையன்: யுத்தம் எப்படி அப்பா ஆரம்பிக்கும்?
தகப்பனார்: நான் 'பிஸி'யாக இருக்கேன், அம்மாவைக் கேளு!
தாயார்: ????
பையன்: ஓ! புரிஞ்சுது. இப்படித்தான் ஆரம்பிக்குமா?

---

தனைத் திட்டத்துக்கு உட்பட்ட யுத்தக் கைதி அல்ல. அவனுக்குப் போலிப் புகழ் தேடிக் கொடுப்பதன் மூலம் அமெரிக்கர்கள் பிரான்சில் தங்கள் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டாக வேண்டும். ஆகவே ஹோம்ஸ், ராணுவ அதிகாரிகளுடன் வாதாடி ஜீன்ஸின் காதலியையும் அவன் கூடவே அனுப்பி உதவச் சொன்னான்.

ஹோம்ஸ் ஜீன்ஸுக்குச் சில பாடங்கள் படித்துக் கொடுத்து அவனைக் கொண்டு ஒரு சிறு பத்திரிகை நிருபர்கள் கூட்டம் நடத்தினான். ஜீன்ஸுக்கு உள்ளூற இந்தப் புறப்பாடு ஏற்பாடு பிடிக்கவே இல்லை. ஆனால் சில நிமிடங்கள் கழித்துப் புகைப்படக்காரர்கள் சூழ்ந்து கொண்டு பளிச் பளிச்சென்று ஒளி வீசப் புகைப்படங்கள் எடுக்க ஆரம்பித்த போது ஜீன்ஸுக்கு நம்பிக்கையே தோன்றியது. இத்தனை நாட்கள் தன்னை ஏமாற்றி ஏதோ பெரும் தண்டனை அளிக்கத்தான் அழைத்துப் போக முயற்சி செய்கிறார்கள் என்று நடுங்கிக் கொண்டிருந்த ஜீன்ஸ் புகைப் படக்காரர்களைக் கண்டதும் தான் ஒரு ஹாலிவுட் நட்சத்திரம் ஆகிவிட்டதுபோல் நினைத்துக் கொண்டு விட்டான். அவன் பயமும் தெளிந்தது.

பாரிஸ் விமான தளம் 'ஜே! ஜே' என்றிருந்தது. புகழ் பெற்ற பாண்டு வாத்தியக் கோஷ்டி நன்று இசைத்துக் கொண்டிருந்தது. அமெரிக்க, பிரிட்டிஷ், பிரெஞ்ச் யுத்த வீரர்கள் அணிவகுத்து நின்றார்கள். அவைகளின் பிரதான தலைமை அதிகாரிகளும் பளபளப்பான உடைகளுடன் நின்று கொண்டிருந்தார்கள். விமான தளத்தைச் சுற்றிப் பத்து லட்சத்திலோராவது புனிதப் பிரஞ்சு மகனைக் கண்டு ஆனந்திக்க லட்சக்கணக்கான பொதுமக்கள் கூடியிருந்தார்கள். அமெரிக்க விமானங்கள் ஆகாயத்திலிருந்து 'பத்து லட்சத்து ஓராவது பெருமகனாரை வரவேற்கிறோம்' என்ற துண்டுப் பிரசுரங்களை வாரி வாரி வீசின.

ஜீன்ஸை ஏற்றி வந்த விமானம் தளத்தில் வந்து கம்பீரமாக நின்றது. ஜீன்ஸ் மிடுக்காக விமானக் கதவருகில் வந்து சில நிமிடங்கள் நின்று கீழே பரந்து நின்ற ஜனசமுத்திரத்தைப் பார்த்து மகிழ்ந்து விட்டுக் கீழே இறங்கினான். முப்படை வீரர்களும் அதிகாரிகளும் அளித்த மரியாதை அணிவகுப்பை ஏற்றுக் கொண்டான். உயர் அதிகாரிகள் பின் தொடரக் காத்திருக்கும் ஊர்வலக் காரை நோக்கி நடந்தான். நூற்றுக்கணக்கானவர்கள் பின்தொடர ஜீன்ஸ் ஏறி நின்ற திறந்த கார் விமான தளத்திலிருந்து பாரிஸ் நகரை நோக்கிக் கிளம்பியது.

ஹோம்ஸும் அவனது கூட்டாளிகளும், சிறந்த முறையில் சில ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தார்கள். ஒவ்வொரு பிரதான சதுக்கத்திலும் ஏராளமான ரோஜா மலர்களை ஜீன்ஸ்மீது சொரிய ஏற்பாடு செய்திருந்தனர். வீடுகளின் மாடிகளிலும் ஜன்னல்களிலும் திரளான மக்கள் கூடி நின்று தங்கள் தேசியக் கொடியைப் பிடித்து ஆட்டி, ''வருக! வருக!'' என்று வாழ்த்துத் தெரிவித்து மகிழ்ந்தார்கள். பாரிஸ் நகரமே இந்த வரவேற்புக்குத் திரண்டெழுந்திருந்தது.

பாரிஸ் நகர எல்லையில் ஒரு மண்டபத்தில் ரத்தினக் கம்பளங்கள் விரித்து ஜீன்ஸின் வரவேற்புக்கு ஏற்பாடாகியிருந்தது. பிரஞ்சு மந்திரி சபையைச் சேர்ந்தவர் ஒருவர் ஜீன்ஸுக்குப் பத்து லட்சத்தி ஓராவது ஆசாமி என்ற விருதை வழங்கிக் கௌரவித்தார். விருந்து ஒன்றும் நடந்தது.

ஜீன்ஸைப் பாரிஸிலிருந்து அறுநூறு மைல்களுக்கு அப்பாலிருந்த அவனுடைய சொந்த ஊரான லியானுக்கு அனுப்பி வைப்பதாக ஏற்பாடு. பிரஞ்சு மக்களுக்கு உற்சாகம் கரைபுரண்டு ஓடியது. ஜீன்ஸை அவன் சொந்த ஊர் வரை இப்படிக் கார் ஊர்வலமாகவே கொண்டு சேர்க்க முனைந்தார்கள். விமான தளத்திலிருந்து நகர் வரை வந்த கார்களில் பல, லியானை நோக்கியும் கிளம்பி விட்டன. பிரெஞ்சு நாட்டின் சரித்திரத்திலேயே இதுபோன்ற ஊர்வலம் கிடையாது என்ற முறையில் ஜீன்ஸை, லியான் கொண்டு போய்ச் சேர்த்து விட்டுத்தான் ஹோம்ஸ் பாரிஸ் திரும்பினான்.

பிரெஞ்சு மக்களுக்கு ஒரே ஆனந்தம். அமெரிக்கர்கள் எதையும் செய்யக் கூடியவர்கள் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு ஏற்பட்டது.

ஜீன்ஸ், பத்து லட்சத்தி ஒன்றாவது ஆசாமியுமில்லை! பரிவர்த்தனைக்கான யுத்தக் கைதியும் இல்லை என்ற விஷயம் ஹோம்ஸ் உள்படச் சில அமெரிக்க, பிரெஞ்சு அதிகாரிகளுக்குத்தான் தெரியும்! ஆனால் பொது மக்களின் நம்பிக்கையைப் பலப்படுத்த அமெரிக்கர்கள் இந்தப் போலி நாடகம் ஆட வேண்டியிருந்தது! ஜீன்ஸ் கொடுத்து வைத்தவன்!

[ஆதாரம்: ஆர்ப்பெர் மேகஸைனில் லாரென்ஸ் லக்போர் எழுதிய கட்டுரை]


Surf
AMAZING BLUE POWDER
WHITEST WASH




## அத்தியாயம் 35
## பணநாயகம்

**வா**டகைக்கு எடுத்த ஒரு பழங் காலத்திய கார், 'செகண்ட் ஹாண்ட்'டில் வாங்கிய ஒரு மோட்டார் சைக்கிள் — இவைதாம் தங்கப்பனுக்குத் தேர்தலை முன்னிட்டுப் பயன்பட்ட வாகனங்கள். மோட்டார் சைக்கிளை, தான் பல இடங்களுக்குப் போய்வரப் பயன்படுத்திக் கொண்டு, வயது முதிர்ந்தவரும் உடல் தளர்ச்சியுற்றிருந்தவருமான மாருதியின் உபயோகத்துக்குக் காரைத் தந்திருந்தான் தங்கப்பன். அவனுக்கென உழைக்க மாருதியைத் தவிர சொற்பப் பேர்களே இருந்தபடியால் ஒரே கிராமத்துக்கு இரண்டு அல்லது மூன்று பேர்கள் சேர்ந்தாற்போல் போவது இல்லை. ஒவ்வொருவரும் தனித் தனியாய்ப் பிரிந்து முன்கூட்டியே திட்டமிட்டிருந்தபடி பல்வேறு திக்குகளில் சென்றனர். இரவு பகலென்று பாராமல் வீடுகளிலெல்லாம் விளக்குகள் அணைந்து முன் வாசல் கதவுகளும் தாளிடப்படும் வரையில் படியேறி இறங்கிப் பலரைப் பார்த்தார்கள்.

இரவு நேரத்தில் இவ்விதம் மாருதி தனியாகச் சிங்கன்பாளையம் நோக்கிச் சென்று கொண்டிருக்கையில்தான் வழியில் சாலை மத்தியில் குறுக்காக ஒரு பெரிய மரம் விழுந்து கிடப்பதைக் காரின் முன் விளக்கு ஒளியில் கண்டார்.

'அட கடவுளே! இதைத் தாண்டிச் செல்லவும் முடியாது, தூக்கி அப்புறப்படுத்தவும் நமக்குச் சக்தியில்லையே, என்ன செய்வது? என்று யோசித்தவாறு காரின் வேகத்தைத் தணித்தார். சாலையின் பக்கத்தில் உள்ள நிலப்பரப்பு சுமாரான சமதரையாக இருந்தால் அதில் காரைப் பாதையை விட்டு இறக்கி மரத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு போய்விடலாம். இப்படிக் கருதியவராக மோட்டாரை இடது பக்க ஓரமாய்ச் சற்றுக் கோணலாகவே நிறுத்தி முன் விளக்கின் வெளிச்சத்தில் அந்தப் பகுதியை ஆராய்ந்தார்.

அதே சமயத்தில் அவர் மூளையில் ஓர் எண்ணம் 'பளிச்'சிட்டது. 'சாலையின் குறுக்கே மரம் விழுந்து கிடப்பானேன்? இப்போது பலமான காற்றோ புயலோ ஏதும் வீசவில்லையே? அதிலும் இது இன்னமும் இளமை மாறாத பசுமையான மரமல்லவா? யாரேனும் இதனை வெட்டிச் சாய்த்துத்தானிருக்க வேண்டும்!' இவ்வாறு அவர் தீர்மானித்த

தந்து ஏற்றுற்போல் கோடரியால் செதுக்கிய அடிமரத்தின் பளபளப்பான பகுதிகளை அவரால் காண முடிந்தது. கப்பும் கிளையும் இலையும் தழையும் சாலையின் வலப்புற ஓரம் கிடந்தன. 'யார், எதற்காக இவ்விதம் செய்திருக்கிறார்கள்?' ஏதோ ஒரு விதத்தில் ஆபத்து தம்மைச் சூழவிருப்பதை உணர்ந்தார் மாருதி.

காரின் 'கியரை' 'ரிவர்ஸில்' போட்டுப் பின்னேக்கிச் சென்று பின்னர் ஒடித்துத் திருப்பிக் கொண்டு வந்த வழியே சென்று விட முடிவு செய்தார். ஆனால் எண்ணத்தைச் செயலாக்க முற்படுமுன்னரே அவருக்குப் பின்பக்கத்திலிருந்து இருளில் பதுங்கி வந்த உருவங்கள் இரண்டு காரின் பின்புறக் கதவுகளைத் திறந்துகொண்டு விருட்டென்று உள்ளே ஏறி அமர்ந்து கொண்டன.

''வாத்தியாரே! மரியாதையா சொல்றபடி கேட்டுப்புடுங்க; வம்பு தும்பு ஏதும் வைச்சுக்கிடாதீங்க; அப்புறம் உங்க உசிருக்கே ஆபத்து!'' என்ற எச்சரிக்கையும் பிறந்தது. கூரிய கத்தி முனை தமது கழுத்தில் இலேசாகக் கீறுவது போல் அழுந்துவதை உணர்ந்தார் மாருதி.

சாவுக்குப் பயந்தவரல்ல அவர். இனி உயிரோடிருந்து சாதிக்க வேண்டிய காரியங்கள், செய்து முடிக்கவேண்டிய கடமைகள் என்று எதுவும் பிரமாதமாகப் பாக்கியிருப்பதாயும் அவர் கருதவில்லை. வயதாகிக்கொண்டு வருகிறது. என்றாவது ஒரு நாள் கண்ணை மூடவேண்டியதுதானே என்ற மன நிலைக்கு அவர் வந்து பல மாதங்களாகி விட்டிருந்தன. எனினும் இப்போது அவர் இந்தத் திருட்டுப் பயல்களின் கரங்களால் மடிய விரும்பவில்லை. காலம் வரும்போது, கடவுள் அழைக்கும்போது புறப்பட அவர் தயார் தான். ஆனால் இப்போது அனாதைப் பிணமாகச் சாலை ஓரத்தில் விழுந்து கிடப்பானேன்? கூடுமானால் இதனைத் தவிர்க்க நினைத்து அவர் அந்தக் குண்டர்களின் பேச்சுக்குச் செவி சாய்த்தார்.

பின்னால் இருந்த இருவரில் ஒருவன் கஷ்டப்பட்டுக் குரலை மாற்றிக் கொண்டு பேசுவதை அவர் அறியாமல் இல்லை. அவர்கள் இத்தனை முன்னேற்பாடாக இருப்பது குறித்துத் தமக்குள் வியந்தவாறே காரைச் செலுத்தினார். அவர்கள் கட்டளை இட்டது போல் சாலையை விட்டுக் காரை இறக்கி இடப்புறம் கரடுமுரடான பிரதேசத்தில் ஓட்டிப் போனார்.

அவரால் தமது தலையைத் திருப்பிப் பார்க்க முடியவில்லை. அவரெதிரே இருந்த நிலைக் கண்ணாடியிலும் இருள் காரணமாக ஏதொன்றும் தெரியவில்லை. இருந்தபோதிலும் சாலையில் கிடந்த மரத்தை வேறு சிலர் சிரமப்பட்டு அப்புறப்படுத்துவது போல் அவருக்குத் தோன்றியது. அவ்விடத்திலிருந்து சற்றுத் தொலைவு வந்துவிட்டதாலும் மூன்றாவது கியரில் ஓடிக் கொண்டிருந்த கார் வேறு இரைச்சலிட்டுக் கொண்டிருந்ததாலும் மரம் நகர்த்தப்படுகிற சத்தம் மிக இலேசாகத் தான் கேட்டது.

'அந்தச் சாலையில் போக்குவரத்து அதிகம் கிடையாது. அந்தத் தைரியத்தில்தான் இந்தக் குண்டர்களும் அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். என்றாலும் தப்பித் தவறி அவ்வழியே செல்லக் கூடிய மாட்டு வண்டியோ சைக்கிளோ அல்லது காரோ மேலே போக முடியாமல் நிற்க, அதில் பிரயாணம் செய்பவர்களின் கண்களில் அக்கம் பக்கத்தில் நடப்பது தெரிந்து விடக் கூடாதே என்கிற கவலையும் இந்தக் கள்ளர்களுக்கு இல்லாமலா போகும்? ஆகவே தான் பாதையில் போகும் வாகனம் நில்லாமல் சென்றுவிட அம்மரத்தை உடனுக்குடன் அகற்றி விட்டார்கள்!'

மாருதிக்கு இதையெல்லாம் ஊகிப்பது கடினமாயில்லை...

''இறங்கு'' என்று அதிகாரம் செய்தது ஒரு குரல். இருளோடு இருளாக மாருதியின் கார் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட அவரை நடத்தி அழைத்துச் சென்

## உபகாரி உக்கண்டன்



ளர்கள். கருமையான சிறு குன்று போல் தென்பட்ட ஒரு பெரிய பாறைக்குப் பின்னால் போய்ச் சேர்ந்தார்கள். பாறையின் மறைவில் ஒரு கார் நிற்பதைக் கண்டார் மாருதி. அதன் உட்புற விளக்கு மங்கலான ஒளிசிந்தியது. 'நெம்பர் பிளேட்'டைப் பார்க்க முடியாதபடி அதனை ஒரு துணியினால் சுற்றிக் கட்டியிருந்தார்கள். எங்கு பார்த்தாலும் ஏராளமாகவும், சர்வ சாதாரணமாகவும், யாரும் காணக்கூடிய 'பியட்' கார்தான் அது. ஆகவே அதனை, பின்னால் தாம் அடையாளம் கண்டுபிடிப்பதென்பதும் சாத்தியமில்லை என்பதையும் தெரிந்து கொண்டார் மாருதி. தம்மைச் சுற்றிலுமிருப்பவர்கள் நெற்றியை மறைத்துப் பெரிய முண்டாக கட்டியிருப்பதையும் மேல் துண்டால் கண்ணைத் தவிர முகத்தை முழுமையாக மறைத்துக் கொண்டிருப்பதையும் பார்த்தார்.

"என்னை எதுக்காக இங்கே இழுத்துக்கிட்டு வந்தீங்க? நான் ஏழை; காரும் இரவல்தான். என்னிடம் பணம் ஒன்றும் அதிகமாகக் கிடையாது. ஏதோ ஐந்தோ பத்தோ தேறலாம்; அவ்வளவுதான். இந்தப் பிச்சைக் காசுக்காக நீங்க இத்தனை சிரமப்படுவதைப் பார்த்தால் பரிதாபமா இருக்குது!"

அவர்களில் தலைவனாகத் தென்பட்டவன் பலமாக, அட்டகாசமாகச் சிரித்தான். "எனக்குப் பிச்சை போடத் துணியவனாயா நீ?" என்று கேட்டவாறே புறங்கையால் அவர் கன்னத்தில் ஓங்கி அறைந்தான். "தரித்திரப் பயலே! யாருக்கடா வேணும் உன் செல்லாக் காசு?" என்று கூறி மீண்டும் அறைந்தான். அதை அடுத்து அவர் முதுகிலும் நெஞ்சிலும் தலையிலும் காலிலும் கையிலும் தோளிலுமாகப் பலமான குத்துக்களும் அடி உதைகளும் விழுந்தன.

'சாவை மனமுவந்து வரவேற்பதென்றாலும் இவர்கள் கையால் மடிவானேன்' என்று சில நிமிஷங்களுக்கு முன்னர்தான் கருதிய மாருதி இப்போது 'இப்படி நாலைந்து பேர்களாகச் சேர்ந்து தம்மைச் சித்திரவதை செய்வதைக் காட்டிலும் உடனடியாகத் தம்மைக் கொன்றுவிடக் கூடாதா' என்று ஏங்கவே ஆரம்பித்தார்; ஏனோ அவரால் அழமட்டும் தெரியவில்லை. கதறித் துடிக்க அவருக்குத் முடியவில்லை. 'ஐயோ! எந்த ஜென்மத்தில் என்ன பாவம் செய்தேனோ' என்று உள்ளம் மட்டும் உருகித் தவிக்க அந்தக் கொடுமையை ஒரு முனகல் கூட இன்றி அனுபவித்தார். "முருகா, முருகா" என்று முணு முணுத்த வாயில் குருதி வழிந்தது. கள்ளச் சாராயத்தின் வாடை பலமாக வீசிய பலரிடம் மாறி மாறித் தள்ளப்பட்டுத் தள்ளாடிய அவரது உடல் சோர்ந்து, தொய்ந்து சரிந்தது. எனினும் உதைகள் விழுவது மட்டும் இன்னும் நிற்கவில்லை.

"எனக்கா பணம் தரேன்னு சொன்னே? பரதேசிப் பயலே!" என்று அவர்களின் தலைவன் கரகரத்த குரலில் கறுவிவிட்டு, "டேய்! டிக்கியைத் திறடா!" என்று தன் சகா ஒருவனுக்கு உத்தரவிட்டான். பிறகு "எழுந்திரு வாத்தியாரே!" என்றபடி அவருடைய சட்டைக் காலரைப் பிடித்துத் தெம்பிழந்திருந்த அவரைத் தூக்கி நிற்க வைத்தான். தனக்கு முன்னால் அவரைத் தள்ளிக் கொண்டு நடந்தான். ஒரு டார்ச் லைட்டின் ஒளியிலே டிக்கியினுள்ளே பார்த்தார் மாருதி. காரின் பின் பக்கமுள்ள அந்தச் சிறிய அறை முழுவதும் கட்டுக் கட்டாகவும், உதிரியாகவும் ஐந்து ரூபாய் நோட்டுக்கள் குவிந்து கிடந்தன.

"பிச்சைக்காரப் பயலே நீட்டுடா கையை!" என்று கட்டளை பிறப்பித்தவன் 'ஜிவு ஜிவு' வென்று சிவந்திருந்த தன் கண்களால் மாருதியை வெறித்து நோக்கினான். அவனது சகாக்கள் மாருதியின் கைகளைப் பலவந்தமாகப் பிடித்து உயர்த்த, நீண்டிருந்த அக்கரங்களில் நோட்டுக்களை அள்ளி அள்ளிச் சொரிந்தான் அவன். "போதுமாடா? பிச்சை போதுமா? பணமுள்ள பக்கம் எதுன்னு இப்பவாவது தெரிஞ்சுக்கிட்டியா? எங்க பலத்தைப் புரிஞ்சுக்கிட்டியா?"

'கள்ளர்களல்ல அவர்கள்! கள்ளர்களினும் கேடு கெட்ட கயவர்கள்!' — மாருதிக்குத்





தெளிவாய்ப் புரிந்தது. அதுவரை சொட்டுக் கண்ணீர் சிந்தாத அவர் இப்போது அடக்க மாட்டாமல் பெருவாரியாகக் கன்னங்களில் வழிந்தோடும் அளவுக்குக் கண்ணீர் உகுத்தார். 'ஜனநாயகமா இது?'

"என்னடா பதிலைக் காணோம்?" என்று வினவியவன் எக்காளமிட்டுச் சிரித்தான். "எங்க பலம் இன்னும் விளங்கவில்லையா? விளங்க வைக்கவா?"

மாருதிக்குத் தலையைச் சுற்றியது. அவரைச் சூழ்ந்திருந்த இருள் அவர் சிந்தனையையும் ஆட்கொள்ளும் இறுதி விநாடிவரை அந்தப் பணப்பேய் சிரித்துக் கொண்டுதானிருந்தது!

## அத்தியாயம் 36

# பெண்மைக்குரிய மென்மை

"என்ன மாருதி ஸார்! அந்தப் பக்கமெல்லாம்தான் திருட்டுப் புரட்டு ஜாஸ்தின்னு உங்களுக்குத் தெரியுமே? நடு ராத்திரியிலே தனிச்சு நீங்க ஏன் போறீங்க?" என்று அன்பும் உரிமையும் கலந்ததுபோல் கடிந்து கொண்டே அறையினுள் நுழைந்தார் தினதயாளு. "தேர்தல் சமயமில்லையா? அதனாலே செலவுக்கு மடியிலே பணத்தை நிறையக் கட்டிக்கிட்டு இருப்பீங்க; உங்களை உதைச்சுப் பிடுங்கினால் ஒரு ஆயிரத்துக்குக் குறைவில்லாமல் கிடைக்கும் அப்படீன்னு நினைச்சிருப்பாங்க. நிஜத்திலே பறி கொடுத்தது எவ்வளவு; கணக்குத் தெரியுமில்லே?" என்று கேட்டவாறு ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தார்.

தினதயாளுவிடம் நடந்ததைச் சுருக்கமாக, அச்சமின்றிக் கூறினார் மாருதி. வலியினால் இக்கித் திக்கிப் பேசினாலும் உறுதி தொனித்தது.

கேட்கக் கேட்கத் தங்கப்பனின் நெஞ்சம் இந்த அக்கிரமத்தை எண்ணிக் கொதித்தது. மேனியோ மாருதியின் பெருமையை உணர்ந்து சிலிர்த்தது.

"தம்பியோட புகழ் வேகமா பரவுது ஒரு கோஷ்டிக்கு வயத்தைக் கலக்கியிருக்குது. அதனால்தான் அவங்க பணநாயகம் பற்றியும், குண்டர்களின் ராஜ்யம் பற்றியும் வாத்தியாருக்கே பாடம் கத்துக் கொடுக்கத் துணிஞ்சிருக்காங்க. முதலில் பயமுறுத்தியும் பிற்பாடு ஆசை காட்டியும் பார்த்திருக்காங்க" என்று கூறி முடித்தார் மாருதி.

தினதயாளு தங்கப்பனை ஏறிட்டு நோக்கினார். "தம்பி! ஸாருக்கு ஏற்பட்ட அதிர்ச்சியிலே கொஞ்சம் மூளைகூடக் கலங்கியிருக்கிறாப் போலத் தெரியுது. ஜாக்கிரதையா அவரைக் கவனிச்சுக்கிடணும் நீ!" என்றார்.

"அவருக்கு ஒன்றும் பைத்தியமில்லே; நல்ல நினைப்போடுதான் இருக்கிறார்" என்று சீறிய தங்கப்பன், தொடர்ந்து "உங்களை... உங்களை..." என்று கறுவியபடியே கைகளைப் பிசைந்து கொண்டான். பற்களை நறநறவென்று கடித்தான். மாருதி அவனைப் பக்கத்தில் வருமாறு அழைத்தார். கட்டிலில் அமரச் செய்து கட்டுப் போட்டிருந்த தமது வலது கையைச் சிரமப்பட்டுத் தூக்கி அவன் மடிமீது கிடத்தினார். பிறகு தினதயாளுவுக்குக் கேட்கிற மாதிரியாக உரக்கவே பேசினார்: "தம்பி! என்னால் எதையும் நிரூபிக்க முடியாது! அடிச்சவங்களை அடையாளம் காட்டுவதும் சாத்தியமில்லே. சிதறிய பணத்தையோ, கார்கள் போய் வந்ததற்கான சுவடுகளையோகூட அந்தப் பகுதியில் இப்போ யாராலும் காண முடியாது. முன்னேற்பாடா அதையெல்லாம் கவனிக்க ஆவன செய்திருப்பாங்க. வெட்டிச் சாய்த்த மரத்தையும் பாதிக்கு மேலே கொண்டு போயிருப்பாங்க. யாரோ விறகுக்காகப் புறம்போக்கு மரத்தை வெட்டிச் சாய்த்துவிட்டான் என்று சம்பந்தப்பட்ட சர்க்கார் இலாகா குறிச்சுக்கிடும். கடைசியில் நான் பைத்தியம் பிடிச்சு உளறுகிறேன் என்பதே ஊராரைப் பொறுத்தவரை உண்மையாகிவிடும். ஏன், என்னையேகூட அதை நம்ப வைச்சாலும் அதிசயப்படறத்துக்கில்லே. அதனாலே நீ நடந்ததையெல்லாம் மறந்துடறதுதான் நல்லது."

"எப்படி சார் மறப்பேன்?" எனக் கதறினான் தங்கப்பன். "மாட்டேன், இந்த அநியாயத்தை என்னால் பொறுக்கவே முடியாது."

"உண்மையில் நடந்ததை நான் சொல்கிறேன் தம்பி!" என்றார் தினதயாளு. "என்னைச் சேர்ந்தவங்க மூணு பேர் 'எலக்ஷன் கான்வாஸிங்'குக்காக ஜீப்பிலே போய்க்கிட்டு இருந்திருக்காங்க. அப்போ ஒரு கார் பாதை ஓரமா நிற்பதைக் கண்டிருக்காங்க. 'மாருதி ஸார் ஓட்டி வருகிற தன்னு மாடல் வண்டி மாதிரி இருக்குதே' என்றானாம் ஒருத்தன். எதுக்கும் பழுதாயிடுச்சோ என்னமோ, இறங்கிப் பார்க்கலாம்னு வண்டியை நிறுத்தியிருக்காங்க. கிட்டத்திலே போனால் இவர் காருக்குள்ளே மயங்கி விழுந்து கிடக்கிறார். குளமாட்டமா ரத்தம் வேறே. பயந்து பதறிக்கிட்டு அவங்க ஜீப்பிலேயே இவரை ஏற்றி, மடியில் படுக்க வைச்சுக்கிட்டு இங்கே-கோவை ஆஸ்பத்திரிக்கு அழைச்சுக்கிட்டு வந்திருக்காங்க. அப்புறமா சத்தியபுரிக்குப் போன் பண்ணி எனக்குத் தகவல் தெரிவிச்சிருக்காங்க.

"நான் அவங்களை நேரே உன்னிடம் அனுப்பி வைச்சேன். ராத்திரி மருதுபாளையத்திலே நீ பேசறதாகப் 'புரோகிராம்' போட்டிருந்தது எனக்குத் தெரியும். அங்கே தான் வந்து பிடிச்சாங்களா உன்னை?"

தங்கப்பனை நோக்கி இவ்விதம் அவர் பேசி ஓய்ந்ததும், அவன் பதிலுக்கு மெல்லத் தலையசைத்தான். "இல்லே, நான் அங்கே இருக்கவில்லை. பக்கத்திலே கண்ணபுரத்துக்

குப் போயிருந்தேன். மருதுபாளையத்திலே இருந்த என் ஆள் கதிர்வேலு விஷயம் தெரிஞ்சதும் அதே ஜீப்பிலே கண்ணபுரத்துக்கு வந்து இறங்கிக்கிட்டான். பிறகு நாங்க இரண்டு பேருமா என் மோட்டார் சைக்கிளிலே இங்கே வந்து சேர்ந்தோம்.''

''நடு நிசியிலே மோட்டார் சைக்கிளிலே அத்தனை வேகமாக வருவானேன், தம்பி? அதே ஜீப்பில் ஏறியே நீரும் வந்திருக்கலாமே?'' என்ற தீனதயாளு குரலில் அன்பைக் குழைத்தார்.

''ஆஹா! நீங்க இப்போ என்கிட்ட காட்டுகிற பரிவில் கால்வாசியேனும் மாருதியிடம் காட்டியிருந்தால் இந்தக் கிழவருக்கு இந்தக் கதி நேர்ந்திருக்காதே!'' என்று கூறினான் தங்கப்பன்.

''தம்பி!'' அதட்டும் குரலில் அழைத்தார் தீனதயாளு. ''என்ன சொல்கிறாய் நீ?'' எனக் கடுமையாகக் கேட்டார்.

மாருதி காயம் பட்ட தமது கரங்களில் எதையுமே உயர்த்தித் தங்கப்பனின் வாயைப் பொத்த இயலாதவராய்ச் செயலிழந்து கிடந்தார். ''தம்பி! அளந்து பேசு!'' என்ற அவரது கோரிக்கைக்கும் மேலாகத் தங்கப்பனின் குரல் ஒலித்தது: ''முகத்தை மூடி மறைச்சுக்கிட்டிருந்த அந்தக் கோழைங்களிலே பாதிப் பேர் அந்த வேஷத்தைக் கலைச்சுவிட்டு மறைவாக நின்ற ஜீப்பிலே மாருதியைத் தூக்கிப் போட்டுக்கிட்டுக் கோயமுத்தூருக்குக் கொண்டு வரலென்னும் பாக்கிப் பாதிப்பேர் சுற்று வட்டாரத்திலே போலீசுக்குத் தடயங்கள் ஏதும் அகப்படாமலிருக்கிற மாதிரி எல்லாத்தையும் சரி செய்துவிட்டு பியட் காரிலே பறந்து ஓடிவிடலென்னும் நீங்க சத்தியம் பண்ணுங்க என்கிறேன்.''

தீனதயாளு எழுந்த வேகத்தில் நாற்காலி பின்னால் சாய்ந்து விழுந்தது. ''தம்பி, நீ அளவு மீறிட்டே! எனக்கு மாருதி ஸார் பற்றி டெலிபோன் வந்த சமயம் ஒரு டிரைவர்கூட வீட்டில் இல்லை. மூலைக்கொருத்தரு கார்களைக் கொண்டு போயிருந்தாங்க பிரசாரத்துக்கான ஆளுங்களோடே. இருந்தாலும் அநுதாபம் காரணமா அர்த்த ராத்திரியானாலும் பரவாயில்லைன்னு தூங்கிக்கிட்டிருந்த உஷாவைத் தட்டி எழுப்பி கார் ஓட்டச் சொல்லி இங்கே வந்திருக்கேன். அப்படி வந்ததுக்கு நல்ல பரிசு கிடைச்சுப் போச்சு எனக்கு!''

''உஷா வந்திருக்காளா?'' என்றான் தங்கப்பன்.

''ஆமாம். காரிலே எனக்காகக் காத்திருக்கு. நான் வரேன்.''

''ஒரு நிமிஷம் உட்காருங்க. அவளை அழைச்சுக்கிட்டு வரேன். மாருதி ஸாரைப் பார்த்துட்டுப் போகட்டும்'' என்ற தங்கப்பன் அவர் பதிலுக்குக் காத்திராமல் விடுவிடுவென்று வேகமாக நடந்து போனான்.

'போர்டிகோ'வில் காருக்குள்ளே நெற்றியில் கரம் பதித்தவாறு உட்கார்ந்திருந்தாள் உஷா. 'சடக்'கென்று அவன் காரின் கதவைத் திறந்ததும் திடுக்கிட்டு நிமிர்ந்து பீதியுடன் காற்றைத் திறந்த வாய் வழியாக உள்ளுக்கிழுத்துக் கண்களை அகல விரித்து மிரண்ட பார்வையுடன் அவனை நோக்கினாள்.

''ஏன் உஷா? எதற்காகப் பயப்படுகிறாய்?'' என்றான் தங்கப்பன். ''எந்தக் காரியத்தையும் செய்யத் துணிச்சல் உள்ளவள் அந்தச் செயல்களின் விளைவைப் பார்க்க மட்டும் ஏன் பயப்பட வேண்டும்? தைரியமாக மாருதியை வந்து பார், உஷா!'' என்று கூறியபடி அவள் கரத்தைப் பற்றி அவளை வெளியே இழுத்தான் தங்கப்பன்.

உஷா மறுக்கவோ தயங்கவோ அவன் இடம் தரவில்லை. அவள் கையை இறுகப் பற்றி மளமளவென்று இழுத்துச் சென்றான். இரவில் ஆஸ்பத்திரியில் கூச்சலிடவும் முடியாமல், தன் கரத்தை விடுவித்துக்கொள்ளவும் சக்தி இல்லாமல் அவள் அவனைப் பின் தொடர்ந்து வேறு வழியின்றி ஓட்டமும் நடையுமாய்ச் சென்றாள்.

மாருதி படுத்திருந்த அறைக்குள் அவளைத் தள்ளினான் தங்கப்பன். பின்னோடு தானும் நுழைந்தான். ''பார், உஷா! மாருதியை நன்றாகப் பார்!'' என்றான். ''இப்போதாவது உன் கல் நெஞ்சம் கரைகிறதா? இரும்பாக்கிக் கொண்டிருப்பதாய்ப் பெருமைப்பட்டாயே, அந்த இதயத்தில் பெண்மைக்குரிய மென்மை லவலேசமாவது இருப்பதை இப்போதேனும் உணருகிறாயா நீ?'' என்று கேட்டான்.

உஷா தயங்கித் தயங்கித் தலை நிமிர்ந்தாள். கிழித்தெறியப்பட்ட நார் போலக் கட்டிலில் கிடந்த மாருதியை அவள் விழிகள் விநாடிப் பொழுது சந்தித்தன. அடுத்த கணம் அவள் தான் வந்த திசையிலேயே திரும்பி ஓடிச் சென்றாள்.

திகைப்பிலிருந்து விடுபட்ட தீனதயாளு, ''தம்பி! பழைய தோஷம், உன்மேலே மான நஷ்ட வழக்குத் தொடராமல் விடறேன். இனிமே வரம்பு மீறி ஒரு வார்த்தை பேசினே, நான் தாளமாட்டேன்; உன்னைத் தொலைச்சுப்புடுவேன் தொலைச்சு! பத்திரம்!'' என்று உறுமிவிட்டுத் தம் அருமை மகளைப் பின் தொடர்ந்தார்.

''மாருதி ஸார்! ஒரே நிமிஷம். இதோ வந்துவிடுகிறேன்'' என்று கூறிவிட்டு அவர்கள் அறியாதவாறு அவ்விருவரையும் பின் தொடர்ந்தான் தங்கப்பன்.

வாசலில் காரில் உட்கார்ந்திருந்த உஷா விம்மி விம்மி அழுவதையும், அவள் பக்கத்தில் அமர்ந்திருந்த தீனதயாளு, ''ஒன்றுமில்லேம்மா. பயந்துட்டியா? இன்னும் இரண்டு நாட்களிலே அந்த மனுஷன் எழுந்து நடக்க ஆரம்பிச்சுடுவான். கவலைப்படாதே!'' என்று கூறி அவளைத் தேற்றுவதையும் ஒரு தூண் மறைவில் இருந்தபடி தங்கப்பனால் கேட்க முடிந்தது.

உஷாவின் விசும்பல் ஒலி குறைந்து, அவள் காரைக் கிளப்பிக் கொண்டு செல்லும் வரை தங்கப்பன் அவ்விடத்தை விட்டு நகரவில்லை. அவள் அழுகுரலைக் கேட்டு அவன் இன்புறவும் தவறவில்லை! (தொடரும்)



ஸ்ரீ டி. என். என். ஸ்வாமி அவர்கள் குமாரத்தி செள. ராதாவுக்கும் ஸ்ரீ கே. வி. கிட்டு அவர்களின் குமாரர் சிரஞ்சீவி பாலச்சந்திரன் அவர்களுக்கும் திருமணம் பம்பாயில் சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்
—அநுத்தமா

**பா**லமும் சாவித்திரியும் எப்போதும் சந்தோஷமாகவும் திருப்தியுடனும் இருந்தார்கள். தங்கள் அக்காவின் பள்ளிக்கூடத்திலேயே தாங்களும் படிப்பதில் பெருமை கொண்டிருந்தார்கள். யாருக்கும் ஒரு குறையுமின்றி எல்லாம் சரியாக நடந்து கொண்டிருக்கையில் திடீரென்று ஒரு நாள் பள்ளியிலிருந்து திரும்பும்போது பாலம் பிழியப் பிழிய அழுது கொண்டு வந்ததும் விசாலாட்சிக்கு ரொம்பவும் கவலையாகப் போய் விட்டது.

"என்ன சமாசாரம்?" என்று அவள் கேட்டாள். குழந்தை இவ்வளவு கலவரம் அடைந்ததைத் தாயார் எப்பொழுதுமே பார்த்ததில்லை.

பாலம் விசித்துக் கொண்டேயிருந்தாள். சின்னஞ் சிறிசு அவள். வயதுக்கேற்ற நல்ல வளர்ச்சியின்றிச் சிறு உருவம் படைத்தவள்தான். எனினும், பாலம் சதா சிரிப்பதற்கே பிறந்தவள் போன்ற அழகிய வதனம் கொண்டிருந்தாள். இப்பொழுது அவள் தன் தாயின் மடியில் முகத்தைப் புதைத்து உடல் குலுங்க, துக்கம் மிக அழுது கொண்டிருந்தாள்.

"என்னது?" என்று அவள் தாயார் மென்மையையும் அன்பையும் குரலில் குழைத்துக் கேட்டாள்.

பாலம் நிமிர்ந்தாள். "இந்தத் தலைமை..." அவள் பேச்சுத் தடைப்பட்டது. முகத்தை அம்மாவின் புடவை மடிப்புக்களுக்கிடையில் இடுக்கிக் கொண்டாள்.

தலைமை ஆசிரியையைத்தான் குறிப்பிடுகிறாள் என்று விசாலாட்சி எண்ணினாள். இருந்தாலும் ஆங்கில மாதான மிஸ் பாட்டர்ஸன் என்னதான் சொல்லியிருக்கக் கூடும்? அல்லது இவ்வளவு வேதனை அளிக்கும்படி பாலம் தான் என்ன செய்திருக்க முடியும்?

தாயார் வற்புறுத்திக் கேட்டாள்: "என்னதான் நடந்தது? நீ ஏதாவது தப்புச் செய்தாயா? தண்டனைக்காக அவள் அறைக்குப் போக வேண்டியிருந்ததா?"

"இல்லை, இல்லை, அதைவிட மோசம். பாலம் இப்போது தன்னை விடுவித்துக் கொண்டு தாயின் முகத்தைப் பார்த்துப் பேசினாள். அவள் வதனத்தில் சினமும் வருத்தமும் தோன்றின. "அவள்... அவள் சுப்புலக்ஷ்மியை ஒரு கெட்ட வார்த்தையினால் குறிப்பிட்டாள்!" என்றாள்.

"இருக்காதே!"

"ஆமாம், உண்மையாக."

பள்ளியில் நடந்ததை விவரித்து விட்டு பாலம் அரற்றினாள்: "அம்மா, அக்கா விதவை இல்லை அல்லவா? அப்படிச் சொல்வது துஷ்டத்தனம் தானே! யாராயிருந்தால்தான் என்ன? நம் அக்காவை இந்த மாதிரிக் கெட்ட பெயரால் அழைக்கலாமா?"

அது மிகவும் கெட்ட வார்த்தைதான். பண்புள்ள பெண்கள் உபயோகப்படுத்தாத வார்த்தைதான். இருப்பினும் நற்குணம் படைத்த

வளும், புத்திசாலியும், பிறரைச் சுடு சொல்லால் புண்படுத்தாதவளுமான சுப்புலக்ஷ்மியைப் பார்த்து அச்சொல்லை உபயோகிக்கும் போது, மிஸ் பார்ட்டர் ஸனின் குரலில் மிக்க சந்தோஷமும், பெருமையும் தொனித்தது போல் தோன்றியதே ஏன்?

யாரும் விளக்காவிட்டாலும், விதவையாக இருப்பது என்றால் என்ன என்பதை சுப்புலக்ஷ்மி தானாகவே உணரலானாள். தன்னுடைய வாழ்க்கை சந்தோஷமானதாக விளங்கியது; தனக்கு ஆதரவு அளிக்க நெருங்கிய பந்துக்கள் இருந்தார்கள்; இருந்தாலும் தனக்குத் தெரிந்த இதர குடும்பங்களிலும் கணவனை இழந்த பெண்கள் அநேகர் இருக்கிறார்கள் என்ற உணர்வும் அவளுக்கு ஏற்பட்டது. அவர்களை அவள் சந்தித்ததில்லை. அவர்கள் தத்தம் பெற்றோர்களின் வீட்டில் புறக்கடையிலும், சமையலறையிலும் ஒளி குன்றிய முகத்துடன், அரை வயிறு உண்டு, அதிக வேலை செய்து, எதிர்காலம் என்று ஏதுமற்ற ஒரு சூன்யத்தில் வாழ்ந்தார்கள். தன் தாய் தந்தையர் தனக்காகச் செய்த ஏற்பாட்டையெல்லாம் சர்வ சாதாரணமாகவே சுப்புலக்ஷ்மி இது வரையில் ஏற்று வந்தாள். இவ்விதத்தில் அவள் பெரிய அதிர்ஷ்டசாலி, பாக்கியசாலி என்று யாரும் அவளுக்குச் சொன்னதில்லை. ஆனால் இப்போது அவள் தானாகவே அதனை உணர ஆரம்பித்தாள்.

## 6

சகோதரி சுப்புலக்ஷ்மி அவர்கள் படித்து வந்த பி. டி. பள்ளிக்கூடத்தில் அந்நாளில் ஆங்கிலம் கற்றுக் கொடுத்த மிஸ் சாட்டர்டன் ஆங்கிலோ இந்திய மாது. ஸிஸ்டர் சுப்புலக்ஷ்மி அவர்களும் அவருக்குப் பின்வந்த பல தலைமுறைப் பெண்களும் அப்பழுக்கற்றுப் பேசவும், எழுதவும் மிஸ் சாட்டர்டனிடம் கற்றுக் கொண்டார்கள். அந்த அம்மாள் ஒரு பிறவி ஆசிரியையாக விளங்கினாள் என்றே அவர்கள் எல்லாரும் சொல்கிறார்கள். பெண்களுக்கு ஆங்கில இலக்கியத்திலே அத்தகையதொரு பற்றுதலை ஏற்படுத்திவிட்டு அவர்கள் இந்த ஜன்மத்தில் தாங்கள் நேரில் பார்க்கலாம் என்று நம்ப இயலாத மேனாட்டு இயற்கைக் காட்சிகளையும், மரங்களையும் செடி கொடிகளையும் புஷ்பங்களையும் கற்பனையில் காணும் பிரயத்தனத்தில் அவர்களை ஆழ்த்தி விடுவாளாம்.

ஆங்கிலம் அழகானதொரு மொழி என்பது பள்ளி நாட்களிலேயே சுப்புலக்ஷ்மியின் அபிப்பிராயம். ஆயின், ஆங்கிலேயர்களும், ஆங்கிலம் பேசும் பெண்களும், உபாத்தியாயினிகளும் தமிழும் அழகான மொழி தான் என்று உணர வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள். பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆங்கிலேய மகாகவி சாசர் (Chaucer) கேன்டர்பரி கதைகளை (Canterbury tales) எழுதினாரென்றால் அதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்க் கவிகள் இன்றைக்கும் எளிதில் பொருள் விளங்கக் கூடிய உயர்ந்த இலக்கியங்களைப் படைத்தார்கள். சுப்புலக்ஷ்மியின் தகப்பனாரைப் பின்பற்றிப் பல ஹிந்துப் பெற்றோர்கள் பி. டி. பள்ளிக்கூடத்தின் ஆங்கிலப் பகுதிக்குத் தம் பெண்களை அனுப்பி வைக்கும் போது, அவர்கள் தமக்குள் தம் தாய்பாஷையில் பேசிக் கொண்டால் அவர்கள் திட்டப்படுவதும், சில சமயம் தண்டிக்கப்படுவதும் முறையல்ல என்று அவள் கருதினாள்.

பி. டி. பள்ளிக்கூடத்தில் படித்த அநேகம் பெண்கள் லோயர் செகண்டரி பரீட்சையில் தேர்ச்சி பெற்றவுடன் பள்ளிப் படிப்புக்கே முற்றுப்புள்ளி வைத்து விடுவார்கள். இல்லையேல் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு தங்களை ஆசிரியைகளாக ஆக்கக்கூடிய ஆசிரியைப் பயிற்சிப் பகுதிக்குச் சென்று விடுவார்கள். விசேஷமான புத்திசாலித்தனம் உள்ளவர்களாகவோ அல்லது ஓரளவு பொருளாதார வசதி கொண்ட பெற்றோர்களை உடையவர்களாகவோ இருந்த மாணவிகள்தான் அந்தப் பள்ளியிலே தொடர்ந்து மெட்ரிகுலேஷனுக்குப் படித்தனர். சுப்புலக்ஷ்மி அவ்வாறு தொடர்ந்து படிக்கலானாள்.

1903ம் வருடம் சுப்புலக்ஷ்மிக்குப் பதினேழு வயதானபோது, அவள் தாயார் விசாலாட்சிக்கு மீண்டும் ஒரு குழந்தை பிறந்தது. எத்தனையோ ஆண்டுகளின் காலப்போக்கில் விசாலாட்சிக்கு ஆண் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை தளர்ந்து விட்டிருந்தபடியால் இந்தக் குழந்தையும் பெண்ணாக வாய்த்ததைக் கண்டு யாரும் ஏமாற்றம் அடையவில்லை. அந்தக் குழந்தைக்கு நித்யானந்தா என்று பெயர் சூட்டினார்கள். குடும்பத்தினர் அனைவருக்கும் அந்தக் குழந்தை மிகவும் செல்லமாகவும் அருமையாகவும் இருந்தது. ஐந்து சகோதரிமார்களுக்குள்ளும் அவள்தான் மிகவும் சாமர்த்தியசாலியாகத் திகழ்ந்து வந்தாள் என்று எல்லோரும் சொல்

# கவர்ச்சியுடன் இருப்பது எப்படி?



பிரமாதமான பருத்திப் ப்ரிண்ட் உடுத்திப் பாருங்கள். புகழ் மாலைகளாய் வந்து குவியும். பிரதியொரு நடை, மனோபாவம், சந்தர்ப்பம் ஆகியவற்றுக்கு ஏற்ற ப்ரிண்டுகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். சாயம் தோய்த்த ப்ளெயின் பாப்ளின் ரகங்கள் பல உள்ளன. டீக்காக, ஜிலுஜிலுவென, அதி கம்பீரமாகத் திகழ உதவுகின்றன. நீண்டகாலமும் உழைக்கின்றன. அணிந்து பார்க்கலாமே!

பருத்தி ப்ரிண்டோ, சாயம் தோய்த்த ப்ளெயின் பாப்ளினோ, எது வாங்கினாலும் ஸாயாஜி அல்லது சுபலக்ஷ்மி என்று குறிப்பிடுவது லாபகரமானது.

**ஸாயாஜி மில்ஸ் நெ.1(பரோடா) மற்றும் நெ.2(பம்பாய்)**
**சுபலக்ஷ்மி மில்ஸ் லிட். (கேம்பே)**

SHBI-BP-17 TM

# அசுத்தமான ரத்தமே சரும வியாதிகளின் காரணம்!






**சரும வியாதிகள் அகல—**

- ■ சருமத்தைப் பாதுகாத்து, கிருமிகளை ஒழிக்கக்கூடிய
- ■ உடம்பிலுள்ள ரத்தத்தைச் சுத்தப்படுத்தி சருமப் பகுதிகளுக்குப் புத்துயிர்ப்பு அளிக்கக்கூடிய வைத்தியம் தேவை. இதற்காக, டாக்டர் ரிச்லே (Dr. Richelet) என்ற பிரஞ்சு நிபுணர் மூன்று மருந்துகளைத் தயாரித்திருக்கிறார். குணமளிக்கும் தன்மைக்கு உலகப் புகழ் பெற்ற அவை:

**ரிச்லேஸ் பிளட் பியூரி:பையர் (RICHELET'S BLOOD PURIFIER)** சொறி சிரங்கு, கட்டிகள், முகப் பருக்கள், படை போன்ற பெரும்பாலான சரும வியாதிகள் அகலச் சிறந்த மருந்து. ரத்தத்தைச் சுத்தி செய்கிறது, விருத்தி செய்கிறது.

**கல்லாஸ் ஆயின்ட்மென்ட் (GALLA'S OINTMENT)** சொறிந்துச் சீழ் வடியும் சொறி சிரங்குகள், வெட்டுக் காயங்கள், புண்களுக்கு ஏற்ற மருந்து. சக்தி வாய்ந்த கிருமிநாசினி.

**ரிச்லேஸ் லாக்ஸட்டிவ் (RICHELET'S LAXATIVE)** மலச்சிக்கலை அகற்றுகிறது. ஜீரண சக்தி அதிகரிக்கச் செய்து, ஆகாரம் உடலோடு ஒட்டச்செய்கிறது. அதனால் ரத்தவிருத்தி ஏற்படுகிறது.

# ரிச்லேஸ்
## பிளட் பியூரி:பையர்

எல்லா மருந்துக் கடைகளிலும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்.
விவரங்கள் அறிவிக்கும் இலவச அறிவிப்புக்கு (FOLDER) எழுதுங்கள்.
இந்தியாவெங்கும் ஏஜண்டுகள் தேவை. விண்ணப்பிக்கவும்

**இந்தியாவில் ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:**

**மஹாஸ்வரி ஜெனரல் ஸ்டோர்ஸ்,**
19/35, பெரிய கடை வீதி, கோயமுத்தூர் - 1.

EP-MG 2

கிறார்கள். இரண்டாவது உலக யுத்தம் நடந்து வந்த சமயத்தில் அவள் மறைந்த சோக சம்பவத்தைப் பற்றிப் பேசுவ தென்றால் இன்றும்கூட அக் குடும்பத் தினரில் அனைவரும் துக்கம் தொண் டையை அடைக்கச் சிரமப்படுகிறார்கள்.

**பா**லம், சாவித்திரி ஆகியோரின் கணவன்மார்கள் அவர்களுடன் இருக்க வந்துவிட்டனர். இரண்டு பையன் களும் மருத்துவம் படித்துக்கொண் டிருந்தனர். இருவரும் புத்திசாலிகள்; உழைப்பாளிகள். ஆனால் என்ன கார ணமோ அவனுக்கேகூடத் தெரியவில்லை, ஸாண்டி முதல் வருடத் தேர்வில் தவறி விட்டான். தேர்வுக் குழுவினர் அநீதி இழைத்துவிட்டார்கள் என்ற நினைப்போ அல்லது தான் சிறுமைப் படுத்தப்பட்டதால் மிகவும் வருந்திய தாலோ அவன் சென்னை வைத்தியக் கல்லூரியில் மீண்டும் படிக்க மறுத்து விட்டான். தன் கல்வியைப் பூர்த்தி செய்யக் கல்கத்தா சர்வகலாசாலைக் குச் சென்றுவிட்டான். பாலமும் அவ னுடன் போனாள்.

எழும்பூரில் வாழ்க்கை எப்போதும் போல் அமைதியாக நடந்து கொண் டிருந்தது. ஒவ்வொரு வெள்ளிக்கிழமை காலையும் விசேஷ பூஜை இருக்கும். அப்போது சாவித்திரி நிவேதனத்தைத் தானே செய்வாள். பூஜை முடியும் வரை காப்பிகூட அருந்த மாட்டாள்.

பள்ளிக்கூடம் போகு முன் எவ் வளவுதான் வீட்டுப் பாடம் இருந் தாலும் சுப்புலக்ஷ்மி இப்பூஜை நியமங் களைக் காண ஒரு நிமிஷம் கூடத் தவற மாட்டாள்.

ஒரு நாள் ஸிஸ்டர் என்னிடம் சொன்னார்: "நான் பக்தி மிகுந்த வளாக இருந்தேன். என்னுடைய அப் பாவுடைய மாமா மிகவும் மேதையும் ஆஸ்திகருமான ஒருவர். அவர் என் னுடைய பதினாறாவது வயதில் எனக் குச் சிவமந்திரத்தை உபதேசித்தார். ஓங்காரத்தைப் பற்றி நீங்கள் கேள் விப்பட்டிருக்கிறீர்களா?"

"ஓ, பேஷாக" என்றேன் நான். மிகவும் சக்தி வாய்ந்தது, கூடமானது, வேதங்கள், உபநிஷதங்கள் எல்லாவற்றி னுடைய சாரமானது ஓம் என்ற மந் திரம் என்பதாகத் தொன்றுதொட்டுக் கருதப்பட்டு வருகிறது அல்லவா?

ஸிஸ்டர் தொடர்ந்து பேசினார். "என்னுடைய தாத்தா இதைக் கற்றுக் கொடுக்கும் போது சொன்னார்: 'பெண்கள் எப்பொழுதும் 'ஓம்' என்று உச்சரிக்கக் கூடாது. அது மிகவும்




புனிதமானது. அதற்குப் பதிலாகப் பெண்கள் 'உம்' என்றுதான் கூற வேண்டும்' என்று." ஸிஸ்டர் அதைப் பற்றி இப்பொழுது பேசும்போது தலையை ஒரு முறை ஏளனமாக ஆட்டி னார். அதைப் பார்க்கும்போது யௌவன வயதில் சுப்புலக்ஷ்மி கம்பீர மாகத் தோற்றமளித்தும் கூடவே அடக்கம் மிகுந்தவளாகவும் இருந் திருப்பாள்; வெளிப் பார்வைக்குப் பெரியோர்கள் சொல்லுக் கெல்லாம் கீழ்ப்படிவது போல் தோன்றினாலும் பிடிவாத குணமும் கொண்டிருந்திருப் பாள்; அவள் நெஞ்சில் பக்தி நிறைந்து இருந்தாலும் மனிதப் பிறவிக்குரிய உரிமைகள் என்று தான் கருதியவற் றைச் சற்றும் விட்டுக் கொடுக்க முன் வராதவளாயும் இருந்திருப்பாள் என் றெல்லாம் எனக்குத் தோன்றியது. சகோதரி பழைய ஞாபகங்களில் ஈடு பட்டுச் சிரித்தார். "அப்பொழுதே எப்போது பார்த்தாலும் எனக்குள் 'ஓம் ஓம்' என்றுதான் மனனம் செய் வேன். ஆண்டவன் முன்னிலையில் ஆண் களை விடப் பெண்கள் ஏன் தாழ வேண்டும் என்பதற்கு எனக்குக் கார ணம் ஒன்றும் புரியவில்லை."

அந்நாட்களில் அத்வைத வேதாந் தத்தைப் பற்றி அறிய முயன்று கொண்டிருந்தாள் சுப்புலக்ஷ்மி. சிறு

குழந்தையாக இருக்கும்போதே அவள் கற்பிக்கப்பட்டது என்னவென்றால் பல கடவுள்கள் இடையாது: ஒரே கடவுள் தான் உண்டு என்பதுதான். ஆனால் இந்தக்கொள்கையை எல்லா இந்துக்களும் ஒப்புக்கொள்வதில்லை. ''அத்வைதத்தை எல்லோராலும் எளிதில் புரிந்து கொண்டுவிட முடியாது'' என்று சகோதரி இன்று எனக்குச் சுட்டிக்காட்டினார். ''அன்றாட வாழ்க்கை அனுபவத்துக்கு ஒட்டி வராததால் பலருக்கு அது புரியாத, பிடிபடாத ஒரு பொருளாகவே இருக்கும். மாயை என்னும் கொள்கையும் எளிதில் கிரகிக்கக் கூடியதல்ல. நாம் அறிந்திருக்கும் இந்த உலகமே ஒரு பிரமைதான் என்பது எல்லோருக்குமே எளிதில் புரிந்து விடாது.'' சகோதரி சுப்புலட்சுமி சற்று நிறுத்தினார். நான் கிரகித்துக் கொள்கிறேனா என்று பார்ப்பது போல் குனிந்து கூர்ந்து நோக்கிப் பேச ஆரம்பித்தார். ''நம் கனவுகள்தான் எவ்வளவு நிஜம்போல் தோன்றுகின்றன! இங்கு இருப்பதெல்லாம் ஒரு மாயை, ஒரு கனவு என்று ஒருவாறு இறுதியில் நாம் அறிந்துகொள்ளும்போது ஆண்டவனோடு நாம் ஒன்றிவிடுவோம் என்பதைப் புரிந்து கொள்வதுதான் எத்தனை கடினமாக இருக்கிறது...''

இளம் வயதில் சுப்புலக்ஷ்மியின் கனவுகள் எல்லாம் தெளிவாக இருந்தன. சில சமயம் அவள் பகற் கனவு காண்பதும் உண்டு. ஆனால் நிறைய வேலைகள் இருந்ததால், சாதாரணமாகப் பகற் கனவு காணச் சமயம் கிடைக்காது. ஐரோப்பிய வரலாறு, பூகோளம், பௌதிகம், ரசாயனம், ஆங்கிலம், கணிதம் இவ்வளவும் படித்து வந்தாள். மெட்ரிகுலேஷன் பரீட்சை டிசம்பர் மாதம் நடந்தது. சுப்புலக்ஷ்மி பரீட்சை எழுத வேண்டியிருந்த வருடம் கோடை விடுமுறைக்குத் தெற்கு நோக்கிக் குடும்பம் சென்றபோது தன் புத்தகங்களையும் எடுத்துக்கொண்டு கிளம்பினாள்.

முதலில் பிரசித்தி பெற்ற குற்றாலம் நீர்வீழ்ச்சிக்குச் சென்றார்கள். அந்நாட்களில் இப்பொழுது போல் குற்றாலம் அவ்வளவு பிரபலம் அடையவில்லையாதலால் சுப்புலக்ஷ்மி அமைதியாகப் படிப்பதற்கும், குழந்தைகள் விளையாடுவதற்கும் தகுந்த நிம்மதி நிலவிய வீடு ஒன்று கிடைப்பது சுலபமாக இருந்தது. அவள் எப்போதும் படித்துக் கொண்டே யிருக்கவில்லை. ஆரவாரம் செய்துகொண்டும் நீராவி போன்றதேயான நுண்ணிய நீர்த் துளிகளைச் சிதற அடித்துக் கொண்டும், பாய்ந்து வரும் நீர்வீழ்ச்சி, ஒரு சமயம் வெண்பனி போன்று வெண்மையாகவும் ஒரு சமயம் ஆயிரம் வான வில்களைப் போல வண்ணங்களை வாரி இறைத்துப் பளபளத்துக் கொண்டும், காண்பதற்கு மிகவும் அழகாகவும் உற்சாகம் ஊட்டுவதாகவும் விளங்கியது. யாத்திரீகர்கள் நீர்வீழ்ச்சிக்கடியில் கொஞ்ச நேரம் இருந்து தங்கள் பாவங்களைக் கழுவிக் கொண்டு புனித ஸ்நானம் செய்வார்கள். பத்துப் பதினைந்து நிமிஷங்கள், ஏன் அரை மணி கூட சுப்புலக்ஷ்மிக்குப் போதாது. ஒரு சமயம் வேகமாகத் தாக்கியும், மற்றொரு சமயம் இதமாக அணைத்தும் விழும் அந்த விழ்ச்சியை அநுபவித்துக்கொண்டு மணிக்கணக்காக நிற்க வேண்டும் போல் அவளுக்குத் தோன்றும். அவள் வழக்கத்தை விடச் சிக்கிரம் எழுந்து, தன் படிப்பை முடித்துக் கொண்டு விடுவாள். அதன் பிறகு நாள் முழுவதும் நேரம் அவளுக்கே சொந்தம் தான்! அவள் பெற்றோர்களும் மகிழ்ச்சியுடன் அவளை இஷ்டப்படியெல்லாம் சுதந்திரமாக இருக்க விட்டார்கள். ஏதோ மந்திரஜாலபுரியில் இருப்பது போல் அவளைச் சொக்க வைத்த நாட்கள் அவை!

பிறகு அவள் தகப்பனார், குடும்பத்தினரை இன்னும் மேற்கே அழைத்துப் போனார். மலையாள நாட்டின் உப்பங்கழிகளில் படகில் சென்றபோது, அவளுக்கு மனோரம்மியமாக இருந்தது. மாயாஜாலங்கள் மிகுந்த ஒரு கனவுலகில் உலவி வருவது போன்ற இயற்கைக் காட்சிகள். படகோட்டிகளின் பாட்டு செவிகளில் ஒலிக்கவில்லையானால் அந்தக் காட்சிகளை உண்மையென்றே நம்ப முடியாது! ஒரு பக்கம் மரங்கள் அடர்ந்த பெரிய மலைகள் வானளாவ எழும்பும். மறு பக்கம் அரபிக் கடலை நோக்கி விரிந்த அகன்ற சமவெளி. நீரும் நிலப் பரப்பும், அடுத்தடுத்து ஒன்றையொன்று தழுவியும் ஒன்றோடொன்று பின்னிப் படர்ந்தும் விளங்கிய இந்தச் சமவெளியில் நீர் எது, நிலம் எது என்று தொலைவில் இருந்து பார்க்கும்போது கண்டுபிடிப்பதே கடினம்! ஏனெனில், சேப்பங் கிழங்கு, அன்னாசி போன்ற பயிர் வகைகள், வாழைத் தோட்டம், தென்னந் தோப்பு இவற்றுக்கும், உப்பங்கழிகளில் படரும் இவற்றின் பசுமையான நிழல், பிரதிபலிப்பு ஆகியவற்றுக்கும் இடையில் வித்தியாசமே தெரியாது. கொல்லத்துக்கும் திருவனந்தபுரத்துக்கும்இடையே ஓடைகள், இருள் சூழ்ந்த மலைச் சுரங்கங்கள் வழியாகப் பாய்ந்தன. அந்தச்

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும்
# வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஒவேளையின் ஒரே தேய்ப்பில் கால்கேட் டேண்டல் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு.

கால்கேட்டின் நீடித்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயேப் பல் துலக்க விரும்புகிறார்கள்.

பரிசுத்தத்திற்கும், வாயின் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம், ஒருடப்பி பலமாதங்களுக்கு வரும்.







... உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டேண்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

DCG. 36.TAM.

சமயத்தில் படகோட்டிகள் துடுப்புகளைப் பயன்படுத்தாமல், சுரங்கத்தின் ஓரமாகப் பொருத்தப்பட்டிருக்கும் கம்பிக்கயிறுகளைப் பிடித்துக் கொண்டு படகை மெதுவாக மீண்டும் வெளிச்சத்துக்கு உந்திச் செல்வார்கள். ஆங்காங்கு சுப்புலக்ஷ்மி இதுவரை தான் கண்டிராத சில செடிகளைப் பார்த்தாள். ஆள் உயரத்துக்கு வளர்ந்துள்ள கற்றாழைச் செடிகளைப் பெரிய பெரிய பூக்களுடன் கண்டாள். அவள் தகப்பனார் அதைப் பற்றி எல்லாம் விவரித்துக் கற்றாழைகளில் ஆண் ஜாதி, பெண் ஜாதி உண்டு என்றும், அவை வேறு வேறு விதமான பூக்களைப் பூக்கின்றன என்றும் சொன்னார். தாவர வர்க்கங்கள் எவ்வாறு வளர்ச்சி பெறுகின்றன அவைகளின் பல்வேறு குணாதிசயங்கள் என்ன என்றெல்லாம் அவள் அறிய விரும்பினாள். தன் தகப்பனாருக்குக் கூடத் தெரியாத விஷயங்களைப் பற்றி அடிக்கடி கேள்விகளைக் கேட்டு அவரைத் திணற அடித்தாள். இருப்பினும் அவர் புரியாத வகையில் எதையாவது பேசித் தட்டிக் கழித்து அவள் உற்சாகத்தைக் குறைக்க மாட்டார். அதற்குப் பதிலாக அவளது ஆவலை மெச்சிப் பாராட்டுவார்.

எர்ணாகுளத்தில் சுப்பிரமணிய ஐயருடைய நண்பரான கணிதப் பேராசிரியர் ஒருவர் வீட்டில் அவர்கள் விருந்தினராகத் தங்கினார்கள். அவருடைய தாயார் விதவை. எப்போதும் வெள்ளை வெளேரென்று புடவை உடுத்தியிருந்த அந்த அம்மாள் சமையலறையிலேயே அடைபட்டுக் கிடக்காமல் விருந்தினர்கள் மத்தியில் சகஜமாகப் பழகினாள். தன் பேரக் குழந்தைகளைப் பற்றியும், அவர்களின் எதிர்காலத்துக்கான திட்டங்களைப் பற்றியும் அவள் தாராளமாகப் பேசிக் கொண்டிருந்தாள். அந்தப் பேரக் குழந்தைகளுள் ஏழெட்டு வயதான சிறுமி அம்முக்குட்டியும் ஒருத்தி. அவள் மிகவும் அழகான குழந்தை. அவளுடைய பாட்டியும் பெற்றோரும் அவளுக்குத் தக்க வரன் தேடிக் கொண்டிருந்தார்கள்! பிள்ளையைப் பெற்றவர்கள் நிறைய வரதட்சிணை கேட்பதாலும் கணிதப் பேராசிரியர்களுக்குச் சம்பளம் குறைவானதினாலும் அம்முக்குட்டிக்கு ஏற்ற கணவனைக் கண்டுபிடிப்பது எளிதல்ல என்று பாட்டி விளக்கினாள்.

சுப்புலக்ஷ்மி இந்த சம்பாஷணைகளிலெல்லாம் நேரடியாகக் கலந்துகொள்வது கிடையாது. ஆனால் காதில் விழுந்ததைக் கேட்டு, நினைவில் வைத்துக்கொண்டு, பின்னால் அது பற்றி வியந்து சிந்திக்கலானாள்.



"நீங்க நம்ப காண்டிராக்டை வேணுமானு கான்சல் பண்ணிக்கிடுங்க. இந்தச் சமயம் காஷ்மீருக்கு ஷூட்டிங்குக்கு வரமுடியாது, நம்மாலே!"

அதன் பிறகு அவர்கள் ஊர் திரும்பினர். அடுத்த சில மாதங்களுக்கு, வரப்போகும் பரீட்சையைத் தவிர சுப்புலக்ஷ்மிக்கு வேறு சிந்தனையே இல்லை.

அந்த வருடம் அந்த வட்டாரத்துப் பள்ளிகளிலிருந்து அதிகம் பேர் பரீட்சை எழுதவில்லை. சுப்புலக்ஷ்மியைத் தவிர ஒரு பெண்ணும் பன்னிரண்டு ஆண்களும்தான் இருந்தனர். சுப்புலக்ஷ்மிக்குச் சிறிதும் பயம் இருக்கவில்லை. பரீட்சை முடிவுக்காக நிம்மதியாகவும் இடமான தன்னம்பிக்கையுடனும் அவள் காத்திருந்தாள்.

பொங்கல் விடுமுறையின்போது அந்தச் செய்தி வந்தது. சுப்புலக்ஷ்மி பரீட்சையில் வெற்றி பெற்றாள் என்பது மட்டுமல்ல; ஒவ்வொரு பாடத்திலும் நிறையத் தேர்வு எண்களைப் பெற்று 'ஹானர்ஸ்' வகுப்பில் தேறியிருந்தாள். பையன்களில் ஒருவன்தான் பாஸாவதற்குத் தேவையான மார்க்குகளைப் பெற்றிருந்தான். பத்திரிகைகளில் தேர்வு முடிவு பிரசுரிக்கப்பட்டபோது பெரிய அமளியாகிவிட்டது.

''பதினொரு ஆண்பிள்ளைகள் தோல்வியுற்றபோது ஒரு பெண் எப்படித்தான் நிறைய மார்க்குகள் வாங்கி ஹானர்ஸ் வகுப்பில் தேற முடியும்? இது நடக்கக் கூடியதல்ல. எவ்வாறு நடக்கலாம்?'' என்று சம்பந்தப்பட்டவர்கள் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டனர்.

அவர்களே பதிலும் அளித்துவிட்டார்கள்: ''சுப்பிரமணிய ஐயர் பரிசீலனையாளர்களுக்கு லஞ்சம் தந்திருக்க வேண்டும். வேறு ஒரு காரணமும் இதற்குக் கூறுவதற்கில்லை!''

இதை என்னிடம் சொல்லும்போது சுப்புலக்ஷ்மி சிரித்தார். (தொடரும்)

லாகவமான சவாரியின்

# லயத்தோடு இசை பொருந்தியது

# அரவிந்த்

தரத்திலுயர்ந்த துணிகள் மென்மேலும் களைகட்டுகின்றன.

வகையறாக்களில் சில :

சான்பொரைஸ்டு பாப்லின்கள் :

ஷர்ட்டிங்குகள் : ஸ்ட்ரைப், டாபி, செக், பைஜாமா

வேட்டிகள்: மெர்ஸரைஸ்டு லான் : 5531

சூட்டிங்குகள் : கேபர்டின்.

பிரின்டுகள் : பிரின்டெட் லான்கள்,
வாயில்கள், பாப்லின்கள்.

நெசவு செய்த கலர் புட்டாக்கள்.
கிரேக்களிலும் புட்டாக்களிலும்
2x2 ஃபேன்ஸி ஃபுல் வாயில்கள்.

SANFORIZED

டெரிலீஸ்டு* மற்றும் டெரிலீஸ்டு
இரட்டிப்புப் பரிசோதனை பெற்றது.

*Registered Users




அரவிந்த் மில்ஸ் லிமிடெட்
அகமதாபாத்.

# சாதல் இல்லையேல் காதல்

## சோ



[நாகராஜுவின் சொத்துக்காரத் தூரத்து உறவினர் காலமானதும் கனகசபைக்கு நாகராஜன் -- மாலதி திருமணத்திலுள்ள ஈடுபாடு குறைந்து விட்டது. அதனால் அவர் திருமணத்துக்குப் புது நிபந்தனையை யல்லவா விதிக்கத் தொடங்கி விட்டார்?]

கன: மாலதி.... உனக்கு இஷ்டமானவனே நீ கல்யாணம் பண்ணிக்கிட்டா எனக்கும் சந்தோஷம்தான்.

நாக: பலே! என்னிக்கு முகூர்த்தம்?

கன: இருய்யா.... ஆறு. நீ கல்யாணம் பண்ணிக்கிறவன் உனக்குத் தகுதியானவனாக இருக்கணும்.

மால: இவர் மேலே அந்த நம்பிக்கை உங்களுக்கு இல்லையா?

கன: இல்லே.....

நாக: ஸார்! அந்த மாதிரி சொல்லாதீங்க. எப்படியாவது கஷ்டப்பட்டு, நான் நல்லா சம்பாதிப்பேன்.

கன: அதைக் காரியத்திலே காட்டு. அப்பாலே கல்யாண விஷயம் பேசுவோம்.

மால: சித்தப்பா....

கன: நான் தீர்மானமாச் சொல்றேன். இவனாலே சுயமா சம்பாதிக்க முடியும்னு தெரிஞ்சாலொழிய, இந்தக் கல்யாணத்துக்கு நான் ஒத்துக்க மாட்டேன்.

நாக: இப்ப என்ன செய்யணும்னு சொல்றீங்க? எங்கேயாவது வேலைக்குச் சேர்ந்து சம்பாதிக்க முடியும்னு காட்டணும். அவ்வளவுதானே?

கன: வேலை கிடைக்கிறது அவ்வளவு சுலபமில்லே.

நாக: ஏன் ஸார்? எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்லே ரிஜிஸ்தர் பண்ணிக்கிட்டா, தனிச்சா வேலை வருது!

கன: வேலை வராது. ரிஜிஸ்தர் நம்பர்தான் வரும்.

நாக: என்ன அப்படிச் சொல்லிட்டீங்க? வேலையில்லாத திண்டாட்டத்தைக் குறைக்கத்தானே எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்ஜை ஏற்படுத்தியிருக்காங்க? அது ஏற்படுத்தினதுலே யிருந்து எத்தனே பேருக்கு வேலை கிடைச்சிருக்குது தெரியுமா?

கன: வாஸ்தவம்தான் — அந்த எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்சு ஆபீஸிலேயே நிறையப் பேருக்கு வேலை கொடுத்திருக்காங்க. அவ்வளவுதான்!

மால: இப்ப எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்சைப் பத்தித்தானு நமக்குக் கவலே!

கன: நான் என்ன பண்றது? இவன் பேச ஆரம்பிச்சா, எங்கேயோ இழுத்துக்கிட்டுப் போயிடறான்!.... இதோ பாருய்யா....எனக்கு உன்னாலே நல்லா சம்பாதிக்க முடியும்னு தெரியணும். அப்பத்தான் கல்யாணம். இன்னும் இரண்டு மாசத்துலே, நீ பத்தாயிரம் ரூபா சம்பாதிச்சுக் காட்டணும்.

நாக: ஐயய்யோ! இரண்டே மாசமா?

கன: முழுசா இரண்டு மாசம்!

மால: பத்தாயிரம் ரூபாயா?

கன: பத்தாயிரம்தான். அது போதும்.

நாக: போதுமா?.... இரண்டு மாசத்திலே பத்தாயிரத்துக்கு நான் எங்கே போவேன்.....கொஞ்சம் குறைச்சுக்குங்களேன்....

மால: ஐயாயிரம்னு வெச்சுக்கலாமா?

நாக: ஐயாயிரத்துக்கு நான் எங்கே போவேன்?

மால: ஆயிரம்.

நாக: ஆயிரத்துக்கு நான் எங்கே போவேன்?

மால: நூறு ரூபாய்.

நாக: நூறுக்கு நான் எங்கே போவேன்?

மால: பத்து ரூபா வெச்சுக்கலாம்.

நாக: பத்துக்கு நான் எங்கே போவேன்?

கன: பத்துக்கு உங்க மாமா வீட்டுக்குப் போ! அவர் செத்ததுக்குப் பத்தாம் நாள் வரும். பத்துக்கு அங்கே போ!....இதோ பாருய்யா! நீ என்ன செய்வியோ, எங்கே போவியோ... எனக்குத் தெரியாது. மாசம் இரண்டு—ரூபாய் பத்தாயிரம்! அவ்வளவுதான்!

நாக: ஸார்! எனக்கு ஒரு ஐடியா... மாலதி, என்னாலே உடனே பத்தாயிரம் ரூபா சம்பாதிக்க முடியும்.

மால: எப்படி நாகராஜன்...?

கன: உடனே பத்தாயிரமா...எப்படிய்யா?

நாக: என் கல்யாணத்தை நிச்சயம் பண்ணுங்க. பத்தாயிரம் ரூபா உடனே சம்பாதிக்கக் காட்டறேன்.

கன: எப்படிய்யா?

நாக: எனக்கு நீங்க வரதட்சிணையா ஒரு பத்தாயிரம் தன்னுங்க. அவ்வளவுதான்!

கன: விளையாடுறியா? நீ போகலாம். இரண்டு மாசம் கழிச்சு, கையிலே பத்தாயிரம் ரூபாயோட வா — உடனே கல்யாணம். இல்லே மாலதியை மறந்துடு!....

நாக: எப்படி ஸார், சம்பாதிப்பேன்?

கன: கன்னம் வை! பிக்பாக்கெட் செய்! இல்லே, ஏதாவது பண்ணு!

நாக: கன்னம் வெக்கணுமா? பிக்பாக்கெட்டா? அப்புறம் கல்யாணம் எங்கே—ஜெயில்லேயா?

கன: பேச்சுக்குச் சொன்னேனய்யா. பணம் சம்பாதிக்க முடியும்னு காட்டு. தைரியமும் துணிச்சலும் இருக்குன்னு எனக்குத் தெரியணும். அவ்வளவுதான்! இது நடந்தால் கல்யாணம் நடக்கும். இல்லே இரண்டு பேரும், ஒருத்தரை ஒருத்தர் மறந்துடுங்க!....

நாக: பத்தாயிரம் ரூபா! இரண்டே மாசம்! முடியற காரியமா மாலதி?

மால: நாகராஜன், எனக்கு ஒரு நல்ல ஐடியா தோணுது!

நாக: என்ன?

மால: ஏதாவது சினிமாவுக்குப் பாட்டு எழுதுங்களேன்!

நாக: சினிமாவுக்கு என் பாட்டை எடுத்துப்பாங்களா?

மால: ஏன், உங்க பாட்டுக்கு என்ன குறைச்சல்?

நாக: எப்படி என் பாட்டை சினிமாவுக்கு எடுத்துப்பாங்க? என் பாட்டுக்கு உன்னை மாதிரி இரண்டொருத்தர் அர்த்தம் கண்டு பிடிச்சுட்டீங்களே!

மால: அதனாலே என்ன? உங்க கவிதை கொஞ்சம் கஷ்டப்பட்டுப் படிச்சால்தான் அர்த்தம் புரியும்!

நாக: கஷ்டப்பட்டா அர்த்தம் ஒருத்தர் இரண்டு பேருக்குப் புரிஞ்சுடறதே? அப்போ என்பாட்டுக்கு ஏதோ அர்த்தம் இருக்கே! அதுக்கு சினிமாவிலே எப்படி சான்ஸ் கிடைக்கும்?

## காட்சி — 11

(சுரேஷ் தங்கியிருக்கும் ஹோட்டல் அறை. சுரேஷ் படுக்கையை விட்டு எழுந்திருக்க வில்லே. பெட் காப்பி குடித்துக் கொண்டிருக்கிறான். அப்போது நாகராஜன் உள்ளே வருகிறான்.)

சுரே: வாடா! மாப்பிளே... குட்மார்னிங்!

நாகு (அசிரத்தையாக): குட்மார்னிங்!

சுரே (அவன் முதுகில் அறைந்து): சரியா பேசடா ராஸ்கல்! என்ன முனகறே?

நாகு: விளையாடாதேடா.... சுரேஷ்! எனக்கு என்ன செய்யறதுன்னே புரியலே.

சுரே: ஒரு இளம் காதலன்னு அப்படித்தான் இருப்பான். அவனுக்கெல்லாம் ஒன்னும் புரியாது. இல்லாட்டா காதலிப்பானு?.... (திடீரென ஞாபகம் வந்தவனாக) மைகாட்! (நாகராஜன் முதுகில் மீண்டும் ஓர் அறை விழுகிறது) மறந்தே போயிட்டேன், இப்பத்தான் ஞாபகம் வந்தது.

நாகு (முதுகைத் தடவிக் கொண்டு): ஞாபகம் வந்தாலும் வந்தது. சாதாரணமாவா வந்தது? நன்னு ஓங்கி வந்தது!

சுரே: உஸ்! டேய் நாகு! உங்க மாலதி சித்தப்பாவைப் பார்த்தாயா? என்ன கேட்டே என்ன சொன்னுர், எப்ப கல்யாணம்?

நாகு: நிதானமா கேளு.... ஒவ்வொரு கேள்வியா கேளு, பதில் சொல்றேன்.

சுரே: சித்தப்பாவைப் பார்த்தியா?

நாகு: உன் சித்தப்பாவையா?

சுரே: டேய்! அறைஞ்சேன்னு தெரியுமா? மாலதி சித்தப்பாவைப் பார்த்தியாடா?

நாகு: பார்த்தேன்.

சுரே: என்ன கேட்டே?

நாகு: எங்க மாமா அவுட். சொத்தும் என்னைப் பொறுத்தவரையிலே அவுட். மாலதியைக் கல்யாணம் பண்ணித் தரீங்களான்னு கேட்டேன்.

சுரே: என்னடா சொன்னுர்?

நாகு: இரண்டு மாசத்திலேயே கல்யாணம்.......

சுரே: அடி சக்கை!....

நாகு: ஒரே ஒரு கண்டிஷன். இரண்டு மாசத்திலே நான் பத்தாயிரம் ரூபாய் சம்பாதிக்கணும்!

சுரே: வாட்!..... டென் தௌஸண்ட் ருபீஸ்! என்னடா இது?

நாகு: எவ்வளவோ கேட்டுப் பார்த்தேன், சுரேஷ். என்னாலே பணம் சம்பாதிக்க முடியும், துணிச்சல் இருக்குன்னு தெரிஞ்சுக்கத்தான் இப்படிச் செய்யறாராம். நான் இரண்டு மாசத்திலே பத்தாயிரம் சம்பாதிக்கலேன்னு — கல்யாணம் அவுட்!

சுரே: பத்தாயிரத்துக்கு எங்கேடா போவே?

நாகு: பிக்பாக்கெட்! பகல் கொள்ளை! என்ன செய்தாலும் அவருக்கு ஆட்சேபணை இல்லே!....பணத்தைச் சம்பாதிச்சுக் காட்டணும். அவ்வளவுதான்.

சுரே: இதென்னடா வம்பாப் போச்சு?

நாகு: நீதாண்டா எனக்கு ஏதாவது வழி சொல்லணும்!

சுரே: சபாஷ்! (நாகராஜன் முதுகில் ஓர் அறை)

நாகு: என்னடா? ஏதாவது ஐடியாவா?

சுரே: கரெக்ட்! ஒரு ஐடியா! என்னோடே பேசாம பாம்பே வா.... என் ரூம்லேயே இரு.

நாகு: என் முதுகு என்ன ஆறது?

சுரே: விஷயத்தைக் கேளு. ஒரு வாரம் கழிச்சு நான், எங்க பேப்பர்லே ஒரு நியூஸ் பப்ளிஷ் பண்றேன்.

நாகு: என்ன நியூஸ்.....? "மதராஸி லிருந்து வந்த இளைஞன் திடீர் மரணம். மரணத்துக்குக் காரணம் தெரியவில்லே..... ஆனல் இவருடைய முதுகு மட்டும் அரிசி மூட்டை மாதிரி வீங்கியிருந்தது!"

சுரே: இடியட்!.... இதாண்டா நியூஸ்: "அபேஸ்! அபேஸ்!"

நாகு: இதான் நியூஸா?

சுரே: அது தலைப்பு.... "அபேஸ்! அபேஸ்! மதராஸ் இளைஞன் நாகராஜன் பாக்கெட்டில் இருந்த பணம் பத்தாயிரம் ரூபாய் அபேஸ்! அபேஸ்......"

நாகு: என்னடா நியூஸ் இது? நியூஸை விட அபேஸ்தான் அதிகமா இருக்கு!

சுரே: அதான் நியூஸ்! நேரே அந்தப் பேப்பரை எடுத்துக்கிட்டு மெட்ராஸ் வா.... மாலதி சித்தப்பாகிட்டே காட்டு...... அவ்வளவுதான்! பத்தாயிரம் ரூபா சம்பாதிச்சேன்; தொலைஞ்சு போச்சுன்னு சொல்லிடு!



நாகு: புத்திசாலிடா நீ! அவர்கிட்டே போய் நான் இந்த அபேஸ் அபேஸ் திரூஸைக் காமிச்சா அவர் என்ன தெரியுமா சொல்வார் ?

கரே: என்ன சொல்வார் ?

நாக: 'அப்பா நாகராஜா, உனக்குச் சம்பா திக்கத் தெரியுமோ தெரியாதோ—நல்லாத் தொலேக்கத் தெரியுது!.... மாலதியை மறந் துடு'ன்னுவார் !

கரே : ஊம்! அப்படியா விஷயம்!.... வேறே என்ன ஐடியா?....

நாக: எந்த ஐடியாவா இருந்தாலும், கொஞ்சம் தூர இருந்தே சொல்லு... என் முதுகு தாங்காது.....

கரே (யோசனை செய்து கொண்டே): இந்த அபேஸ் ஐடியாதான் உனக்குப் பிடிக் கலே...... உம்..... (அபேஸ்.... இல்லே...உம் அபேஸ்...பேஸ்....) கரெக்ட்! ஸபேஸ்!

நாக: என்னடா ?

கரே: ஸபேஸ் !

நாக: இது என்ன அபேஸுக்குத் தம்பியா ஸபேஸ் !



கரே: ஸபேஸ் இல்லேடா — சபேசன் ! அவர்தான்டா நமக்குக் கதி.

நாக: அது யார்ரா சபேசன்?

கரே: பம்பாயிலே ஒரு பெரிய புள்ளி. நல்ல பணம். வெகுளி....அவரைப் பிடிச்சுப் பணத்தை வாங்க வேண்டியதுதான்.

நாக: என்னடா உளர்றே? அவர் எப்படிடா எனக்குப் பத்தாயிரம் ரூபா தருவார்?

கரே: பொறுமை! சாந்தம்!.... அந்தச் சபேசன் கொஞ்சம் ஒரு மாதிரியான பேர்வழி. தான் பெரிய கலாரஸிகர்னு அதுக்கு ஓர் எண்ணம். பம்பாயிலே நடக்கிற பாதிச் சங்கங்களுக்கு அவர்தான் தலைவர். ஊர்லே இருக்கிற அரைகுறை நடிகன், ஆர்ட்டிஸ்ட், பாடகன் எல்லாம் இவரை நம்பித்தான் வாழுறாங்க! அந்த மாதிரி ஆசாமிக்கெல்லாம் உதவி பண்றது இவருக்கு ஒரு பெருமை ! நாமும் அதை உபயோகப்படுத்திக்க வேண்டியதுதான்.

நாக: நான் என்ன கலைஞனா?

கரே: இல்லே, கவிஞன்! நீ பெரிய கவிஞன்னு அவர்கிட்டே அறிமுகம் பண்ணிடறேன். அதற்கு அப்புறம் என்ன நடக்கிறது, பார்க்கலாம் !

நாக: என் கவிதைக்கு அவருக்கு அர்த்தம் புரியாதேடா !

கரே: அதான் வேணும்! அர்த்தம் புரியாத கவிதைதான் வேணும்.

நாக: என்ன இருந்தாலும் பத்தாயிரம் ரூபா எப்படிடா தருவார் ?

கரே: முயற்சி பண்ணுவோம். கிடைச்ச வரை லாபம் ! டேய் நாகு...... உனக்கு இது ஏதோ அதிர்ஷ்ட காலம். அந்தச் சபேசனும் இப்ப மெட்ராஸுக்கு வந்திருக்கார். இன்னிக்கே அவரை மீட் பண்ணி உன் விஷயத்தை நைஸா எடுத்து விடறேன். பெரிய கவிஞன் மாதிரி நீ நடிக்கணும். அவர் அப்படியே அசந்து போயிடணும் !

நாகு: அவர் கவிதை எழுதச் சொன்னா என்னடா பண்றது !

கரே: கவலைப்படாதே! எதையாவது எழுது! முதல்லே நீ ஒரு கவிஞன்னு அவரை நம்ப வெச்சுடறேன்...... அப்புறம் நீ என்ன வேணுமானாலும் எழுதலாம். நாகு! இந்தக் காலத்திலே கவிதை எழுதறவன் கவிஞன் இல்லே—கவிஞன் எழுதறது கவிதை !

## காட்சி 12

(சென்னை மெரினா கடற்கரை. உலகத்திலுள்ள உண்மையான கம்யூனிஸ்ட் சென்னை மெரினா கடற்கரையே! அந்தக் காட்சியைப் பாருங்கள். பாரபட்சமின்றி இனம், மதம், பொருள் எந்த வேறுபாடும் பாராமல் எல்லோருக்கும் இடமளிக்கிறது மெரினா! காதலர்கள் கைகோத்து நடப்பதும் இங்குதான். காதலில் தோல்வியுற்றவர்கள் கடலை நாடி வந்து விழுந்து உயிரை விடுவதும் இங்குதான். பணம் படைத்தவர்கள் வந்து காற்று வாங்குகிறார்கள். அதே காற்றை அவர்கள் வீட்டு டிரைவரும் அநுபவிக்கிறான் ! பெரும் செல்வந்தர்கள் காரிலே வந்திறங்கித் தேகாப்பியாசத்துக்காக 'வாக்கிங்' போவதும் இந்தக் கடற்கரையில்தான். அந்தச் செல்வந்தர்களுக்கு உழைப்பதற்காகவே பிறந்து கையிலே காசில்லாமல் வீட்டுக்கு நடந்தே செல்லும் குமாஸ்தாவின் வாக்கிங்கும், இதே பாதையில் ஒரு ஆட்டோ ரிக்ஷா வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. மன்னிக்கவும், ஆட்டோ ரிக்ஷா போய்க் கொண்டிருக்கிறது என்று சொல்லியிருந்தாலே போதும். 'வேகமாக' என்று குறிப்பிட்டுச் சொல்லத் தேவையில்லை.

பிளாட்பாரத்தில் ஒருவர் நடந்து கொண்டிருக்கிறார். அவரைத் தாண்டிச் சென்ற ஆட்டோரிக்ஷா 'கிரீச்' என்ற சத்தத்தோடு நிற்கிறது. உள்ளிருந்து சுரேஷ் குதித்து, அவசரமாக ஆட்டோ ரிக்ஷா டிரைவர் கையில் சில்லறையைத் திணித்துவிட்டு அந்த நபரை நோக்கி ஓடி வருகிறான்.....

அந்த நபர் இவனைப் பார்க்காமலே, நடந்து கொண்டிருக்கிறார். கால் சராய், கோட், தலையிலே தொப்பி, கரத்திலே கைத்தடி, வாயிலே சுருட்டு, கண் பார்வையோ ஆகாசத்திலே பதிந்திருக்கிறது. ஏதோ ஆங்கிலப் படத்திலிருந்து குதித்து வந்த 'காமிக்' நடிகர் மாதிரி காட்சியளிக்கிறார்.)

சுரேஷ் (அவரை நெருங்கி): ஹலோ சார்! குட்மார்னிங். (அவர் கவனிக்காததால் மீண்டும்) மிஸ்டர் சபேசன், குட்மார்னிங்!

சபே: குட் ஈவினிங்! நீங்க.....

சுரேஷ்: என்ன ஸார்! என்னை தெரியலே? நான்தான் ஸார் !

சபே: ஓ நீங்களா?... நீங்கதான் நீங்களா ? ஐமீன்...ஐ ஆம் ஸாரி....நீங்க யாருன்னு...

சுரே: என்ன ஸார், இது?.... நான்தான் ஸார், சுரேஷ்! ரிப்போர்ட்டர் சுரேஷ் !

சபே: ஓ! நீயா? ஐ ஆம் ஸாரி... நீயா? நான் யாரோன்னு பார்த்தேன். நீயா ! யெஸ்! யெஸ்! ஏதோ ஞாபகம்! நீ...நீதான்!

சுரே: தாங்க்ஸ்!.... அது வரைக்கும் ஒத்துக்கிட்டீங்களே..... ஸார், நான் உங்க பங்களாவுக்குத்தான் போய்க்கிட்டிருந்தேன்.

சபே: எதுக்கு?

சுரே: உங்களைப் பார்க்கத்தான்.

சபே: நான்தான் இங்கே இருக்கேனே ?

சுரே: அது எனக்கு எப்படித் தெரியும்?

சபே: ஏன்தெரியாது? அதான் நேரா பார்க்கிறியே ?

சுரே: இல்லே, ஸார்! நான் உங்களைப் பார்க்கணும்னு புறப்படறச்சே எனக்கெப்படி நீங்க வீட்டிலே இல்லேன்னு தெரியும் !....

சபே: கரெக்ட்!.... யூ ஆர் கரெக்ட்!.... அப்போ தெரியாது..... ஏம்பா, உன் பேரென்ன.... யெஸ். சுரேஷ்..... நான் வீட்டிலே இருக்கேனா, இல்லையான்னு தெரிஞ்சுக்காம, நீ ஏன் என்னைப் பார்க்கப் புறப்படறே ?

சுரே: வீட்டுக்குப் போய்ப் பார்த்தால் தானே நீங்க இருக்கீங்களா, இல்லையான்னு தெரியும் ?

சபே: போய்ப் பார்க்கறதுதானே.

சுரே: அதான் உங்களை இங்கேயே பார்த்துட்டேனே!

சபே: யெஸ்... யெஸ்.... யூஆர் கரெக்ட்! இருந்தாலும் சுரேஷ்.... நீ எதுக்காக நான் வீட்டுலே இருக்கேனா இல்லையான்னு தெரியாம.......

சுரே: ஸார்... இதோட விட்டுடுங்களேன். போதும்.... தெரியாம பண்ணிட்டேன்.... இனிமே செய்யலே..... ப்ளீஸ் மன்னிச்சுடுங்க.

சபே: சரி..... சரி... நீ எப்ப பம்பாயிலே யிருந்து வந்தே?

(தொடரும்)




மனிதர்கள் செய்கிற சங்கீத வாத்தியங்கள் பல உண்டு. ஆனால் இயற்கை அன்னையே செய்து கொள்ளும் வாத்தியம் ஒன்று உண்டு. அதுதான் குழல். தகிக்கும் வேனிற்காலத்தில் மூங்கில் புதர்களிலுள்ள துவாரங்கள் வழியே செல்லும் தென்றலில் சங்கீதம் தானாகவே பிறந்து தவழ்ந்து உலகைக் குளிர்விக்கும். இது பிரகிருதி சுந்தரியின் இயல்பான வாத்தியம் என்பதால்தான் போலும், அவளது காந்தனான புருஷோத்தமன் கண்ணனும் இந்த வாத்தியத்தை இசைக்கிறான். அவனது வண்ணம் கார்மேகம் எனில், அம்முகில் பொழியும் குளிர்ந்த மழையே அவனது வேணு கானம். இக்குளிர்ச்சியையே 'குழலினிது' என்று தெய்வப் புலவர் கூறினார்.

குளிர்ச்சி என்பது சிலுசிலுப்பாகி விடக் கூடாது. குழலிசையில் உருட்டலும் புரட்டலும் அதிகமாகிவிட்டால் குளிர்ச்சி போய்ச் சிலுசிலுப்பு உண்டாகிவிடும். இயற்கையோடு ஒட்டிப் பிறந்த அந்த வாத்தியத்தின் எளிமையைக் காத்தால்தான் அதன் உயிரைக் காப்பாற்ற முடியும். எளிமை என்றால் ஏழைமை என்றாகி விடாது. மகான்கள் படாடோபங்களைத் தள்ளிவிட்டுச் சாந்தி என்ற பரம ஐசுவரியத்துடன் மட்டும் வாழ்கிற எளிமை போல், சங்கீதத்திலும் பகட்டுக்களைத் தள்ளிவிட்டு விச்ராந்தி என்ற பெரும் கலைச் செல்வத்தை மட்டும் கொள்கின்ற எளிமை அவசியமாகும். கீதையை அருளிய தீனபந்துவின் திருவாய் ஸ்பரிசித்த திவ்வியக் குழலை இவ்வியல்புக்கேற்ப வாசித்துக் கேட்கும் வாய்ப்பு, கண்ணன் ஜயந்தியையொட்டி அவனுடைய பெயர் சூடிய கிருஷ்ண கான சபையில் நடைபெற்ற ஒரு வேணு வாத்தியக் கச்சேரியில் கிடைத்தது.

குழலூதியவர் ஸ்ரீ டி. விசுவநாதன் அவர்கள். வீணை தனம்மாள் 'யாழினிது' என்று அன்று வாசித்துக் காட்டிய உபாஸனையின் எதிரொலியாக அவரது பரம்பரையில் தோன்றியுள்ள கலைஞர்களில் ஒருவர் ஸ்ரீ விசுவநாதன்.

இனிமை, எளிமை, கௌரவம், காம்பீரியம் என்ற பதங்கள் முழுவதும் பொருந்தும் அருமையான வாசிப்பு ஸ்ரீ விசுவநாதனுடையது. மேதைகளுக்கு உரிய சேஷ்டை எதுவுமின்றி அவர் சங்கீதத்தைக் கௌரவமாக அணுகுவது ரசிகர்கள் செய்த அதிருஷ்டம்.

கலையில் இரண்டு அம்சங்கள் உண்டு. தினந்தோறும் கண்டு பழகிய புல்வெளியாயினும் அன்றன்றைக்கும் அதில் புத்தம் புதிய பசுமை காண்பது போல், பழகிய கலை வடிவங்களிலும் புதுமையான அழகைத் தருவது ஒன்று. பன்னிராண்டுகளுக்கு ஒரு முறை புஷ்பிக்கும் குறிஞ்சி மலராயினும், அதில் நம் உள்ளத்தோடு தினந்தினம் ஒட்டினாற் போன்ற ஒரு நெருக்கமான அழகு தோன்றுவதுபோல், நூதனமான கலை வடிவங்களிலும் பழக்கப்பட்ட ஒரு தொடர்பை நினைவூட்டுவது இரண்டாவது அம்சம். இந்த இரண்டு அம்சங்களையும் விசுவநாதனின் இசையில் நுகர முடிந்தது. எவ்வளவோ பழகிப்போன சங்கராபரணத்திலும், கரஹரப்பிரியாவிலும் அவரால் ஒரு புதுமையை உண்டாக்க முடிகிறது. நாகஸ்வராவளி, நீபகம் போன்ற அபூர்வ ராகங்களிலோ பழக்கப்பட்ட பரிசய அநுபவத்தை ஏற்படுத்தித் தருகிறார். 'இந்த ராகத்துக்குப் பிரத்தியேக உருவம் என்ன இருக்கப் போகிறது? ஆரோஹணை அவரோஹணங்களை வைத்துக்கொண்டு 'ஜிம்னாஸ்டிக்ஸ்' செய்ய வேண்டியதுதான்' என்று நாம் நினைக்கிற ராகத்தில் ஒரு சுந்தரமான உருவை வடித்துத் தருகிறார்.

அன்றையக் கச்சேரி அம்சங்களைப் பற்றிப் பிட்டுப் பிட்டுச் சொல்ல வேண்டியதில்லை. வராளி, ஸஹானா, பியாகடை, கரடி ஆகிய ராகங்கள் 'அவர்கள் வீட்டுச் சரக்கு' என்ற முறையில் எந்தக் கௌரவமான தனி உருவம் பெற்றுள்ளனவோ அந்த உருவங்களில் பிரஸன்னமாயின. சங்கராபரணம் இறைவனின் செவிக்கு அணிவித்த ஓர் அற்புத ஆபரணமாகவே தெரிந்தது. காம்போதியில் 'கண்ணீர் சிந்தாத சோகம்' என்று ஆனந்த குமாரஸ்வாமி கூறும் விசுவ வேதனையை ஸ்ரீ விசுவா தீண்டிவிட்டார் எனலாம். ஸ்ரீமதி ஜயம்மாளின் சங்கீதம், ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் நாட்டியம், ஒருகால் நாம் நேரில் கேட்டிராத வீணை தனம்மாளின் மீட்டும்கூட இருக்கலாம் — இவை யாவும் ஊடே ஊடே விசுவாவின் வேய்ங்குழலில் தோய்ந்து கேட்போரின் நினைவில் இனிமையை நிறைத்துக் கொண்டிருந்தன. அதாவது இதய சுருதியும், இதய லயமும் விசுவநாதனின் வேணுவில் குடும்பச் சொத்தாக வந்து பொலிந்தன. அப்படியிருக்க, வெளிக் கணக்குத் தான விந்நியாசங்களில் இவர் சற்றே அதிகமாக ஈடுபடுவது ஏன்? பட்சிகள் ஓர் அழகிய கதிக்கு உட்பட்டுக் கிளையிலிருந்து புறப்பட்டுச் சடபடவென்று பறந்து போய்க் கதி பிசகாமலே திரும்ப வந்து அமருவது போல், அடுக்கடுக்காக ஸ்வர வரிசைகள் உதித்து லயித்த அழகை ஏன் மிகைப் படுத்துகிறார்?

ஸ்ரீ விசுவாவின் குழலிசையில் மிக முக்கியமாகப் புலப்படுத்திய சங்கீத சத்தியம் ஒன்று உண்டு. அதுவே மந்த்ர ஸ்தாயியின் மகிமை.

தாரஸ்தாயி சஞ்சாரங்கள் கோபுர கலசங்களைப் பார்ப்பதற்கு ஒப்பு எனில், மந்த்ரத்தின் அழகோ கர்ப்பகிருகத்தின் உள்ளுக்கு உள்ளே ஊடுருவிப் பார்ப்பது போன்ற ரஸ கனமான உணர்வை ஊட்டுகிறது. தங்கம் வேண்டுமாயின் எப்படிப் பூமியின் உட்குடைந்து கொண்டு செல்ல வேண்டுமோ, முத்து வேண்டுமாயின் எப்படி ஆழ்கடலின் அடிவாரத்துக்கு மூழ்க வேண்டுமோ அவ்வாறே சங்கீத உலகின் கண்காணாத அல்லது காதுக்குக் கேளாத—பொன்னையும் முத்தையும் மந்த்ர ஸ்தாயியில் ஆழ்ந்து சென்று கொணர்ந்து சூரித்தார் ஸ்ரீ விசுவநாதன். 'சூழல்' என்றால் 'சுருள்' என்ற பொருள் பொருந்தும்படி, மூறிவற்ற சுருள் சுருளாக அவர் மந்த்ர சஞ்சாரங்கள் செய்து 'வேணுவுக்கு ஒரு விசுவா' என்ற வாழ்த்துக்கு உரியவரானார்.

நாத ரூபியான பரமன் அரிய ஜோதியாக நின்றபோது அரியும் அயனும் அடிமுடி தேடியதைக்கூட சங்கீதத்தின் தார — மந்த்ர எல்லைகளைத் தேடியதாகவே கொள்ளலாம். எளிமையுடன் திருவடி தேடிப் பூமியைக் குடைந்து சென்ற நாராயணமூர்த்தி தன்னால் அடி காண இயலவில்லை என்று சத்திய வசனம் கூறிப் பெரிய பெருமானாக உயர்ந்ததாகச் சொல்வார்கள். யாராலும் எல்லை காணவொண்ணாத சங்கீத ரூபத்தைத் தேடும் கலைஞர்கள் அதன் மந்த்ர ஸ்தாயியில் உள்ளம் ஆர்ந்து அதிகம் சஞ்சரித்தால் நாத ரஸம் அதிகம் பெருகக்கூடும். எப்படியேனும் 'மேல் பஞ்சமம்' பிடித்து 'அப்ளாஸ்' வாங்கியே தீரவேண்டும் என்கிற ஆசையில் சிறு பிராயத்திலேயே சுருதியை இறக்கி வைத்துக் கொண்டு, காலக்கிரமத்தில் பேசுவதற்குக் கூட 'மைக்'கை எதிர்பார்க்கும் இளம் பாடகர்கள் இப்போது தோன்றிவருவதால் இவ்விஷயத்தில் முக்கியத்துவம் செலுத்த வேண்டியது அவசியம்.

— 'கன்யா'

# அமெரிக்கா செல்லும் இசைக் கலைஞர்கள்

இன்றைய இளம் வித்வான்களிடையே நற்பெயர் எடுத்து வருபவர்களில் இருவர் ஸ்ரீ கே. வி. நாராயணஸ்வாமியும், மிருதங்க வித்வான் பாலக்காடு ஸ்ரீ ரகுவுமாவர். இவர்கள் அமெரிக்காவில் கனக்டிக்கட்டிலுள்ள வெஸ்லியன் சர்வ கலாசாலையில் சிறிது காலம் தங்கியிருந்து நமது சங்கீதத்தில் போதனை அளிக்கப் போகிறார்கள். வெஸ்லியன் கல்லூரியிலும், மற்றக் கல்லூரிகளிலும், வெளியிடங்களிலும் பல கச்சேரிகளும் செய்யவிருக்கிறார்கள். 1961ல் பேராசிரியர் ராபர்ட் ப்ரௌன் அவர்களால் கர்நாடக இசைப் பயிற்சிக்காகத் தொடங்கப் பட்ட திட்டத்தின் கீழ் இவ்விருவரும் அமெரிக்க மாணவருக்கு நமது அருங் கலையைப் புகட்டவிருக்கின்றனர்.

அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்காரின் சிஷ்யர் என்பதாக நாம் அறிந்த பாலக்காடு ஸ்ரீ கே. வி. நாராயணஸ்வாமி அவர்கள் தமது தந்தை, பாட்டனார், ஸ்ரீ பாப்பா வெங்கடராமய்யா, பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் ஆகியோரிடமும் சங்கீத சிட்சை பெற்றவர். நம் நாட்டில் நிறையக் கச்சேரிகள் செய்து ரஸிகர்களின் பாராட்டைப் பெற்று வருகிறார். 1962ல் சென்னையில் உள்ள கர்நாடக சங்கீதக் கல்லூரியில் விரிவுரையாளராகச் சேர்ந்தார். சென்ற ஆண்டு தில்லியில் நடைபெற்ற கிழக்கு—மேற்கு கலை மாநாட்டில் பங்கு கொண்டார்.

சென்ற மாதம் எடின்பரோ கலைவிழாவில் கலந்து கொண்ட ஸ்ரீ நாராயணஸ்வாமி, அதன் பின் ஐரோப்பாவில் கச்சேரிகள் செய்துவிட்டு அமெரிக்கா செல்கிறார்.

ரங்கூனில் பிறந்த பாலக்காடு ஸ்ரீ ரகு அவர்கள் ஏழு வயதிலேயே மேடை ஏறியவர். யுத்த காலத்தில் இந்தியாவுக்கு வந்த ஸ்ரீ ரகு சென்னையில் திண்ணியம் வெங்கடராமய்யரிடம் மிருதங்கப் பயிற்சி பெற்ற பின் பாலக்காட்டுக்குச் சென்று ஸ்ரீ மணி அய்யர் அவர்களிடம் சிட்சையைத் தொடர்ந்தார். இளம் வித்வானாக உருவெடுக்கும்போதே ஆங்கிலக் கல்வியும் பயின்று பி. ஏ. பட்டம் பெற்றார்.

1960ம் ஆண்டு உலகப் பிரசித்தி பெற்ற வயலின் வித்வானாகிய யெஹூதி மெனுஹின் நடத்திய கலை விழாவில் கலந்துகொள்வதற்காக ஸ்ரீ ரகு இங்கிலாந்துக்குச் சென்றார். ஐரோப்பாவிலும் ருஷியாவிலும் மிருதங்கம் வாசித்துப் பாராட்டுப் பெற்றிருக்கிறார். 1963ம் ஆண்டு எடின்பரோ கலை விழாவின் தாளவாத்தியக் கச்சேரியில் பங்கு கொண்டு புகழ் பெற்றார். இப்போது அமெரிக்காவுக்கும் செல்கிறார்.

இவ்விருவரது அமெரிக்க விஜயமும் நமது சங்கீத மரபுக்கு நல்ல தொண்டாகத் திகழ வேண்டுமென வாழ்த்துகிறோம்.

அமெரிக்கா செல்லும் இசைக் கலைஞர்களான பாலக்காடு கே. வி. நாராயணசாமியும் பாலக்காடு ரகுவும் டாக்டர் பிரௌனுடன் அளவளாவுகின்றனர்.






# 48. புத்திர சோகம்

சூரன் தந்த அதிசூரனாகிய அரசிளங் குமரன் பானுகோபன் வீர சுவர்க்கம் எய்தியதும் வீரவாகுதேவர் ஆகாயத்திலிருந்து மண் தலத்துக்கு வந்தார். துணைவர்களை நோக்கி, ''மாயங்கள் செய்த பானுகோபன் அழிந்தான். நமது சபதம் முடிந்தது. நாம் சேனைகளோடு சென்று முருகவேளைச் சேவிப்போம்'' என்று மன நிறைவுடன் கூறினார்.

பூதர்கள் ஜயசங்கம் ஊதிக்கொண்டு பாசறை சென்றடைந்தனர். அவ்வளவுக்கும் காரணமாயிருந்தும், அவ்வளவிலிருந்தும் ஒதுங்கியிருந்த முருகப் பெருமானின் கழலிணைகளில் பல முறை பணிந்து எழுந்தனர். முருகப் பெருமான் தம்பியை அணைத்துக் கொண்டார். அப்போது அத்தவயோக நாதனின் கண்களிலிருந்தும் ஆனந்த பாஷ்பம் பெருகிற்றாம். ''தம்பி, வீரவாகு! உன் வீர பராக்கிரமம் கண்டு நாம் மகிழ்ந்தோம். உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று அருளிக்கேட்டார் ஆறுமுகப் பெருமான்.

வீரவாகுதேவர் முருகப் பெருமானிடம் இந்திர பதவி கேட்பாரோ, பிரம்ம பதவி கேட்பாரோ, குபேரப் பதவி கேட்பாரோ, விஷ்ணு பதவி கேட்பாரோ என்று அப்போது இந்திரன், பிரமன், குபேரன், விஷ்ணு முதலியோர் நடுங்கிக் கொண்டு நின்றார்களாம். ஆனால் வீரவாகு அப்படியெல்லாம் கேட்டு விடுவாரா? அவர் என்ன கேட்டார் ?

**''கோல நீடிய நிதிபதி**
**வாழ்க்கையுங் குறியேன்;**
**மேலை இந்திரன் அரசினைக்**
**கனவிலும் வெஃகேன்;**
**மால யன்பெறு பதத்தையும்**
**பொருளென மதியேன்**
**சால நின்பதத் தன்மையே**
**வேண்டுவன் தமியேன்''**

''செல்வத்தினால் அல்லல் விளையும்; ஆதலால் குபேர சம்பத்து எனக்கு வேண்டாம்'' என்று வீரவாகுதேவர் கூறியதைக் கேட்ட குபேரன், நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டான். 'இந்திர லோக ஆதிபத்தியத்தைக் கனவிலும் கருத மாட்டேன்' என்று அவர் கூறியதைக் கேட்ட இந்திரன், ''பிழைத்

தேன்'' என்று ஆகவாசம் செய்து கொண்டான். பிரம, விஷ்ணுக்களின் பதவியும் வேண்டாம் என்று கூறிய வீரவாகு அயனுக்கும் திருமாலுக்கும் விச்ராந்தி தந்தார். ''தேவரீர் திருவடியில் என்றும் மாறாத அன்பு வேண்டும்'' என்று அவர் வேண்டியபோது அமரர் அனைவரும் உருகி விட்டனர்.

இறைவன் திருவடிகளிடத்து மாறா அன்பு பூணுவதைவிடப் பெரும் பதவி தருவது ஒன்றுமில்லை. ஆன்மாவாகிய கொடிக்கு இறைவனுடைய திருவடியே கொழுகொம்பாகும். இறைவனடி சேர்ந்தார்க்கே துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் உண்டாகும். இறைவனடி சேர்ந்தாரே பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; இறைவனடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடர் எய்தாது எனத் தமிழ் மறை கூறும்.

காவிக் கமலக் கழலுடன்
சேர்ந்தெனைக் காத்தருளாய்

என்பது கந்தரலங்காரம்.

வீரவாகுதேவர் கேட்ட இந்த வரம் முத்தியைக் காட்டிலும் சிறந்தது. ''உதிக்காது உடையவர் திருவடி பக்தி. உதித்தால் அதுவே முத்தி'' என்று பிரகலாதன் தமக்கே சொல்லிக் கொண்டார். வீரவாகுவோ அதனை முத்தியிலும் பெரிதாகக் கருதினார். ''அடியேன் உய்யும் பொருட்டு பக்தி என்ற வரம் தாருங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

''தம்பீ! உனக்கது தந்தனம்'' என்று அருளிச் செய்தார் முருகப் பெருமான்.

''அந்த நல்வரம் முத்தியின்
அரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும்
பெறுகிலர்; சிறியேன்
உய்ந்தி டும்வகை அருள்செய
வேண்டுமென் றுரைப்ப
எந்தை கந்தவேள் ''உனக்கது
புரிந்தனம்'' என்றான்.

மற்றைய துணைவர்கள் யாவர்க்கும் முருகக் கடவுள் நல்லருள் புரிந்து இருக்கை போக விடை கொடுத்து அனுப்பினார். வீரவாகுதேவரும் மற்றவர்களும் அவரவர் உறைவிடங்களுக்குச் சென்றார்கள்.

தயங்கித் தயங்கி அவன் தூதர்கள் பானுகோபன் வதையுண்ட செய்தியைச் சூரனிடம் கூற அசுரேந்திரன் உடலெல்லாம் வியர்த்து அறிவு சோர்ந்து மயங்கினான். அக்கணத்தில் அவன் உயிரே ஊசலாடியது. மாண்டவன் போல் வீழ்ந்தான். பின்னர் ஒருவாறு தெளிந்து எழுந்து பானுகோபனை நினைத்து நினைத்துப் பலப் பல கூறிப் புலம்பினான்.

''புத்திரர்கள் பலர் இறந்தும் நீ ஒருவன் இருக்கின்றாய் என்று உள்ளத்தை உறுதிப்படுத்திக் கொண்டிருந்தேன். உன்னையே உற்ற துணை என்று கருதினேன். உற்ற துணையாகத்தானே நீயும் எனக்கு நன்மொழி கூறினாய். ஆனால் உனது அறிவுரையைக் கேளாமல் கெட்டேன். உனைப் பலி கொடுத்தேன். உங்களை யெல்லாம் இழந்தபின் இப்போது நான் மட்டும் தருமத்தைப் பின்பற்றித் தப்பப் போவதில்லை. போருக்குச் செல்லத்தான் போகிறேன்.

''கண்மணி! உனக்கு அஞ்சி எப்பொழுதும் உன்னையே மலரேந்தி வழிபட்ட தேவர்கள் இப்பொழுது மகிழ்ந்தனரோ? உனக்குப் பயந்து துயிலாது உழன்று கொண்டிருந்த திருமால் இனி நன்றாக சேஷசயனத்தில் உறங்குவான். சிறு வயதில் நீ சிறை பிடித்த சூரியனும் மகிழ்ச்சியுடன் வானில் சஞ்சாரம் செய்வான். என் கண்மணியே! மந்திரிகளும் மற்றப் புதல்வர்களும் மாண்டு என்னை ஆறாத் துயரத்தில் ஆழ்த்திய போது நீதான் என் துயர் துடைக்க இருந்தாய். அண்டங்களையெல்லாம் ஆளும் நான் என் கண்ணீரைத் துடைக்க யாருமில்லா அவலமாகி விட்டேன். இன்னமும் நான் இறக்கவில்லையே! பரமேசுவரனுலன்றி எனக்கு அழிவு கூடாது என்று வரம் பெற்றேனே! அதற்கான தண்டனையாகவே இன்னமும் உயிர் வாழ்கிறேனா?'' என்று புலம்பி அழுதான் சூரபன்மாசுரச் சக்கரவர்த்தி.

போர்க்களத்தில் இறந்து கிடந்த பானுகோபனின் உடலை அவுணர்கள் சூரபன்மன் முன் கொண்டு வந்து கிடத்தினார்கள். உயிரற்ற மகனின் உடலைக் கண்ட சூரனின் உள்ளத்தில் ஆவேசம் மிகுந்தது. ''மகனே! உன்னைக் கொன்ற அந்த வீரவாகுவைக் கொன்றாலன்றி என் மனம் அமைதியுறாது'' என்று சூளுரைத்துத் தேம்பினான். சூரனின் ராணியான பதுமகோமளையின் ஆறாத் துயரை எப்படி விவரிப்பது?

அரண்மனையில் மட்டுமின்றி வீரமகேந்திரமெங்கும் புலம்பல் ஒலி மிகுந்

தது. கணவன் இறந்ததற்காகப் பல அரக்கிகள் அழுதார்கள். உடன் பிறந்தவன் போய் விட்டானே என்று பல ராட்சஸிகள் அழுதார்கள். இப்போது மகாராஜனின் அரண்மனையிலேயே பெரிய மரணம் நேர்ந்துவிட்டபடியால் அரக்கிகள், 'நம் வீட்டிலும் அழுது அரசனின் அரண்மனையிலும் போய் அழ வேண்டாம். ஒரேயடியாக அரண்மனைக்கே போய்ச் சேர்ந்து அழுவோம்' என்று கருதினார்கள். வீர மகேந்திரபுரத்திலுள்ள பெண்கள் எல்லாரும் அரண்மனைக்குச் சென்று சூரபன்மனின் மனைவி பதுமகோமளையைக் கட்டிப் பிடித்து அழுதார்களாம்.

சூரபன்மன் ஒருவாறு தேறினான். ''எதிரிகள் யாவரையும் இன்றைக்கே கொல்வேன். அவர்களுடைய உதிரத்தைச் சொரிந்து ஒரு வேள்வியைச் செய்து இறந்து கிடக்கும் என் மகனை எழுப்புவேன். அவனுடைய உடம்பை ஓரிடத்தில் சேமித்து வைத்துப் பத்திரமாகப் பாதுகாத்து வாருங்கள்'' என்று அவுணர்களுக்கு உத்தரவிட்டான் சூரபன்மன்.

எனினும் அன்றைய மன நிலையில் தானே அன்று போருக்குச் செல்வது பலன் அளிக்காதோ என்றும் சூரன் கருதினான் போலும். சில தூதர்களை அழைத்தான்.

'' தூதர்களே! நம் எதிரிகளை எனது தம்பி சிங்கமுகனுக்கு இரையாக்குவேன். நீங்கள் ஆசுர நகரம் சென்று என் அருமைத் தம்பியை அழைத்து வாருங்கள்'' என்று கட்டளையிட்டான்.

தூதர்கள் மனோ வேகமாய் வடக்குக் கடலில் உள்ள ஆசுர நகரம் சென்று சிங்கமுகனைத் தொழுது நிகழ்ந்தவற்றையெல்லாம் கூறி, சூரபன்மனின் கட்டளையையும் தெரிவித்தார்கள். அவற்றைக் கேட்ட சிங்கமுகன் பொங்கியெழுந்தான். தூதர்களை நோக்கி, ''எனது சேனைகளைத் திரட்டிக்கொண்டு வாருங்கள்'' என்று உத்தரவிட்டான். அதன்படி நால்வகைச் சேனைகளும் விரைந்து வந்து அவனைச் சூழ்ந்தன. சேனாதிபதிகளும் வீரர்களும் சூழச் சிங்கமுகன் தேர் ஏறி வீரமகேந்திரபுரம் புறப்பட்டான். ஒரு நாழிகைப் பொழுதுக்குள் விண் வழியாக வீரமகேந்திரபுரம் வந்தடைந்தான். மாபெரும் வீரனாகிய அவனது வருகையைக் கண்ட தேவர்கள் அச்சத்தினால் கலக்கமடைந்தனர். (தொடரும்)









1. பெங்களூரில் சம்பத்தில் ஸ்ரீ ஆண்டவன் சுவாமிகள் பாகவதப் பிரவசனங்கள் நிகழ்த்தினர். அதன்போது செப்டம்பர் ஐந்தாம் தேதியன்று மைசூர் துரைசாமி அய்யங்கார் அவர்கள் வீணை வாசித்து அனைவரையும் மகிழ்வித்தார். சுவாமிகள் துரைசாமி அய்யங்காருக்குப் பொன்னாடை போர்த்தி ஆசிர்வதித்தார்.

2. கல்கத்தாவில் தென்னிந்திய பஜனை சமாஜத்தினர் அனந்தராம தீக்ஷிதர் அவர்களின் 63வது பிறந்த நாளை விமரிசையாகக் கொண்டாடினர்.

3. தருமபுர ஆதீனகர்த்தர் ஆவணி மூல விழாவில் திரு ஞானசம்பந்தம் அவர்களுக்குச் 'செந்தமிழ் வித்தகர்' என்ற பட்டத்தை வழங்கினர்.

4. நாட்டியாலயாவின் 'நவசக்தி' நூலை ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர் அவர்கள் வெளியிட்டார்.

5. சேலம் சென்று சிருங்கேரி சுவாமிகளை நவராத்திரியைச் சென்னையில் கொண்டாடச் சென்னை பக்தர்கள் அழைத்தனர்.

6. சென்னை இந்தியன் ஓவர்சீஸ் பாங்கியில் டெலிவிஷன் முறையைப் பாங்கி அலுவலில் அமுலாக்கியுள்ளனர்.









# அவள் எங்கே?

26

கதை:
கௌசிகன்
சித்திரம்:
ரமணி..

அந்தத் தர்மராஜனுக்கு அவன் வீட்டைத் தவிர வேறு எங்கோ ஒரு மறைவிடம் இருக்க வேண்டும். அங்குதான் மாலதியை இரண்டாவது தடவையாகக் கொன்றிருக்க வேண்டும். அவள் உடலையும் அங்குதான் எங்கோ ஏதோ செய்திருக்கிறான். அந்த இடம் எங்கே இருக்கிறது? நகருக்குள்ளா, நகருக்கு வெளியிலா?

சிந்தனைக்குக் கேள்விகள் ஜோராகத்தானிருக்கும்! இரவில் வந்த டெலிபோன் யாரிடமிருந்திருக்கலாம்?

அதுவும் முடிவு கட்டப்பட வேண்டிய விஷயம்தான். பெரியசாமி மட்டும் கொலை செய்யப்பட்டிருந்தால் அது அவனிடமிருந்துதான் என்று கூறி விடலாம். ஆனால் இப்போது ரேணுகாவும் காணவில்லை. ஆகவே...

நான்தான் கூறினேனே. அது ரேணுகாவேதான். நாம் அவனிடம் விடைபெறும் போது அவன் காட்டிய அந்த வேகமும் அதைச் சொல்லுகிறதே.

ரேணுகா... அவனுக்குப் போன் செய்யவில்லை. நேரிலேயே சந்திக்க வந்திருக்கிறாள். ஆத்திரத்தில் நான் அறிந்தவைகளைச் சற்று அதிகமாகவே பேசியிருக்கிறாள். அதே சமயம் குடிப் போதையில் பெரியசாமியும் போன் செய்திருக்கிறான். ரேணுகாவைக் கட்டிக் காருக்குள் போட்டுக் கொண்டு போகும் வழியில் பெரியசாமியையும் தீர்த்துக் கட்டி விட்டு ஓடியிருக்கிறான் இவன்.

ரேணுகா அந்த அகாலத்தில் அவன் வீட்டிற்கு வந்ததை வேலைக்காரி பார்க்கவில்லையா?

தூக்கத்தில் ரேணுகாவின் அழைப்பு அவளுக்குக் கேட்டிருக்காது. தர்மராஜனே வந்து கதவைத் திறந்திருக்கலாம். அதன் பிறகு வந்த டெலிபோன் அவளை எழுப்பியிருக்கலாம்...

இப்போது அவதிகொண்ட நிலையில் தர்மராஜன் ரேணுகாவுடன் எங்கோ போய்க் கொண்டிருக்கிறான். உயிர், ஆசை, பயம் அவனை விரட்டிக் கொண்டிருக்கின்றன. இனி அவன் ரொம்ப அபாயமானவன். பெரியசாமியைப் போலவே தன் ரகசியங்கள் தெரிந்தவளையும் எல்லோரையும் ஒழித்துக் கட்டுவதில் தயக்கமே காட்ட மாட்டான்.


இருவரும் நிலைமைக்குச் சரியான விளக்கம் கொடுத்து வேகமாகப் பேசிவிட்டீர்கள். சரிதான் அந்த இடம் - குற்றங்களைச் செய்யும் அவனுடைய அந்த மறைவிடம் — எங்கே இருக்கிறது?
இப்போது நம் வேட்டைக்கு இலக்காகியுள்ளது அதுதான்... எங்கே..?


ஹோட்டல்காரப் பையன் அடிக்கடி நம்மை ஏட்டிப் பார்க்கிறானே சந்துரு. இங்கிருந்து கிளம்பலாமா?
எங்கு போவதென்பதை முடிவு செய்யாமல் கிளம்பி என்ன பலன்? இன்னொரு காப்பிக்கு ஆர்டர் செய்.. பாபு...


நகருக்கு வெளியே, எங்கோ ஓர் ஒதுக்குப்புறமான இடத்தில் அவனுக்கு ஒரு மறைவிடம் இருக்க வேண்டும் - பத்திரமானதொரு மறைவிடம். அது எங்கே?.. எங்கே?
உங்கள் கேள்விக்கு விடை கிடைக்கிறதுக்குள்ளே அந்தப் பெண் ரேவுகாவிற்கு ஏதாவது ஆயிடப் போறது.


நாம் அவனுடைய அந்த மறைவிடத்தைக் கண்டுபிடித்தோமானால் அங்கு இன்னொரு கொலையும் காணவேண்டி இருக்குமோ என்று பயமாக இருக்கிறது.
இரவுக் காவலைச் சொல்லி கிருபாநிதி வந்தான். நாம் எச்சரித்தும் அவன் ஆத்திரத்தில் அவசரப் பட்டுக் காரியத்தை எல்லாம் கெடுத்துவிட்டான்.
சார்.. காப்பி.


சூடான காப்பிகள் உள்ளே போன இரண்டாவது நிமிஷத்தில்.
சேகர் மாலதியின் போட்டோ ஆல்பம் எங்கே இருக்கிறது? என் மேஜை டிராயரில் தானிருக்கிறது. மிஸ்டர் சண்முகம்.. அந்த ஊரின் சுற்றுப்புறங்களை நன்கு அறிந்த நபர் யாராவது இருக்கிறார்களா?
இருக்கிறார்கள். இதோ சாமிநாதன் ஒருவன். அவனுக்குத் தெரியாத ஒரு கல், மரம், எதுவும் இந்த நாலு மைல் சுற்றளவில் கிடையாது. ஏன், அவன் எதற்கு?


காரணத்தோடுதான். சில நிமிடங்களில் நாம் அந்த மறைவிடத்தைக் கண்டுபிடித்துவிடலாம். முதலில் என் வீட்டுக்குச் சென்று அந்த போட்டோ ஆல்பத்தை எடுத்துக்கொண்டாக வேண்டும்......

தொடரும்..




# லைப்பாய்

## இருக்குமிடம்: அதுவே...
## ஆரோக்கியம் இருக்குமிடம்

லைப்பாய் சோப்பினால் நீராடுவீர்... அதுவே குதூகல உணர்ச்சியின் குற்றாலம்... ஆரோக்கிய மலர்ச்சியின் ஆலோலம்... ஆஹாஹா... நல்ல சோப்பின் நன்மைகள் யாவும் பெறுவீர், மேலும் பெறுவீர் லைப்பாய் துணையால்...

**அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

லின்டாஸ்-L.50-140 TM

# ஜீவகீதம்

## ஜெகசிற்பியன்

அத்தியாயம் நாற்பது

### சந்தியா

அந்தப் பெண் தன்னுடைய துன்ப மயமான இறந்த காலத்தைப் பற்றி வாய்விட்டுப் பேசுவதிலே ஏதோ ஓர் ஆறுதல் இருப்பதாக உணர்ந்தவள் போல்-தனக்குத் தானே பேசிக் கொள்கிறவள் மாதிரி-தொடர்ந்து சொன்னாள்:

''என் தந்தை இருந்த ஃபரீத்பூருக்கு நாங்கள் போய்ச் சேர்ந்த போது எனக்கு வயது ஆறு. என்னைப் பொறுத்த வரையில் அந்தப் புதிய ஊரும், புதிய சூழலும் இன்பகரமாகவே இருந்தன. பள்ளியிலும் சேர்க்கப்பட்டேன். வீட்டில் தாய் மொழியையும், பள்ளியில் ஆங்கிலம், உருது மொழிகளையும் பயின்றேன். என் சகோதரனும் அவ்வாறே படித்து வந்தான். சிறுவர்களாயிருந்த எங்களுக்கு அது ஓர் அந்நிய நாடு என்ற எண்ணமே தோன்றவில்லை. ',நிலத்தைப் பிரிக்க வரப்பு கட்டலாம்; வேலி போடலாம். அதன் ஒருமித்த மணத்தைப் பிரிக்க யாரால் இயலும்?' '' இவ்விதம் கூறி ஏதோ யோசனையில் ஆழ்ந்தாள் அவள்.

"அப்புறம் சொல்லுங்கள்?" என்று தூண்டினான் சபேசன்.

"வேலி கட்டி விட்டால் மட்டும் அது வேறு, இது வேறு என்று ஆகிவிடுமா? அந்த மண்ணின் ஆயிரங் காலத்துச் சரித்திரம், அதில் வேர்விட்டுப் படர்ந்து ஆழ்ந்த பழக்க வழக்கங்கள், பண்பாடுகள், நாகரிகம் இவையெல்லாம் ஒரு காகிதத்தில் சிலர் சேர்ந்து கையெழுத்துப் போட்டவுடனேயே மறைந்துவிடக் கூடியவையா? அரசியல் ரீதியில் அது வேறு, இது வேறு என்று ஆனதை ஒப்புக் கொள்ளலாம்; ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால் மக்களைப் பொறுத்த வரையில் அவர்கள் வேறு, இவர்கள் வேறு எனப் பிரித்து வைத்து விடுவதென்பது அத்தனை எளிதான காரியமல்ல. அப்படிப் பிரிக்கவோ, பிரிந்து நிற்கவோ யாராலும் முடியாது.' — மொழி, மத, வகுப்பு வேற்றுமை உணர்ச்சிகளில் தோயாத, அவற்றை உணரும் பருவத்தை அடையாத நானும், என் சகோதரனும்தான் இப்படி நினைத்தோம். ஆனால் எனது தாயாரோ அந்த ஊரில், அந்த அந்நிய நாட்டில் இருக்கக் கொஞ்சமும் விரும்பாமல் முணுமுணுக்க ஆரம்பித்தாள். அவ்வாறு முணுமுணுக்க அவளுக்கு அங்கே ஏற்பட்ட கரிப்பும் கசப்பும் என்ன என்பதுபற்றி எனக்கொன்றும் தெரியாது. அவளும் என் தந்தையும் அடிக்கடி வீட்டில் இவ்விஷயமாகச் சச்சரவிட்டுக் கொள்வதைப் பார்த்தே அதை ஊகித்தேன். நாளாவட்டத்தில் அவரும் அவளது கருத்துக்கு இசைவாகப் பேசலானார். காரணம், அவர் வேலை பார்த்த இடத்தில் அவ்வப்போது அவருக்குப் பல புதுப் புது அநுபவங்கள் கிடைத்து வந்தன. பொதுமக்களைப் பொறுத்த வரையில் சிறுபான்மையாக உள்ள இந்துக்கள் மீது பெரும்பான்மையாக இருந்த முஸ்லீம்கள் எவ்விதத் துவேஷமோ கெடுபிடியோ காட்டாமல் சிநேக பாவத்துடனும் பரந்த மனத்துடனுமே நடந்து கொண்டார்கள். இப்போதும் அப்படித்தான் இருக்கிறார்கள். ஆனால் அரசாங்க மட்டத்திலும், அரசியல்வாதிகளிடையேயும் தான் இதற்கு நேரெதிரான போக்கும் செயலும் குடிகொண்டிருந்தன. என் தந்தை வேலை பார்த்து வந்த கம்பெனி அரசாங்கத் துறைக்குச் சொந்தமானது. எனவே, வேலை உயர்வு, ஊதிய உயர்வு முதலானவற்றிலும், மற்ற நியாயமான சலுகைகளிலும் அவர் அளவுக்கு மீறிப் பட்சபாதமாக நடத்தப்பட்டார். இந்தக் கொள்கை இலை மறை காயாகக்கூட அல்ல, பச்சையாக— இன்னும் சொல்லப் போனால் ஒரு வேதக் கட்டளையாகவே-செயலாக்கப்பட்டது. இதையாவது எப்படியோ பொறுத்துக்கொள்ளலாம். ஆனால் இந்துக்களாயிருப்பவர்கள் எல்லாரும் அந்தத் தேசத்து அரசாங்கத்தின் எதிரிகள், வேவுகாரர்கள், துரோகிகள் என்ற எண்ணத்துடன் அவர்கள் மீது அநாவசிய — அர்த்தமற்ற — கெடுபிடி, கண்காணிப்பு ஏற்படுத்தப்பட்டன. அதிலும் பாம்பைக் காண்பது மாதிரி அஞ்சி வெறுத்து விரோதிக்கலாயினர். மேலும், வகுப்புவாத வெறி கொண்ட சில அரசியல் ஸ்தாபனங்கள், மறைமுகமான அரசாங்க ஆதரவுடன், குண்டர்களைக் கூலிக்கு அமர்த்திக்கொண்டு அவர்கள் மூலம் நல்லிதயம் படைத்தவர்களான முஸ்லிம்களிடையே இந்துக்கள், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள் மீது துவேஷப் பிரசாரத்தை இடைவிடாது நடத்த ஆரம்பித்ததோடு அல்லாமல், ஆங்காங்கே வன்முறைச் செயல்களிலும் ஈடுபடத் தூண்டிவிட்டன. இந்த நிலை நாளுக்கு நாள் அசுர வேகத்தில் வளரலாயிற்று. அதனால் சிறுபான்மையினராயிருந்த நாங்கள் வயிற்றிலே நெருப்பைக் கட்டிக் கொண்டு ஒவ்வொரு நாளையும் மிகுந்த பயத்துடன் கடத்தி வந்தோம். என் தந்தை தினம் தினம் ஒரு திகிலான செய்தியை எடுத்து வந்து கொண்டிருந்தார். ஆயினும் அவர் தம் வேலையை விட்டு விடவும் முடியாத நிலை. பரம்பரை ஏழைகளான நாங்கள் அப்புறம் வயிற்றுப்பாட்டுக்கு என்ன செய்வோம்? ஆகவே அந்தக் கெடுபிடிகளையெல்லாம் சகித்துக்கொண்டு, நித்திய கண்டம் பூரண ஆயிசு என்பார்களே அது போல் அங்கேயே ஆண்டுகள் பலவற்றைக் கடத்தினோம்......."

அவள் சொல்வதை நிறுத்திவிட்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவள்போல் சற்று நேரம் மௌனமாயிருந்தாள். திகிலும் திகைப்புமாக உட்கார்ந்திருந்த சபேசன், மெல்ல எழுந்து அவள் அருகிலிருந்த மற்றொரு கல்லின்மீது வந்து உட்கார்ந்தான். அதைக் கவனியாத அவள் தன் உடம்பை ஓர் அசைப்பு அசைத்துக்கொண்டு தொடர்ந்து கூறினாள்:

"சென்ற வருஷம் மே மாசம். அப்போது நான் எட்டாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தேன். என் சகோதரன் பள்ளிப்படிப்பை முடித்துவிட்டுக் கல்லூரியில் சேர முயன்று கொண்டிருந்தான். ஆனால் எந்தக் கல்லூரியிலும் இடம் கிடைக்கவில்லை. ஒரு நாள் அழுதுகொண்டே வீட்டுக்கு வந்த அவன் திடுக்கிடும் செய்தியொன்றைச் சொன்னான். அதாவது, இந்துவாக இருக்கும் வரையில் அவனுக்கு எந்தக் கல்லூரியிலும் இடம் கிடைப்பது கஷ்டம் என்பதே அது. அதற்கு அர்த்தம், அவன் இஸ்லாத்தைத் தழுவ வேண்டும் என்பது! பணம் சம்பாதிப்பதைத் தவிர வேறு எதிலுமே ஆழ்ந்த நம்பிக்கையோ பற்றோ இல்லாதவரான என் தந்தை, 'காரியம் ஆக வேண்டுமானால் அதற்கெல்லாம் பின்னடையக் கூடாது' என்று 'புத்திமதி' சொல்லி விட்டார். அதைக் கேட்ட என் தாய்க்கு ஆத்திரம் குமுறியது. 'அப்படிச் செய்தால் அவனுக்கு நானே ரொட்டியில் விஷம் வைத்துக் கொடுத்து விடுவேன்' என்று கூவினாள். இவ்விஷயமாக இருவரும் அடிக்கடி சண்டை போட்டுக் கொண்டார்கள். இது அக்கம் பக்கத்திலுள்ளவர்களின் காதுகளுக்கும் எட்டியது. அவர்கள் வலிய வந்து நியாயம் கூறிச் சமாதானப்படுத்த ஆரம்பித்தார்கள். அவர்களில் அநேகர் என் தந்தையின் கூற்றே சரியானது எனச் சொல்லி அதற்கு எனது தாயை உடன்பட வைக்க முயன்றனர். அதில் ஓர் ஆச்சரியம் என்னவென்றால், தந்தையின் பக்கம் பரிந்து பேசிய அவ்வளவு பேரும் எங்களுக்கு முன் பின் அறிமுகமில்லாத புதியவர்கள். ஆனால்

ஏன்

# 6,00,000

## மக்களுக்குமேல் கனரா பாங்கை உபயோகிக்கிறார்கள்

ஆறுலட்ச மக்களுக்கு மேல் கனரா பாங்கை உபயோகிப்பதற்குக் காரணம், கனரா பாங்கின் உதவி மனப்பான்மை, சிநேகபாவ சேவை முன்னேற்ற நோக்கம் இவை மட்டுமல்ல இவற்றோடு, கனரா பாங்கின்

* ரூ. 90 கோடிக்கு அதிகமான அலுவல் நிதி
* 59 வருட தேர்ந்த அனுபவம்
* பல திறப்பட்ட பரந்த சேவைகள்
* உலக முழுதும் சேவை அளிக்கும் பிரதிநிதிகள்
* இந்தியாவில் இயங்கும் 235 மேற்பட்ட கிளைகள்

உங்களால் ஒரு பாங்கை உபயோகிக்க முடியுமானால், கனரா பாங்கை உபயோகியுங்கள்

CB-120.TAM

*முன்னேறுங்கள்—கனரா பாங்குடன் முன்னேறுங்கள்*

## கனரா பாங்க் லிமிடெட்

நிர்வாகக் காரியாலயம்: பெங்களூர் [ஸ்தாபிதம்:1906] பதிவுக் காரியாலயம்: மங்களூர்

என் தாயோ, தன் மைந்தன் கேவலம் கல்லூரிப் படிப்புக்காக முஸல்மானுவதை அடியோடு எதிர்த்தாள். இது நடந்து ஏழெட்டுத் தினங்கள் கடந்திருக்கும். ஒரு நாள் அவள் ஏதோ கடைச்சாமான்கள் வாங்குவதற்காக வெளியே போனுள். அப்படிப் போனவள், போனவள்தான்; திரும்பி வரவேயில்லை!...''

அந்தப் பெண்ணுக்குத் தொண்டை அடைத்தது. துயரம் தாள மாட்டாமல் விம்மிப் பொருமிய அவள் சில விநாடிகளுக்குப் பிறகு நைந்த குரலில் மேலும்சொன்னுள்:

''என் தந்தைக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. எங்கெங்கோ ஓடித் தேடினுர். ஐந்தாறு நாட்களாகியும் அவளைப் பற்றிய தகவல் இடைக்கவில்லை. போலீசுக்குச் சென்று புகார் கொடுத்தார். அதற்கு அந்தப் போலீஸார் அலட்சியமும் அகம்பாவமும் விஷமத்தனமுமாக, 'உன் மனைவி எவனையாவது இழுத்துக் கொண்டு ஓடியிருப்பாள்; நாங்கள் என்ன செய்ய முடியும்?' என்று பதில் சொல்லி விரட்டி விட்டார்கள். அப்புறம்தான் என் தந்தைக்கு ஓரளவு உண்மை புரியலாயிற்று-அதுவும் பக்கத்து வீட்டுக் கிழவி யொருத்தி வந்து காதோடு காதாகச் சொன்னதிலிருந்து: 'உன் மகனை மதம் மாற விடாமல் தடுத்துக் கொண்டிருந்த அவளை, இம்மாதிரிக் காரியங்களுக்கென்றே இங்கு தயார் செய்து வைக்கப்பட்டிருக்கும் குண்டர்கள் கடத்திக் கொண்டு போய் விட்டிருப்பார்கள். இப்போது அவர்களால் அவள் கத்தி முனையிலோ துப்பாக்கி முனையிலோ நிறுத்தப்பட்டு மதம் மாற்றப்பட்டிருப்பாள். அப்படி மாற மறுத்திருந்தால் மண்ணுலக வாழ்வை நீத்திருப்பாள். அவளைப் போன்றவர்களுக்கு அதுதான் இங்கு அளிக்கப்படும் தண்டனை.' இவ்விவரங்களைக் கேட்டு நடுநடுங்கிப் போனுர் தந்தை — தம் மனைவிக்கு நேர்ந்த அந்தத் துர்க்கதிக்காக அல்ல; தாமும் தமது பிள்ளைகளும்கூட அந்நிலைக்கு ஆளாகிவிடுவோமோ என்பதற்காகத்தான். அவர் அஞ்சியது போலவே அடுத்த மூன்றாவது மாசத்தில் ஒரு நாள் நள்ளிரவு நேரத்தில் பயங்கரச் சம்பவம் ஒன்று நடந்தது. நாங்களெல்லாம் தூங்கிக் கொண்டிருந்த போது, எங்கள் வீட்டுக்கும் அந்தத் தெருவில் இருந்த முஸ்லீம் அல்லாதார் வீடுகள் சிலவற்றுக்கும் விஷமிகள் தீ வைத்து விட்டார்கள். எப்படியோ உயிர் தப்பி வெளியே ஓடி வந்தோம். தீயணைக்கும் படையினருக்குத் தகவல் சொன்னேம். அவர்கள் அதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. எங்கள் கண் முன்னுலேயே நாங்கள் குடியிருந்த வீடும், அதில் கஷ்டப்பட்டு உழைத்துச் சேமித்து வைத்திருந்த பொருட்களும் எரிந்து சாம்பலாயின. இதற்கு மேல் அந்த ஊரிலோ அந்நாட்டிலோ இருந்தால் கூண்டோடு கைலாசம் போய்விடுவோம் என்று பயந்த நாங்கள், இந்தியாவுக்கு ஓடி விடுவது எனத் தீர்மானித்து, எங்களிடம் இருந்த சில தங்க நகைகளை அரை விலைக்கும் கால் விலைக்கும் விற்றுப் பணமாக்கிக் கொண்டு கட்டிய துணியோடு அன்றே கால் நடையாகக் கிளம்பி விட்டோம். எங்களைப் போல் வீடிழந்து, பொருளிழந்து, உயிர் தப்பித்தால் போதும் என்றிருந்த மற்றும் சில குடும்பங்களும் எங்களோடு சேர்ந்து கொண்டன. இரவு பகலாகப் பல நாட்கள் நடந்து நடந்து குஷ்டியா என்னும் சிறு நகரத்தை அடைந்தோம். அவ்வூரை அடைவதற்குள் நாங்கள் பட்ட பாடும், அடைந்த துன்பங்களும், அப்பப்பா! அதையெல்லாம் இப்போது நினைக்கவே என் நெஞ்சம் நடுநடுங்குகிறது. எங்களில் அநேகம் பேர்கள் பட்டினியாலும், பிணியாலும் எங்கள் கண்ணெதிரிலேயே செத்து விழுந்த கோரக் காட்சிகளை ஈரேழு ஜன்மங்களுக்கும் என்னுல் மறக்கவே முடியாது. மற்றும் சிலர் மேற்கொண்டு நடக்க முடியாமல் பின்தங்கி விட்டார்கள். பிறகு அவர்கள் கதி என்ன ஆயிற்றே எங்களுக்குத் தெரியாது. குஷ்டியாவிலிருந்து ரயிலேறிக் கல்கத்தாவுக்குப் போய் விடுவதென்று திட்டமிட்டு ரயில் நிலையத்துக்குச் சென்றேம். அங்கே எங்களைப் போல் வாழ்விழந்த ஆயிரக் கணக்கானேர் இந்தியாவுக்கு ஓடிவிடப் பல நாட்கள் முன்னதாகவே வந்து குழுமியிருந்தார்கள். அதனுல் ரயிலில் இடம் கிடைக்காமல் ஏழெட்டு நாட்கள் அங்கேயே காத்துக் கிடக்கலானேம். எங்களை யெல்லாம் பாரத நாட்டுக்கு விரட்டியடிப்பதில் பெரிதும் உற்சாகம் காட்டிய அதிகாரிகள் என்னென்ன கொடுமைகள், கெடுபிடிகள், அவமதிப்புக்கள் செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்தார்கள். அவற்றையெல்லாம் பொறுக்க முடியாமல் ரயிலில் இடம் பிடிப்பதற்காக எங்களுக்குள்ளேயே நாங்கள் அடிதடி சண்டைகள், வெட்டுக் குத்துக்கள் நடத்திக்கொண்டோம். ஒவ்வொரு ரயிலும் புளி மூட்டைகளை அடைத்து ஏற்றிச் செல்லும் குட்ஸ் வண்டி போல் ஆகியது. எப்படியோ ஒரு ரயிலில் இடம் பிடித்து ஏறிக் கொண்டோம். நரகத்திலிருந்து மீண்டு சொர்க்கத்தை நோக்கிச் செல்வது போன்ற ஓர் இன்ப உணர்ச்சி எங்கள் எல்லோருடைய இதயங்களையும் கிளுகிளுக்கச் செய்தது. ஆனுல் அந்த இனிய பயணத்தின் இடைவழியிலே இன்னும் ஒரு பயங்கர நரக வேதனையை அநுபவிக்கப் போகிறேம் என்று அப்போது எங்களில் யாருமே நினைத்துக் கூடப் பார்க்கவில்லை....''

அவளுக்கு மீண்டும் நெஞ்சு அடைத்துக் கொண்டது. பரிதாபமாகக் கேவிக் குமுறி அழுத அவள், சற்று நேரம் கழித்துத் தன்னை வெகுவாகத் திடப்படுத்திக் கொண்டு கம்மிக் கரகரத்த குரலில் நடுங்கியவாறே தொடர்ந்து கூறினுள்:

''நாங்கள் ஃபரீத்பூருக்குக் கால் நடையாகக் கிளம்பியபோதே சில நல்ல உள்ளம் படைத்தவர்களது யோசனையின் பேரில் நானும், என் தந்தையும், சகோதரனும் முஸ்லிம்கள்போல் உடை அணிந்துகொண்டோம். அதற்கேற்ற மாதிரி எங்களுடைய பெயர்களையும் மாற்றி வைத்துக்கொண்டோம். அத்துடன் ஆரோக்கியமும் பலமும் கொண்டவளா யிருந்த என்னை, ஒரு காலும் கையும் ஊனமுற்றவள் போல் நடிக்கச் சொல்லி, சில இடங்களில் என் தந்தையும்,

சகோதரனும் மாறி மாறித் தோளில் தூக்கிக் கொண்டு நடக்கவும் செய்தார்கள். காரணம், இள வயதான கன்னிப் பெண்களை எவ்வித பழி பாவத்துக்கும் அஞ்சாத மத வெறியர்கள் கடத்திக் கொண்டு போய்விடுவார்கள் என்று எங்களோடு வந்தவர்கள் கூறியிருந்தார்கள். எனவே எங்களில் பலரும் அவ்வாறே வேடம் அணிந்தார்கள். இந்த விஷயத்தில் அலட்சியம் காட்டிய சிலர் நடு வழியிலேயே சொல்லொணாக் கொடுமைகளுக்கு ஆளானார்கள். சிலர் கொலையும் செய்யப்பட்டார்கள். இதனால் ரயில் பிரயாணத்தின் போதும் நாங்கள் அதே வேடத்துடன்தான் இருந்தோம். குஷ்டியாவிலிருந்து புறப்பட்ட ரயில் மேற்கு வங்கத்தில் உள்ள ராணுகட் என்னும் ஊரை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. சுமார் எண்பது மைல் தூரமுள்ள அவ்விரு ஊர்களுக்கும் நடு மையத்தில்தான் இந்தியா - பாகிஸ்தான் எல்லைக் கோடு அமைந்திருக்கிறது. அந்த எல்லையை நெருங்கிய எங்கள் ரயில் வண்டி, காட்டுப் பிரதேசமாயிருந்த ஓரிடத்தில் நின்றது. திடீரென்று பத்துப் பதினைந்து பேர்கள், நாங்கள் இருந்த பெட்டியில் வந்து ஏறினார்கள். அவர்கள் எல்லோரும் தங்களை ஏதேதோ அதிகாரிகள் என்று சொல்லி எங்களைப் பரிசோதிக்க ஆரம்பித்தார்கள். நான் ஜுரத்தால் பீடிக்கப் பட்டவள்போல் பாசாங்கு செய்து படுத்துக்கொண்டேன். என் தந்தைக்கு நிஜமாகவே வயிற்று வலி. அதனால் இரண்டொரு கேள்வியோடு நாங்கள் பிடித்துத் தள்ளப்பட்டு விழுந்து தப்பித்தோம். வாலிப மிடுக்கோடு இருந்த என் சகோதரனே அவர்களிடம் வகையாகச் சிக்கிக் கொண்டான். முஸ்லிம் போல் உடை அணிந்திருந்த அவனைப் பார்த்து, 'உன் பெயரென்ன?' என்று வினவினார்கள். 'நஸீர்கான்' என்றான். 'நாங்கள் இதை நம்ப மாட்டோம்' என்றார்கள். 'அதற்கு நான் என்ன செய்ய முடியும்?' என்று சற்று ஆத்திரத்துடன் பதில் சொல்லி விட்டான் அவன். அவன் முஸ்லிமா, இல்லையா என்பதை அறிய அவனை வெளியே இழுத்துச் சென்றனர். அங்கு எத்தகைய பரிசோதனைக்கு உள்ளானானோ! அப்புறம் என் அன்பு அண்ணன் — என்னுடைய ஒரே சகோதரன் — வண்டிக்குத் திரும்பி வரவேயில்லை.... ரயிலும் புறப்பட்டது. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு எப்படியோ கல்கத்தாவை அடைந்தோம். வாழ்விழந்து, வளமிழந்து, அகதிகளாக வந்து சேர்ந்த எங்களைப் பாரத அரசாங்கம் பரிவுடன் வரவேற்று உதவிகள் புரிந்து, பல் வேறு ராஜ்யங்களுக்கும் ஒவ்வொரு குழுவாகப் பிரித்து அனுப்பியது. நாங்கள் இதோ உங்கள் அருமைத் தமிழக மண்ணில் அடைக்கலம் புகுந்திருக்கிறோம்.''




'' படுக்கையிலே தூங்குற மாதிரி ஏதாச்சும் மருந்து இருக்குதுங்களா? எங்க வூட்டுக் கட்டிலிலே நாளுக்கு நாள் மூட்டைப் பூச்சி அதிகமாகிட்டே போகுது!''

சண்டமாருதத்தில் அலைப்புறும் மலர்க்கொடி போல் அவள் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. முழங்காலில் முகத்தைப் புதைத்துக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள். அவளது விசும்பல் ஒலியுடன் மற்றொரு குமுறல் ஒலியும் இணைந்து கேட்டது. அத்துடன் அவளுடைய கண்ணாடிக் கன்னங்களில் வழிந்த கண்ணீரை மெலிந்த இரு விரல்கள் ஆதரவோடு இதமாகத் துடைத்து விட்டன. ஆமாம், சபேசன்தான் அவளருகில் நெருங்கி அவளின் கண்ணீரைத் துடைத்துவிட்டுக் கொண்டிருந்தான்!

அவள் சட்டென்று நிமிர்ந்து பரபரப்போடு முகத்தைத் துடைத்துக்கொண்டு எழுந்து நின்றாள். பயத்தால் அவள் உடல் படபடத்தது. தன் தூண்டில் கோலையும், ஓலைக் கூடையையும் எடுத்துக் கொண்டு விரைந்து நடந்தாள்.

அப்போதுதான் திடுக்குற்று எழுந்த சபேசன் தன் அசட்டுத்தனமான தவற்றை உணர்ந்தவன் போல் கையை உதறிக்கொண்டு அவளை அவசரமாகப் பார்த்தான். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டவனாய், அவளுக்குப் பின்னால் ஓடி, வழி மறிப்பது மாதிரி நின்று, ''நான் சென்று வரட்டுமா?'' என்றான்.

அவள், நாணத்துடன் தலைகுனிந்து, ''நான் போய் வருகிறேன்!'' என்று கூறினாள்.

''ஒரு சிறு விஷயம்...''

சட்டென்று நின்ற அவள் அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

''என் பெயர் சபேசன்; உன் பெயரை நான் தெரிந்து கொள்ளலாமா?''

பனிபடர்ந்த செங்கமல மலர்போல் அவள் முகம் குப்பென வியர்வையில் நனைந்து மலர்ந்தது. ''என் பெயர்... சந்தியா...'' என்றாள் பசுந்தேறல் குரலில். ''உங்களுக்கு ஓய்விருந்தால் எங்கள் முகாமுக்கு ஒரு நாள் வருகிறீர்களா? உங்களை என் தந்தையிடம் அறிமுகப்படுத்த ஆசைப்படுகிறேன்.''

அவள் அங்கிருந்து மானெனத் துள்ளி ஓடினாள்.

'சந்தியா!... என்ன அழகான பெயர்!'— இறக்கத்துடன் தனக்குள் இவ்வாறு முணுமுணுத்துக்கொண்டே சபேசன், அந்தச் சிற்றாற்றின் உயரமான கரைமீது காற்றில் பறந்து செல்லும் வெண்ணிற மேகத் துகில் போல் சென்றுகொண்டிருந்த அவளையே தன்னை மறந்து கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டு நின்றான். (தொடரும்)



# பிரசன்னம்

**கர்ணன்**

வெட வெடக்கும் குளிரில் குளித்துவிட்டு வந்து கோயிலுக்குப் புறப்பட ஈசுவரி தயாரானபோது, அவளுக்கு முன்பாகக் கணவர் சோமசுந்தரம் குளித்துவிட்டு வந்து தயாரானார். இருவரும் ஜோடியாக வீதியில் இறங்கிக் கோயிலை நோக்கி நடந்து சென்றார்கள்.

இன்று உதயத்தில் ஆருத்ரா தரிசனம். அம்பலத்தில் நின்றாடும் தேவ தேவன் இன்று உலக அரங்கத்தில் நின்றாடும் காட்சியைக் கண் மலரக் கண்டு இறும்பூதெய்தலாம். கோயிலின் மலைப் பாறை போன்ற பெரிய வாசல் கதவுகள் இரவு முழுவதும் திறந்திருக்கும். சேவார்த்திகள் அணி அணியாக வந்து கூடுவார்கள். தேவாரமும் திருவாசகமும் ஓதுவார்களின் குரலில் உருகியோடி, சரம் சரமாகத் தொங்கும் நெய் விளக்குகளில் கலந்து சுடரேற்றும். விவரம் தெரிந்த நாள் தொட்டு ஒவ்வொரு வருடமும் இந்நாளில் ஐயன் தரிசனத்தைக் காணத் தவறியதில்லை ஈசுவரி. அதிலும் கல்யாணமாகிக் குழந்தை இல்லையென்றான பிறகு கடும் விரதமிருந்து ஈசுவரனின் அருள் வேண்டிப் போயிருக்கிறாள். கடந்த பன்னிரண்டு வருடங்களாக இரு கையேந்தி மனம் கசிந்து கண்கள் பனித்து நின்ற இந்தப் பெண் ஜென்மத்தின் மேல் அவன் கடைக் கண் விழவில்லை.

மார்கழி மாதத்துப் பனியில் நனைந்த பூரண பிரதிமையின் ஒளி அபிஷேகம் செய்த பால்மாதிரி கலங்கலாகப் பரவிக் கிடக்கிறது. பளீரென்று அடிக்கும் இரவின் கனத்த காற்று உடலைச் சிலிர்க்க வைக்கிறது. நீண்ட வீதியில் முன்னே கணவன் செல்லப் பின்னால் அவர் நிழலாக நடக்கும் ஈசுவரிக்குத் தன் நினைவு இல்லை.

ஊரில் ''பெரிய வீடு'' என்றால் பிரசித்தம். அது ஈசுவரியின் வீட்டைத்தான் குறிக்கும். வீடும் அப்படித்தான். வெண்ணெய் போன்ற சிப்பியும் சாந்தும் குழைத்துக் கோட்டை போல் கட்டியது. வீட்டின் முன் ஹாலில் விதானமாக மச்சு கட்டி, அதன் கீழ் மணை வரை போட்டு, அதற்கு மேல் எந்நாளும் ஊஞ்சல் ஆடிக் கொண்டிருக்கும். அந்த ஊஞ்சலில்தான் மூன்று நாட்கள் — நாளுக்கொரு அலங்காரம் பண்ணிக் கொண்டு அவனும் அவளும் உட்கார்ந்து ஊர் ஜனங்களைக் கிறங்க வைத்தார்கள். அதற்குப் பின்னால் அந்த ஊஞ்சலில் யாரும் உட்காரவில்லை. மணமான புதிதின் இன்ப மயக்கம் நீங்கி, குழந்தை என்ற புதுக் கனவில் மனம் லயித்தபோது — ஒரு நாள் பிறக்கப்போகும் குழந்தையை அந்த ஊஞ்சலில் இட்டுத் தாலாட்டுவது போலும், அதன் பின் ஊர் கூடிப் பெயரிடும்போது தாய்மையின் பூரிப்போடு இந்த ஊஞ்சலில் உட்கார்ந்து இரு கை ஏந்திப் பிள்ளையை எடுத்து மார்போடணைத்து, உச்சி மோந்து, கோமளமான சுகத்தில் சொக்கி, அப்புறம் பிள்ளை பெரியவனாகி ஒரு நாள் மணமகனாக இந்த ஊஞ்சலில் உட்காரும்வரை அவள் நினைவுகளைத் தாங்கி ஆடியது ஊஞ்சல்.

கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர் என்கிறார்களே அது — ஒருவன் ஒருத்தியுடன் ஆரம்பிக்கும் ஒரு வாழ்க்கையின் இணைப்புச் சங்கிலி ஆயிரம் வருடங்கள் அறுந்து போகாமல் அடுக்கடுக்காகத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் என்பது தானே இதன் உண்மை. இப்படியே போய்க் கொண்டிருந்தால் இதற்கு ஒரு முடிவு வேண்டாமா?

ஆயிரம் ஆண்டுகளாக இணைந்து வரும் இந்தத் தொடர் — குலக்கொடி ஒரு நாள் அறுந்து, அந்தக் குலம் இந்த மண்ணில் இருந்த சுவடு தெரியாமல் மறைந்து போகும். அப்படியானால் இந்தப் பெரிய வம்சத்தின் தொடர் என்னோடு... என்னோடு... இந்தப் பழிக்கும் பாவத்துக்கும் நான்தானா ஆளாக வேண்டும்? என் வாழ்வு செல்வதற்கு விதி ஏன் இப்படி ஒரு பாதையை அமைத்தது? அம்மா!... கண்ணுக்குத் தெரியாத பெரிய வண்டு என் நெஞ்சைக் குடைந்து துருவுகிறதே. வேதனை தாளவில்லையே...

நெஞ்சைப் பிடித்துக் கொண்டு கோயிலுக்குப் போனாள். கோயிலில் கூட்டம் நிரம்பி வழிந்தது. உதயத்தில் கற்பூர ஹாரத்தியானபோது, கண்களை மூடிக் கைகள் கூப்பி உருகினாள் ஈசுவரி.

உள்ளம் கசிய வணங்கிய ஈசுவரி சில மாதங்களில் கருவுற்றாள். அடுத்த மார்கழிக்குள் ஓர் ஆண் குழந்தையையும் பெற்றாள். பிறந்த குழந்தையைத் தூக்கிக் கொஞ்ச முகத்தருகே கொண்டு போனபோது பிள்ளை பிறவிக் குருடாய் இருப்பதைக் கண்டு விக்கித்தாள். உலகத்தின் அழகுகளையெல்லாம் ஒன்று திரட்டி அபூர்வமாய் இந்தக் குழந்தையைச் சிருஷ்டித்துக் கொண்டு வந்த ஆண்டவன், கடைசியில் மனம் மாறிக் கண்களைத் திறக்காமலே விட்டு விட்டானா?

உக்கிரத்துடன் ஈசுவரியின் நெஞ்சைப் பிளந்துகொண்டு ஆழ்ந்த துயர மூச்சு வந்தது.

பன்னிரண்டு வருடங்கள் தவமிருந்து வரம் பெற்று அதன் பலனே போல் பிறந்த குழந்தை குருடு என்றால் செய்த பூஜை எங்கோ குறைப்பட்டுப் போயிற்று என்று தானே அர்த்தம்? இதற்கு யாரை நோவது? இதை நினைத்து வருந்துவதில் பயனில்லை தான். ஆனால் மனம் எப்படி எப்படியோ தவிக்கிறது. செவிடாய், மூடமாய், வேறு அங்கஹீனமாகப் பிறந்திருக்கக் கூடாதா? உலகத்தின் ஒளி போன பிறகு வெறும் சூனியமான இருளில் என்ன இருக்கிறது? ஜடமாய் — வாழ்வே இன்னதென்று அறியாமல் வாழ்வது எத்தனை கொடுமை.

அவளின் மனக் கவலையோடு வருடங்கள் கழிந்தன. குழந்தை மெய்கண்டான் வளர்ந்து

மணிமொழி பேசி வீடெங்கும் நடந்து திரிந்தான். கண்ணற்ற அவனுக்கு ஒவ்வொரு விநாடியும் புதிராயிருந்தது; ஒவ்வொரு கணமும் சகவரிக்குப் பயமாய் வளர்ந்தது. மாடிக்குப் போனால் தவறி விழுந்து விடுவானோ என்ற பதைப்பு. தோட்டத்துக்குப் போனால் தரையோடு தரையாக இருக்கும் கிணற்றை நினைத்துப் பீதி. வீதிக்குப் போனால் பாதை தெரியாமல் எங்காவது போய்விடுவானோ என்ற அச்சம். அப்பப்பா...அவனைக் காப்பாற்றுவது எவ்வளவு சிரமம்!

நினைவின் ஓட்டம் கலைந்த சகவரிக்குப் பிள்ளையின் ஞாபகம் வந்தது. விளையாடி விட்டுச் சீக்கிரமே திரும்பிவிடும் மெய்கண்டான் வெகு நேரமாகியும் வரக் காணோமே? பதறிக் கொண்டு வெளியில் வந்தாள்.

திண்ணையில் தன்னந் தனியே உட்கார்ந்து அண்டை வீட்டு ஜோதியின் பூனைக் குட்டியைத் தடவித் தடவிப் பார்த்து, அது பஞ்சு பஞ்சாக இருக்கும் குஷியில் லயித்துப் போன மெய்கண்டானுக்கு என்ன தோன்றியதோ? பூனைக்குட்டி நழுவி விட்டது கூடத் தெரியவில்லை. தூணில் சாய்ந்து தலையை உயர்த்தி உட்கார்ந்து விட்டான்.

வெளியில் வந்த சகவரி மகன் உட்கார்ந்திருக்கும் நிலையைக் கண்டு புழுங்கினாள். தேவனின் கிருபைக்கு ஆளாகிக் கண்களைப் பெற இவன் காத்திருக்கிறானோ... தன் துன்பத்தை மறைத்துக் கொண்டு மகனைத் தூக்கி நெஞ்சுடன் அணைத்துக்கொண்டு, ''வாடா, கண்ணு, சாப்பிடப் போகலாம்'' என்று கூறினாள்.

பெற்ற தாயின் முகத்தைப் பார்த்தறியாத மெய்கண்டான் வெறும் இமைகள் சிறகடிக்க, சின்னக் கையால் தாயின் தலை, முகம், வாய் என்று துழாவி முடிவில் நாடியைப் பிடித்து மெல்லக் கேட்டான்: ''ஏம்மா எப்போ பார்த்தாலும் ஒரே பயமாயிருக்கு. ஜோதியின் பூனைக் குட்டியைப் பார்க்க ரொம்ப ஆசையாயிருக்கும்மா...'' முடிவற்ற இருளில் புழுங்கிப்போன குழந்தைக்கு பழகிப்போன இருள் பயங்கரமாகப் பட்டது.

அவன் தீனக் குரலும் ஏக்கமும் சகவரியின் உயிரைக் கவ்விப் பிடித்தன.

''ஏம்மா அழறே? நா இனிமே இப்படி யெல்லாம் கேக்க மாட்டேன். தப்பா சொல்லிட்டேன். கோவிச்சுக்காதேம்மா...'' என்ற போது மெய்கண்டானின் முகம் தாயை வருத்திய துன்பத்தில் வாடிச் சோர்ந்தது.

''படைத்த கடவுள்தான் கண்ணை அடைத்துவிட்டான் என்றால், பெற்ற



தாய் வாயையுமா அடைக்க வேண்டும்? அந்தகைய பாவி இல்லேடா உன் அம்மா!'' மகனின் வாட்டத்தைக் கண்டு மனத்துக்குள் புழுங்கினாள் ஈசுவரி.

'அம்மா கோவிச்சுக்கலே. ரொம்ப நல்லவன்' என்றதும் பிள்ளையின் முகம் சந்தோஷத்தில் விரிந்தது.

தட்டில் சாதம் பிசைந்து மகனுக்கு ஊட்டி; வாய் கையெல்லாம் கழுவிச் சுத்தப்படுத்தி அம்மாவுக்கு வேலே முடிகிறவரைக்கும் இங்கேயே இருக்கணும்'' என்று மகனைத் திண்ணையில் உட்கார வைத்துவிட்டு உள்ளே ஈசுவரி போனதும் அண்டை வீட்டு ஜோதி விளையாட வந்தாள்.

ஜோதிக்கும் மெய்கண்டானுக்கும் ஒரே வயதுதான். ஜோதி ரொம்ப நல்லவள். மற்றவர்களைப் போல் அருகில் இருந்துகொண்டே மெய்கண்டானைத் தேட விடமாட்டாள். 'குருட்டுக் கண்ணு'ன்னு கேலி பண்ண மாட்டாள். அவன் வீட்டுக்குக் கையைப் பிடித்துப் பதனமாக அழைத்துக் கொண்டு போவாள். படிக்கும் போது அவனுக்கும் பாடம் சொல்லித் தருவாள்.

தினசரி விளையாட வரும் ஜோதி அன்று ஏனோ வரவில்லை. அவளுக்காகக் காத்திருந்து சோர்ந்துபோன மெய்கண்டான் மெள்ள வெளியே வந்து வாசலில் கால்களிரண்டையும் தொங்கப்போட்டு உட்கார்ந்து பறந்து செல்லும் வாகனங்களின் சப்தத்தைக் கூர்ந்து கேட்டான்.

கண்களால் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டியதை உணர்வால் புரிந்துகொள்ள முற்படுகையில் புதிராகத் தோன்றுகிறது. அப்பொழுது கண்களைக் கட்டியிருக்கும் கட்டை அவிழ்த்து எறிந்து விட்டு இந்த உலகத்தைப் பார்க்க வேண்டுமென்ற வெறி உண்டாகிறது.

உள்ளத்தில் எழுந்த ஆவலுடன் பின்னும் திரும்பி, ''அம்மா!'' என்று கூவினான் மெய்கண்டான்.

என்றுமில்லாத வேகமும், பயமும் பொங்க மகன் கூப்பிடுவதைக் கேட்ட ஈசுவரி, என்னவோ என்று ஓடி வந்தாள். வந்து நின்றவளின் கால்களைத் தட்டுத்தடுமாறிப் பிடித்து எழுந்து, ''ஏம்மா, ஜோதி ஒரு நாளைக்குக் கண்ணு தெரியும்னு சொன்னுளே, அது எப்போம்மா தெரியும்?'' என்று உயிரே குரலாய்க் கேட்டான் மெய்கண்டான்.

ஓடிவந்த பதற்றமும், கொஞ்ச நஞ்சமிருந்த நிம்மதியும் போய் விக்கித்து நின்றாள் ஈசுவரி.

'' கண்ணே. நீ அப்பாவைப் போல் பெரிய ஆளாகும்போது கண் தெரியும்!'' மகனின் முகவாயைத் தாங்கிக் கொஞ்சி அவன் வேகத்தைத் தணித்தாள்.

தொலை நினைவுகளாக இருந்தவை வரவரப் பளிச்சென்று தெரிவது போல், நெஞ்சின் ஒரு மூலையில் அணு அணுவாய் இருந்த ''ஒரு நாள் பார்வை வரும்'' என்ற நம்பிக்கை தாயின் பேச்சால் வெகு அருகில் வந்தது. அந்தப் பூரிப்பில் இனிமையும் கம்மலும் நெக்குருக்கமும் கொண்ட கார்காலத்தின் அந்திப் பொழுது முகத்தில் விழ நின்றான்.

மகனின் பேதைமையும், நம்பிக்கையும் பொய் சொன்ன ஈசுவரியின் நெஞ்சைச் சுட்டன.

நெடியதொரு சோகத்தின் சங்கிலித் தொடர் போல் நாட்கள் கழிந்தன. அன்று பௌர்ணமி. நிலாச் சோறு சாப்பிட்டு விட்டு ஜோதியும் மெய்கண்டானும் மொட்டை மாடியில் படுத்திருந்தனர். வெகு நேரம் வானத்தைப் பார்த்தவாறு இருந்த ஜோதி, அங்கிருந்து 'ஸர்ர்' என்று கீழிறங்கி வந்த நட்சத்திரத்தைக் கண்டதும், ''டேய், அங்கே பாருடா! எவ்வளவு பெரிய நட்சத்திரம் கீழே வருது!'' என்று நண்பனுக்குக் கண் தெரியாது என்பதை மறந்து அவனைப் பிடித்து உலுக்கினாள்.

பரபரத்து எழுந்து தன்னைச் சுற்றிக் கைகளை வீசிப் பார்த்து ஏமாந்த மெய்கண்டான், ''எங்கேடா வருது; ஒண்ணையும் காணுமே?'' என்று தடுமாறியபோது, ஜோதி அவனைத் தாங்கிப் பிடித்து, ''இந் நேரம் கடல்லே போய் விழுந்திருக்கும்'' என்றவாறு மெல்ல உட்கார வைத்தாள். நட்சத்திரத்தைப் பார்க்க முடியாத ஏக்கத்துடன், ''நட்சத்திரம் எப்படிடா இருக்கும்?'' என்றான் மெய்கண்டான்.

''தெளி தெளியா, மினு மினுன்னு, பெரிசா அருமையா யிருக்கும்!''

தான் போட்டிருக்கும் பட்டுச் சட்டையைத் தடவி;



அதன் வழுவழுப்பை உணர்ந்த மெய்கண்டான், "இப்படியா யிருக்கும்?" என்று சட்டையைத் தூக்கிக் காட்டினான்.

"இந்தச் சட்டையைப் போல் எங்காவது நட்சத்திரம் இருக்குமா?" குபீரென்று சிரித்த ஜோதி, "அதெல்லாம் பார்த்தாத்தான் தெரியும்" என்றான்.

இப்பொழுது நட்சத்திரத்தைப் பார்க்க முடியவில்லை என்ற குறை உறுத்தினாலும், ஒரு நாள் பார்க்க முடியும் என்ற தைரியம் வந்ததும், "எனக்கு ஒரு நாளைக்குக் கண் தெரியும். அப்போ நானும் பார்ப்பேனே!" என்று மகிழ்ச்சியில் சொன்ன மெய்கண்டான் "ஜோதி! அதுக்கு இன்னும் எவ்வளவு நாளடா இருக்கு?" என்று கேட்டான்.

"அதுக்கு ரொம்ப நாள் இருக்குடா. ஒரு நாளைக்கு நீ செத்துப் போனதும், மேலே இருக்கிற ஊருக்குப் போவே. அங்கே போனதும் பளிச்சின்னு கண் தெரியும்."

"அப்போ இன்னிக்கே செத்துப்போய், மேலே இருக்கிற ஊருக்குப் போனா கண்ணு வந்துடுமா?" உடனே பார்வை வந்து எல்லா வற்றையும் பார்க்கத் துடித்தான்.

"ஆமாம்." ஒரே வரியில் சொன்னான் ஜோதி.

"செத்துப்போறதுன்னா எப்படிடா?"

"அதெல்லாம் கோயில்லே இருக்கிற சாமிக்குத்தான் தெரியும். அவருகிட்டத் தான் கேக்கணும்."

அதன் பின் மெய்கண்டான் பேசவில்லை. கோயிலுக்குப் போய்ச் சாமியிடம் கேட்க வேண்டுமென்ற ஒரே சிந்தனையில் ஆழ்ந்து விட்டான்.

மறுநாள் கால் போன வழியே மெய்கண்டான் நடந்தபோது, அந்தப் பாதை அம்மன் சன்னிதியைக் கடந்து, சுவாமி சன்னிதியில் போய் முடிந்தது. ஓங்கி யெழுந்து அடங்கும் கண்டாமணி ஓசையின் கார்வையும், ரீங்கரிக்கும் இசையும் கலந்து நடராஜப் பெருமானின் பண்ணாக எங்கிருந்து அந்தக் குரல் வருகிறது? அந்தக் குரலை நூலிழையாகப் பிடித்துக் கொண்டு போனபோது தேவாரப் பாடசாலையின் வாசலில் வந்து நின்றான். பின் மெதுவாக வாசலில் உட்கார்ந்தான்.

தேவாரப் பாடசாலையில் ஓதுவாரும், அவரைத் தொடர்ந்து மற்றவர்களும் ஒரு சுருதியில் தங்களை மறந்து தேவாரப் பண் இசைத்தார்கள். பாடல் முடிந்ததும் தீபாராதனையாகிப் பிரசாதம் வழங்கி எல்லாரும் போன பின் தனியே வெளியே வந்த ஓதுவார், முகமெல்லாம் கண்ணீராய் உட்கார்ந்திருக்கும் மெய்கண்டானைக் கண்டு பதறிப்போனார்.

"என்ன தம்பி, ஏன் அழுகிறாய்?" என்றவாறு அவன் அருகில் அமர்ந்து உருக்கத்துடன் முதுகை வருடியபோது, அவனுக்குப் புல்லரித்தது.

"நா...நா...அழலே. பாட்டைக் கேட்ட அமைதியிலே மனசு நெறைஞ்சு பொங்குது. எனக்கு ரொம்பச் சந்தோஷமா இருக்கு. ஆமாம் சந்தோஷமா இருக்கு."

மெய்கண்டானின் பேச்சில் உள்ளம் நெகிழ்ந்த ஓதுவார், தன்னை நோக்காது எதிரே இருக்கும் யானைக் கொட்டடியைப் பார்த்தவாறு அவன் பேசுவதைக் கண்டு திடுக்கிட்டு



"என்ன உழைச்சு என்ன புண்ணியம்? மாடா உழைக்குதுன்னுதானே சொல்றீங்க? கழுதைனா உழைக்குதுன்னு சொல்றீங்களா?"

---

உற்றுப் பார்த்துக் குருடன் எனக் கண்டு திகைத்துப் போனார். எல்லா லட்சணங்களும் நிறைந்தவனுக்கு இப்படி ஒரு குறையா?

"ஏன் தம்பி, உனக்கு பிறவியிலே..." குறையைச் சுட்டிக் கேட்டால் அவன் மனம் புண்படும் என்பதை உணர்ந்ததும், கேட்க வந்ததை நிறுத்திக் கொண்டு விட்டார் வயதான ஓதுவார்.

"கண்ணைத்தானே கேக்கிறீங்க? பிறவியிலே ஆனதுதான்" என்றபோது துக்கத்தில் மெய்கண்டானின் குரல் கரகரத்தது.

தெய்வச் சிலையை எதிரில் கண்டு, அவன் நாமத்தைப் பாடி பக்தியில் திளைக்கும்போது கூட இந்த மனிதர்கள் கண் கலங்குவதில்லையே. பார்வையிழந்த இந்தச் சிறுவன் பாடலைக் கேட்டு இப்படி உருகுகிறானே. இவன் மனத்தில் நிறைந்திருக்கும் நிச்சிந்தையான பக்தியும், தெய்வமும்தான் என்னே! உள்ளத்தில் உறைந்திருக்கும் தெய்வம் ஒளியாய்க் கண்களிலும் நிறையக் கூடாதா? மெய்கண்டான் மீது சுரந்து வந்த இரக்கம் ஓதுவாரின் கண்களில் நீராகத் துளித்தது.

அன்றிலிருந்து தினசரி அங்கு சென்று ஆனந்தத்தேனைப்பருகிய மெய்கண்டானுக்குத் தன் குறை மறந்து போனது. வீட்டின் பாசப் பிடிப்பு மெள்ள மெள்ளத் தளர்ந்தது. முடிவில் ஈசனிடமே மனம் லயித்து விட்டது. பிள்ளைப் பருவம் கடந்து இளைஞனாக நின்ற மெய்கண்டார் அன்று அமைதியாக ஓதுவாரின் அருகில் உட்கார்ந்திருந்தார்.

"என் பிறவியை—கண்கள் அற்றுப்போன—என் பிறவியை நினைத்துப் பெருமைப்படுகிறேன். எல்லையில்லா ஆனந்தமடைகிறேன்" என்று கூறிப் புன்னகை புரிந்தார்.

"என்ன தம்பி, சந்தோஷமா?" ஓதுவார் நகைத்தார்.

"ஏன் நகைக்கிறீர்கள்? தவசிகளும் மகான்களும் குகைகளில் காடுகளில் கடவுளைக் காணக் கண்களை மூடி நிஷ்டையிலிருக்கும் போது, எதிரே பரவும் இருளின் முதல் அலையில் மனம் அடங்கி ஒரு நிலைப்படுகிறது. பின்பு நிலைபெற்றுவிடும் அகாண்டாகாரமான பேரிருளில்தானே கடவுளைக் காண்கிறார்கள்! இறைவன் இருளில்தான் உறைந்திருக்கிறான். உடலை வருத்தி உணர்வுகளைப் பொசுக்கி முடிவில் தன்னையே அழித்துக் கொள்ளும் அவர்களின் நிலையை எனக்குப் பிறவியிலேயே அளித்த பரம்பொருளின் கருணைதான் என்னே...!"

பரவச நிலையிலிருந்து விடுபட்டு "..எனக்கு இந்த இடம் பிடித்திருக்கிறது. இங்கே ஏதும் தடை....." என்று சொல்ல வந்ததைச் சொல்லாமல் நிறுத்தினார் மெய்கண்டார்.

"ஒன்றும் தடையில்லை. எல்லாச் சௌகரியங்களையும் நான் செய்கிறேன்" என்றார் ஓதுவார்.

அன்றிலிருந்து அங்கேயே தங்கிவிட்டார் மெய்கண்டார். அதிகாலையில் ஓதுவாருடன் எழுந்து துணி துவைத்து, குளித்துத் திருநீறு அணிந்து தேவாரமும் திருவாசகமும் பாடிப் பூஜை செய்வது, இரவில் வீதியில் பஜனை பாடி வருவது, சாமி உலா வரும் போது கோஷ்டியுடன் பாடிக் கொண்டு பின்னால் போவது என்று ஓதுவாரின் பழக்கங்களை அப்படியே பின்பற்றி நடந்தார் அவர். நாளடைவில் யார் துணையுமின்றிக் கோயில் முழுவதும், வெளிப் பிராகாரம், தேரடி, ஆற்றுக்குக் குளிக்கப் போவது என்று தனியே போய் வரப் பழக்கப்படுத்திக் கொண்டு தம் காரியங்களைத் தாமே பார்த்துக் கொண்டார். அதில் அவருக்கு ஒரு நிம்மதி இருந்தது.

அதன் முதல் குரலிலிருந்துதான் விடிவு பிறக்க வேண்டும் என்பது போல், எங்கோ ஓங்கிக் குரலெடுத்துக் கூவியது சேவல்.

தேவாரப் பாடசாலையில் தோட்டத்துக் கதவைத் திறந்து வைத்து வாசலுக்கு எதிரே படுத்திருந்த மெய்கண்டார். "சிவ சிவா" என்று முனகியவாறு தலைக்கு மடக்கி வைத்திருந்த கைகளை உதறி இயக்கி விட்டு எழுந்து நின்றார். விரிப்பு இல்லாமல், தலையணை வைக்காமல் படுத்துத் தன்னைப் பழக்கி, அந்தப் பழக்கத்துக்கு உட்பட்டுப்போய்ப் பல வருடங்களாகி விட்டன. உடலைப் பற்றிய கவலையிருந்தால்தானே சுகத்தைப்பற்றிய ஞாபகம்வரும்?

மாசற்ற வாலிபத்தின் பக்தி மயமான சோபையும், கழுத்தில் புரளும் உருத்திராட்ச மாலையும், முண்டனம் செய்த தலையும், நீண்ட கரங்களும் கொண்டு ஸ்தம்பமாக எழுந்து நின்றவர் ஒரு கணம் நிதானித்து, அந்த நிதானத்தில் விழித்திருக்கும் உணர்வே பார்வையாக, கொடியில் கிடந்த துண்டை உதறிப் போர்த்திக் கொண்டு நிமிர்ந்த போது, நடராஜர் படத்துக்கு முன்னால் எரிந்து கொண்டிருந்த குத்துவிளக்கின் சுடர் காற்றில் படபடத்து அணைந்து மூன்றும் ஜாம இரவை இன்னும் இருளாக்கியது.

விளக்கு அணைந்ததோ, இருள் சூழ்ந்ததோ பிறவிக் குருடரான அவருக்கு எப்படித் தெரியும்? இரவும், பகலும், வெளிச்சமும், இருட்டும் எதானால் என்ன? எல்லாம் அவருக்கு ஒன்றுதான். எழுந்தவர் தோட்டத்துப் படலைத் திறந்து கொண்டு வைகை ஆற்றை நோக்கி நடந்தார். படித்துறையில் மெல்ல இறங்கித் தண்ணீரைக் கைகளால் விலக்கி மூழ்கினார். மார்கழி மாதத்துப் பனி உடலை உலுக்கி எடுத்தது. மறுமுறை மூழ்கியெழுந்த போது குளிரோ கூதலோ வாட்டவில்லை. உள்ளத்தில் வைகை பாய்ந்து கிறுகிறுத்தது.

மெய்கண்டார் கரையேறி நெற்றியிலும், கழுத்தில் புரளும் ருத்திராக்ஷ மாலையைத் தள்ளி மார்பிலும், கைகளிலும் பட்டை பட்டையாகத் திருநீறு அணிந்து கொண்டு, விரல் பிடி எடுத்து உச்சந்தலையில் தூவியவாறு தேவாரத்தை மெல்ல முணுமுணுத்தவாறு கோயிலை நோக்கி நடந்தார்.

கோயிலில் கூட்டம் நிரம்பி வழிந்தது. கர்ப்பக்கிருகத்தின் அருகில் சென்று தலை தாழ்த்தி நின்றார். இன்னும் ஒரு நாழிகையில் பூஜை நடக்கும். எங்கும் ஆழ்ந்த நிசப்தம். ஆண்களும் பெண்களும் பிரதிமைகளாக நிற்கின்றனர்.

தீபாராதனையாகிறது. அழகு அணிபூண்ட சேவார்த்திகளின் கூப்பிய கரங்கள் தலைக்கு மேலே, வானத்தை நோக்கும் குன்றுகளாக நிற்கின்றன.

இத்தனை காலமும் மெய்கண்டாரின் நெஞ்சில் புரண்டு தவித்துக் கொண்டிருந்த உணர்வின் திரள் எதிரொலித்துக் குவிந்தது.

" குனித்த புருவமும், கொவ்வைச்
செவ்வாயும், குமிண் சிரிப்பும்
பனித்த சடையும், பவளம் போல்
மேனியும், பால் வெண்ணீறும்,
இனித்தங்கிய எடுத்த பொற்
பாதமும் காணப் பெற்றால் "

காணப் பெற்றால்..... காணப்பெற்றால்... சிருஷ்டியின் தீவிரத்துடன் ஒலித்த மெய்கண்டாரின் குரல் அடைத்து விட்டது. எப்படிக் காண்பேன்? இம் மனிதப் பிறவி வீண் வீண். ஈசா ! என்னையாளும் நடராஜப் பெருமானே. இந்த எளியோனுக்கு—பிறவிக் குருடனுக்கு ஒருகணம் தரிசனம் தரலாகாதா? இந்த ஜென்மம் அந்த ஒரு பாக்கியத்துக்குத் தான் காத்துக் கிடக்கிறது." மெய்கண்டார் மெள்ள விசும்பினார்.

கங்கை வெள்ளத்தில் தோன்றும் சுழல்கள் மெய்கண்டாரின் கண்ணுக்குள் சுழன்றன. காலமும் இடமும் மனமும் அற்றன. கறை போன்ற — நிழல் போன்ற இருள் விலகி ஓர் ஒளி பரவியது. இந்த ஒளியில் நடராஜர் திகம்பரத்தில் நின்றாடியவண்ணம் பிரசன்னமாகிறார்.

பரம் பொருள் பிரசன்னமான போது கோயிலும் மனிதர்களும் பக்திசாகரத்தில் மூழ்கிக் கிடக்கின்றனர். மெய்கண்டார் ஒருவரே நிமிர்ந்து பார்க்கிறார். வானத்தையும் திசைகளையும் ஆடையாக அணிந்த சபேசன் மெய்கண்டாரின் உள்ளத்தில் சிற்றம்பலமாடினான்.

'ஐயனின் தரிசனத்தைக் கண்டு விட்டேன். நானே பாக்கியவான். இப் பிறவி வீணில்லை; வீணில்லை'. திறந்த அவர் நெஞ்சில் பதிந்த நடராஜர் உருவம் கண் முன்னால் தோன்றப் பிரமையாக நின்றார் மெய்கண்டார்.

சீக்கிரமாக
மார்பு சளியை
கலையுங்கள்

# அமிர்தாஞ்சனம் தடவி

## விரைவில் நிவாரணம் பெறுங்கள்

பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரான அமிர்தாஞ்சனம், ஜலதோஷம் மற்றும் மார்புசளி இவைகளிலிருந்து பூரணமாக நிவாரணம் அளிக்கிறது. தசைவலி, தலைவலி, சுளுக்கு இவைகளுக்கும் சிறந்த வகையில் நல்ல குணமளிக்கும் மருந்து அமிர்தாஞ்சனம். ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால் ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக்கணக்கில் வரும் • அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டு வரும் கைகண்ட நிவாரணி.

பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி.




அமிர்தாஞ்சன் லிமிடெட்
மதராஸ் - பம்பாய் - கல்கத்தா - டெல்லி



# என்ன செய்ய?

'நசிகேதன்'

அபிராமி அந்தாதியிலிருந்து ஸௌந்தர்ய லஹரி வரையில் எத்தனையோ பாட்டுக்களை நான் ராஜாவுக்கு மனப்பாடமாகச் சொல்லித் தந்திருந்தேன். வெள்ளிக் கிழமை சாயங்காலம் ஐந்து மணிக்குப் பிரார்த்தனைப் பாட்டுக்கள் பாட உட்கார்ந்தானானால், எட்டு மணி வரையிலும் அதற்கு அப்பாலும் கூடக் கடகடவென்று இனிமையான குரலில் பாடம் ஒப்பிக்க மாட்டானா? அப்படியும்கூட அவனுக்கு மனப்பாடமான ஸ்தோத்திரங்கள் தீராது. "இன்று சொல்லாததை யெல்லாம் அடுத்த வெள்ளிக் கிழமை சொல்லலாம்—போதும். போய்ப் பாடத்தைப் படி" என்று நான்தான் விரட்டி அனுப்புவேன்.

படிப்புத்தான் எப்படி? அவன் மாதிரி அவன் வகுப்பில் படித்த பிள்ளைகளை கிடையாது. சாப்பிட்டுவிட்டு வந்து, தானாகவே பாடப் புத்தகங்களை எடுத்து வைத்துக் கொண்டு ஓர் இரண்டு அல்லது இரண்டரை மணி நேரமாவது ஒரு மூச்சாகப் படிக்காமல் ஒரு நாள் இரவாவது படுத்து உறங்க மாட்டானே!

இருந்த வரையில் நல்ல பிள்ளையாகத்தான் இருந்தான். இப்பவும் என்ன? எனக்கு நல்லவனாக இல்லையே தவிர யாருக்கோ நல்லவனாகத்தான் இருக்கிறான் என் ராஜா. அவனைப் பத்தி யார் என்ன குறை கூற முடியும்? வயசுக் கோளாறு. சினிமா பார்த்துப் பார்த்து வந்து மூண்டு விட்ட வாழ்க்கை வழிகளில் மோகம்—ஒரு இருப்பம். அதுவும் எத்தனை ஆண்டுகளாகி விட்டன? அடேயப்பா! என்னைப் போலவே என் மகனும் ஒரே மூர்க்கத்தனம்தான். பிடிவாதமாகத் தீர்மானித்து ஏற்றுக் கொண்டதை நழுவ விடமாட்டான் என் ராஜா.

நான்தான் கோபித்துக் கொண்டேன். சரி. தகப்பனின் கோபம் அப்படி ஒன்றும் நிலைக்காது என்று அறிவாளியான அந்தப் பயலுக்குத் தெரிந்திருக்க வேண்டாமா? அவனும் இத்தனை நாட்கள் எத்தனை குழந்தைகளுக்குத் தகப்பனாகி யிருப்பான்? அப்பாவிப் பயல் என்னைப் பற்றிக் கவலைப்படாதிருக்கட்டும். பெற்ற தாயைப் பற்றிக் கவலைப்பட்டிருக்க வேண்டாமோ? போய் விட்டானே! அந்தப் பிரிவை அவள் எப்படிச் சகித்துக் கொண்டிருப்பாள் என்று தெரிய வேண்டாமா அவனுக்கு? அவன் தாயார் — அவளை நினைக்கும்போது தான் எனக்கே கஷ்டமாக இருந்தது.—இருக்கிறது. மகராசி அவள் போய் விட்டாள். அவன் அந்தக் கிறிஸ்தவப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று சொன்னதற்கு நான் மறுத்துச் சொன்னதும் என் சுபாவத்தை அறிந்த அவன் பதில்கூட எதுவும் தராமல், தாயாரிடம் கூடச் சொல்லிக்கொள்ளாமல் போய்விட்டானே! அதிலிருந்து வன்னிசாக நாட்களை எண்ணிக் கொண்டு நாலே ஆண்டுகள்தான் அவன்

உயிருடன் இருந்தாள். இருந்த ஒரே பிள்ளையையும் தனியாக எங்கேயோ போக விட்டுவிட்டுத் தனியாக இருக்கிறேனே — நானும் இல்லாமல்தான் இறேன் என்று சொல்லுகிற மாதிரியில் போய்விட்டாள்.

கிழவனுக்கு நினைவுகள் மண்டி வர ஆரம்பித்துவிட்டால் முடிவுதான் ஏது? நினைவுகளும் நானுமாகத்தான் காலந் தள்ளுகிறோம். காலம் என்னைச் சாவு நோக்கித் தள்ளுகிறது. சாவு சீக்கிரம் வராதா என்று நான் நினைப்பதில்லை. வரும், வந்துவிடும் என்கிற நம்பிக்கையிலேயே காலம் தள்ளுகிறேன். சிரஞ்சீவியாக இருக்க விரும்புகிறவன் அல்ல நான். என்றாலும் எல்லையற்ற காலம் எக்காரணம் கொண்டும் உயிர் வைத்துக் கொண்டிருக்க இயலாது.

நினைவுகளும் நானும்தான். தினமும் ஸ்நானம் செய்துவிட்டு ஒரு பிடி அரிசியைக் களைந்து வைத்து, ஏதோ ஒரு துவையல், ஒரு ரஸம், ஒரு குழம்பு, ஒரு கறி, ஒரு கூட்டு, ஒரு பச்சடி என்று பண்ணி, கும்பகோணம் கடைத் தெருவிலிருந்து வாங்கி வந்த உறைப்பான ஊறுகாயைப் போட்டுக் கொண்டு, உறைந்த ஆடை படர்ந்த தயிரை விட்டுச் சாப்பிட்டுவிட்டு 'அக்கடா' என்று படுத்தால் என் நினைவுகளும் நானும் தான். சம்பிரமமாகச் சாப்பிடுவது தவிர வேறு என்ன செய்ய — சமையலில் பொழுது போகிறது. கோயிலுக்குப் போகலாம் - பிரார்த்தனைகள் செய்யலாம் — ஆனால் அபிராமி அந்தாதியிலும், சௌந்தர்ய லஹரியிலும் இருந்த பிடிப்பு, நம்பிக்கை விட்டுப் போய் விட்டன எனக்கு. சாப்பாட்டில் மட்டும் விடவில்லையா என்கிறீர்களா? ஆமாம், விடவில்லை. எதிலாவது பிடிப்பிருந்தால்தானே மனிதனாக இருக்க முடிகிறது?

வயது எழுபதாகி விட்டது. கண் மங்கவில்லை. காது அடைத்துவிடவில்லை. பற்கள் உதிர்ந்துவிடவில்லை. நரை மட்டும் இருபத்தைந்து வயதிலேயே கண்டதுதான்; அதிகரித்து வந்திருக்கிறது. நடை தள்ளாடவில்லை. மற்றப்படி வயதானதற்கு அடையாளம் தூக்கம்தான் வரமாட்டேன் என்கிறது. பாராயணம், ஜபம் என்று ஏதாவது வைத்துக் கொண்டால் சௌகரியமாகத்தான் இருக்கும். முடியவில்லை. எதற்காக ஜபமும் பாராயணமும் பிரார்த்தனையும் என்று தோன்றுகிறது. இரவு என்ன, பகல் என்ன— எப்பொழுது படுத்தாலும் தூங்க முடிந்தால் அப்படித் தூங்கும் சக்தி படைத்தவன் அதிருஷ்டக்காரன்தான்.

அந்தத் தெருவிலே பொழுது போக்கத்தான் வழி என்ன இருந்தது? யாரையாவது தண்ணீர் இறைத்துவிடச் சொல்லிப் பாக்குக் கன்றுகளுக்கு மடை திறந்துவிட்டு நீர் பாய்ச்சலாம் — சளசள வென்று நீர் பாய்வதைக் கண்டு ஆனந்திக்கலாம். அல்லது காலையிலும் மாலையிலும் ஸ்நானம் செய்கிறேன், வேட்டி துவைக்கிறேன் என்று வெய்யில் கன்னென்று படாத நாட்களில், ஆற்றில் நீர் ஓடிய நாட்களில் ஆற்றங்கரைக்குச் சென்று வரலாம். யாராவது இளவட்டங்கள் ஜமா சேர்ந்து கொண்டு சீட்டாடத் தொடங்கினால் — இளவட்டங்கள் என்றால் அவர்கள் எல்லோரும் ஐம்பது வயதுக்கு மேல் அறுபது வயதுக்குட்பட்டவர்கள்— அவர்களுக்கு என்றாவது ஒரு கை குறைந்தால் கிழவனைக் கூப்பிட்டுக் கொள்வார்கள். சாதாரணமாக வேறு ஆசாமி இருந்துவிட்டால் என்னைக் கூப்பிட மாட்டார்கள். மற்றவர்களைக் கழுதை சுமக்க வைப்பதில் அவர்கள் எனக்கு ஈடு இல்லை — ஒதுங்கி விடுவார்கள். முப்பது வருஷ ஆட்டத்தில் ஒரு நாள்கூட நான் சுமந்தது என்பது கிடையாதே. அதிருஷ்டக்காரன்தான் நான்.

இந்த அதிருஷ்டத்தோடும் பெருமையோடும்தான் காலம் கடத்திக் கொண்டிருக்கிறேன். வேறு பெருமை என்ன இருக்கிறது எனக்கு. வேலையிலிருந்தேன்—சம்பாதித்தேன் — வீடுவாசல் நிலம் எல்லாம் வாங்கினேன் — பென்ஷன் வருகிறது—என் சொத்துக்கெல்லாம் வாரிசாக ஒரு பிள்ளையும்தான் பிறந்தான். நன்றாகத்தான் படித்தான். அடக்கமானவனும்தான். ஆனால் காதல் கீதல் என்று ஆரம்பித்து விட்டான். நல்ல உத்தியோகத்தில் இருந்தான். வாட்ட சாட்டமாக ஆசாமியும் மடக்காக இருப்பான். யாரோ படித்த கிறிஸ்தவப் பெண் வலை வீசிப் பிடித்து விட்டாள். அது நான் ரிடையரான புதுசு — அந்தப் பிள்ளை மேல் நான் என் உயிரையேதான் வைத்திருந்தேன். அவன் என் உயிரை விட்டு விட்டு யாரோ காதலியைக் கைப்பிடித்துக் கொண்டு போய்விட்டான். எனக்கு எந்த விதத்திலும் உதவாமல் கண்ணிலிருந்துகூட மறைந்து விட்டான்— மனத்திலிருந்தும் மறைந்து விட்டானானால் நல்லதுதான்.

எனக்குப் புத்தென்னும் நரகத்திலோ, வேறு எந்த நரகத்திலோ நம்பிக்கை கிடையாது. நரகம் என்பது வேறு எங்கேயோ இருக்கிறதா — இல்லவே இல்லை. இங்கேயே— இதோதான் இருக்கிறது.

அவனைக் குடியும் குடித்தனமுமாகப் பாக்கு மரங்கள் மூன்று வரிசை வளர்ந்த என் வீட்டில் குடியேற்றி வைக்க வேண்டும் என்று நான் ஆசைப்பட்டேன். ஏமாற்றி விட்டான். ஊரிலே அந்த ஆரம்ப வருஷங்களிலே யாருடனும் பேசவே எனக்குக் கூசியது; கூனிக் குறுகிப் போனேன் நான்; யாரையும் நிமிர்ந்து நேருக்கு நேர் பார்க்கும் சக்தியை இழந்து விட்டேன். நாளடைவில் சமாதானமாகி விட்டது. எல்லாமே பழகிவிட்டது என்று வைத்துக் கொள்ளலாம்—இருந்தாலும் அந்த அவமானம் தாங்க முடியாததாகத்தான் இருந்தது.

போகத்தான் போனானே — தன் இஷ்டப்படித்தான் இருக்கிறானே — என்றாவது, எப்பவாவது எனக்குத் தன்னைப் பற்றிய தகவல்களையாவது அனுப்பிக் கொண்டிருக்கக் கூடாதோ! துண்டித்து வெட்டு ஒன்று துண்டு இரண்டாகி வேறு வேறு வழிகள் சென்றுவிட்ட மரத் துணுக்குகள் போல் தகவலே தெரியாவண்ணம் மறைந்து விட்டானே! மறந்து விட்டானே! அடேயப்பா — எவ்வளவு நெஞ்சழுத்தக்காரன்! ஆரம்பத்தில் எங்கேயோ டெல்லி, பம்பாய் என்று பராபரியாக ஏதாவது என் காதில் விழும். நாலைந்து ஆண்டுகளுக்குப் பிறகு அப்படிச் செய்தி எதுவும் காதில் விழுவதும்

நின்று விட்டது. கும்பலில் ஒருவனாக எங்கேயோ எப்படியோ மறைந்து விட்டான்.

எதற்காக நான் உயிர் வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று என்னையே நான் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு ஒரு பதில்தான் தெரிகிறது. என்றாவது ஒரு நாள், ''அப்பா!'' என்று கூப்பிட்டுக் கொண்டு அவன் — என் ராஜா—வருவான். ''அப்பா! நான் செய்தது தவறு. உங்களுக்குப் பெருந்தீங்கு இழைத்து விட்டேன். நானும் சுகமாக இல்லை. உங்களையும் — அம்மாவையும்தான் — சுகமாக இருக்க நான் விடவில்லை. என்னை மன்னித்து விடுங்கள் அப்பா. அப்பா......'' என்று கதறிக் கொண்டு அவன் வருவான், வருவான் என்று காத்திருக்கிறேன்.

காத்திருக்கிற நேரத்தில் பொழுது போவது சிரமமாகத்தான் இருக்கிறது. பொழுது தானாகவே போகிறது என்றாலும் எத்தனை மெதுவாக ஊர்ந்து செல்கிறது! கோயிலுக்குப் போய் வருவது மூன்று வேளையும் என்று வைத்துக் கொண்டிருந்தால் சுலபமாக இருந்திருக்கும். பூஜை வேளை எடுத்துக் கொண்டிருக்கலாம். ஒரு காலத்தில் புஸ்தகங்களைப் படித்து ஆனந்தித்துப் பொழுது போக்குவதில் நம்பிக்கை வைத்திருந்தேன். இங்கு புஸ்தகங்கள் கிடைப்பதில்லை என்பது தவிர புஸ்தகங்களிலும் காதல் என்பது தவிர வேறு என்னத்தைக் காணக் கிடக்கிறது? ஏதாவது அகஸ்மாத்தாக என்றாவது புஸ்தகம் கிடைத்தால் ஒரே மூச்சில் உட்கார்ந்து படித்து முடித்து விடுவேன். எப்படியோ வருஷம் — நாள் நாள் நாள் என்று — ஆகி விடும். வயது எழுபத்தொன்றாகும், எழுபத்திரண்டாகும்...... எழுபத்தி மூன்றாகும்... அவன் — என் ராஜா வரும் வரையில்! அவன் வந்து. ''அப்பா......!'' என்று கூப்பிட்டு...

என் கனவுகளில் மூழ்கி யிருந்துவிட்டேன். பத்துப் பன்னிரண்டு வயதுப் பயல் அவன் வந்து என்னைத் தொட்டு, ''தாத்தா, தாத்தா! உட்கார்ந்துகிட்டே தூங்கறீங்களே!'' என்று சொல்லும் வரையில் நான் விழித்துக் கொள்ளவில்லை.

''யாருடா, பயலே! எங்கேயிருந்து வரே. பயமே தெரியலியே!'' என்று அதட்டலாகக் கேட்டேன். என் ராஜா பயம் தெரியாத பயலாகப் பன்னிரண்டு வயதுப் பயலாக இந்த மாதிரி இருந்தது ஞாபகம் வருகிறது.

''நான் ரகு தாத்தா! நீ.... நீ.... நான் பம்பாயிலிருந்து வர்றேன் தாத்தா! உன்னைப் பார்த்து எனக்குப் பயமாக இல்லை தாத்தா. அதோ அம்மாகூட வராளே. எனக்கு என்ன பயம்?'' என்றான் பையன்.

பையன் வாளிப்பாக, மூக்கும் முழியுமாக, விசாலமான நெற்றியுடன், ஆழ்ந்து அகன்ற கண்களுடன், கருன் கருணாகக் கி-ாப் புடன் நன்றாகத்தான் இருந்தான். வெள்ளை முழு நிஜாரும், நீலச் சட்டையுமாக இருந்தான். சாயல்கூட....அப்படியும் இருக்குமோ. ராஜாவேதான் கடையில் வந்துவிட்டானோ! எனக்குள் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அடக்கிக் கொள்ள, எதுவாக இருந்தாலும் பலஹீனமடைந்து விட்டதாகக் காட்டிக் கொள்ளக் கூடாது என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தேன்.




அதற்குள் அவன் தாயார் நெருங்கி வந்து விட்டாள். ''மன்னிக்க வேண்டும்! பையன் வித்தியாசம் பாராட்டாமல் பழகுபவன். எங்கே போனாலும் அவனுக்கு நண்பர்கள் கிடைத்து விடுவார்கள். தாத்தாவைச் சிநேகிதம் பிடித்துக்கொண்டு உறவு கொண்டாட ஆரம்பித்து விட்டானா?'' என்று சொல்லிக் கொண்டே படியேறிவந்த அந்த அம்மாள், ''இந்தத் தெருவிலே இந்தத் திண்ணையும் இந்தப் பாக்குமர வரிசையும் முல்லைக் கொடிப் பந்தலும் மல்லிகைப் புதரும் வாசல் பக்கம் ஜோரும் மிகவும் மனோகரமாகத்தான் இருக்கின்றன. வீட்டிலே அம்மா எல்லாம்......'' என்று இழுத்தாள்.

எனக்கு என்னவோ ஏமாற்றம் தொண்டையை அடைப்பது போல இருந்தது. ''வீட்டிலே யாரும் இல்லை. நான் ஒண்டிக் கட்டை. வாசல் பக்கம், திண்ணையிலேதான் பெரும் பகுதி நேரத்தையும் போக்குகிறேன். ஆகவே வீட்டிலே இந்தப் பகுதியைத்தான் சுத்தமாக வைத்திருக்கிறேன். வீட்டில் உள் புறம் பார்க்கச் சகிக்காது'' என்றேன்.

''நாங்கள் வெளியூரிலிருந்து வருகிறோம். இந்தப் பக்கம் ஊரெல்லாம் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று ஆசை. இப்படிக் காரில் வந்தோம். கார் ரிப்பேராகி விட்டது. மூத்த பையன் காரை ரிப்பேர் செய்யக் கும்பகோணம் எடுத்துப் போயிருக்கிறான். இப்போது மணி மூன்றாகிறதா — சாயங்காலம்தான் கார் வரும். கோயிலெல்லாம் கடைத்தெருவெல்லாம் பார்த்தாகி விட்டது. இப்படி இங்கேயேதான் சிறிது உட்கார்ந்து பொழுதைப் போக்கி விடுகிறோமே!'' என்றாள் அந்த அம்மாள்.

நெற்றியில் பொட்டு. அடக்கமான வர்ணங்களில் பட்டுப் புடவை. அடக்கமான அளவிலே ஆபரணங்கள். தலையில் பூ. வயது முப்பத்தைந்து. நாற்பதும் இருக்கலாம். அமரிக்கையான குடும்ப ஸ்திரீதான்.

என்னவோ என்னை உத்தியது. ''நீங்கள்....'' என்று ஆரம்பித்தேன்.

''நாங்களும் இந்தப் பக்கம்தான். ஆனால் சென்னையில் படிக்கும்போதே இந்தப் பக்கம் வருவது போவது குறைந்து விட்டது. பிறகு கல்யாணம் செய்து கொண்ட பிறகு எங்கள் வருக்கு வடக்கே உத்தியோகமாகி விட்டது—அவருக்கும் வீட்டிலே ஏதோ மனஸ்தாபம். என்ன என்று எனக்கும் தெரியாது. இந்தப் பக்கம் இருபது வருஷங்களாக வரவே அவசியம் ஏற்படவில்லை.''

கண்களில் இலேசாகத் துளித்த நீரைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டாள். அதற்குள் ரகு. ''எனக்கு இந்த ஊர் ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது. இந்தத் தாத்தாவையும்தான்...'' என்றான். ''நாயகி, நான்முகி, நாராயணரை...'' என்று தனக்குள் பாடவும் தொடங்கிவிட்டான் என்று கவனித்தேன் நான். கொஞ்சம் கொஞ்சமாக என் சந்தேகம் விலகிக் கொண்டிருந்தது.

அந்த அம்மாள் எதற்காகக் கண்ணீர் விடுகிறாள் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. எப்படி, என்ன கேட்பது என்பதும் தெரியவில்லை. ஆனால் ஓர் ஐந்து நிமிஷம் கழித்து விம்முகிற குரலில் அவளாகவே சொன்னாள். ''என் புருஷன் சென்ற ஆண்டு காலமாகி விட்டார்'' என்றாள்.

பின் இந்தப் பொட்டு, இந்தப் புஷ்பம், இந்த அலங்காரம், ஆடை......? என் மனத்தில் எழுந்த கேள்விகளுக்கு அவள் தானாகவே பதில் அளித்தாள்.

''என் புருஷனுக்கு விதவைக் கோலம் என்பதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. போகிறவர்கள் போய் விட்டால் இருக்கிறவர்கள் அதற்காக வாழாதிருக்க வேண்டும் என்கிற அவசியம் கிடையாது என்று சொல்லுவார். அந்தக் கொடுமைக்கு நான் அடிமைப்பட்டு விடக் கூடாது என்று என்னிடமே வாக்குறுதி வாங்கிக் கொண்டார், இறக்கும் போது..... அவர் வாழ்வே அப்படித்தான்..... இருந்து கழுத்தறுக்கிற பிள்ளையைவிடப் பெற்றோருக்கு அடங்கி நடக்க முடியாதவன் ஒதுங்கி இல்லாதது போல் ஆகிவிடுவது நல்லது என்பார். அவரே அப்படி ஒதுங்கி விட்டவர்தான். எதற்காக அவர் ஒதுங்கினார் என்று எனக்குத் தெரியாது. என்னிடம் எதையும் மறைத்து வைக்காத அவர் என் திருமணத்துக்கு முந்திய செய்திகள் எதையுமே சொன்னதில்லை'' என்று ஏதோ பெரிய புராணம் போலச் சொல்ல ஆரம்பித்தவள் சட்டென்று நிறுத்திக் கொண்டாள்.

**நா**ன் பிரமித்துத்தான் போனேன். காதல் என்பது சாவுக்குப் பின்னும் நீடிக்கும் போலும். அந்த அம்மாள் பேசியது எனக்காக அல்ல. தன் உள்ளத்தை நிறைத்த காதலால் என்று எனக்குப் புரிந்தது. யார் என்கிற சந்தேகமும் அகன்று விட்டது. என் ராஜா தான் — வேறு யார் இப்படித் தத்துவம் பேசியிருக்க முடியும்?

சற்று நேரம் பேசாதிருந்தாள் அந்த அம்மாள்: பிறகு, ''ஏதோ உங்களைக் கண்டதும் ஏதோ தோன்றிற்று. என் தகப்பனாரைப் போல எண்ணிக் கொண்டு ஏதேதோ சொல்லி விட்டேன். மன்னித்து விடுங்கள்'' என்றாள்.

''மன்னிப்பா? எதற்கு? உங்களை மன்னிக்க நான் யார்? நான் யாரோ பரதேசி!'' என்றேன்.

''எனக்கு என் தாயாரையோ தகப்பனாரையோ தெரியாது. கிறிஸ்தவ அனாதாசிரமத்தில் வளர்ந்து படித்தவள். என் கணவருக்கு முன் யாருடைய அன்புக்கும் நான் பாத்திரமானவளல்ல. இப்போது குழந்தைகள் அன்பில் காலம் தள்ள முயன்று கொண்டிருக்கிறேன்..... ரகு, அடே ரகு! தாத்தாவைத் தொந்தரவு பண்ணாதேடா, பயலே!'' என்றாள்.

ரகுவோ என்னைத் தொட்டு நெருக்கியபடி உட்கார்ந்து கொண்டு, ''தாத்தா, ஒரு கதை சொல்லு தாத்தா!'' என்றான்.

நான் என்ன கதையடா சொல்வேன் உனக்கு?

அவள் கண்களில் நீர் துளித்தது — துடைத்துக் கொண்டாள். என் பாழும் கண்களில் நீர்கூடத் துளிக்க மாட்டேன் என்கிறதே. என்ன செய்ய?

# உங்கள் தேவைகளுக்கு ஏற்ற

# பெட்போர்டு

# வகைகள்!













எந்தவிதமான சாமான்களானாலும், எவ்வள வுடன் கமை யிருந்தாலும், எத்தனை மைல்களுக்குச் செல்ல நேர்ந்தாலும், எப் படிப்பட்ட ரோடுகளானாலும், உங்கள் குறிப்பிட்ட தேவைகளுக்கு மிகப் பொருத்த மான பெட்போர்டு சேஸிஸ் கிடைக் கின்றது. உங்களுக்குத் தேவை யான வீல்பேஸ், உடல் அமைப்பு அளவு ஆகியவற்றைத் தேர்ந் தெடுங்கள்.

ஹிந்துஸ்தான்

# பெட்போர்டு

டீஸல் பெட்ரோல்

வாங்குங்கள்






ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிட்., கல்கத்தா

அதிகாரம் பெற்ற ஹிந்துஸ்தான் மோட்டார் வியாபாரிகள் : ஆக்ரா கன்ட்., அஹமதாபாத், அஹமத்நகர் ஆஜ்மீர், அலகாபாத், அம்பாலா கன்ட்., அமிர்தசரஸ், அவுரங்காபாத், பெங்களூர், பரேலி, பரோடா, பிலாய் போபால், புவனேஸ்வர், பம்பாய், கல்கத்தா, சண்டிகர், கோயம்புத்தூர், கொழும்பு, கட்டாக், டேரா - டூன், தன்பாத் தன்னார், திப்ருகார், தும்கா, கௌஹாத்தி, கோவா, குவாலியர், இம்பால், இந்தூர், ஜபல்பூர், ஜெய்ப்பூர், ஜல்கான் ஜம்மு, ஜாம்ஷெட்பூர், ஜோத்பூர், ஜோர்ஹட், ஜலந்தர் சிட்டி, கான்பூர், காட்மண்டு, கோலாப்பூர், கும்பகோணம் கர்நூல், லக்னோ, மதராஸ், மதுரை, மங்களூர், மீரட், நாக்பூர், புது டில்லி, பாளையங்கோட்டை, பாடியாலா, பாட்னா பாண்டிச்சேரி, பூனா, ராஜ்கோட், ராஞ்சி, சம்பல்பூர், சாட்னா, செகந்திராபாத், ஷில்லாங், ஸில்சார், ஸிலிகுரி, ஸ்ரீநகர் தஞ்சாவூர், டாடாநகர், தானா, திருச்சிராப்பள்ளி, திருவனந்தபுரம், வாரணாசி கன்ட்., விஜயவாடா, விஜயநகரம் சிட்டி.

# வட்ட மேஜை

★ சுவையான சர்ச்சைகள்
★ சத்தியத்துக்கே வெற்றி
★ வீண் கெடுபிடி

**சு**வையான சர்ச்சைகள் என்ற அம்சத்தில் நாடகத் துறை பற்றிய விவாதங்களைப் படித்தேன். என் அநுபவத்தில் அமெச்சூர்கள் உழைப்பிலே, கலை ஆர்வத்திலே, உயர்ந்த வகையில் நாடகங்களை மேடை ஏற்றுவதிலே, தொடர்ந்து வெற்றி காண்பதிலே தொழில் வகை நடிகர்களுக்குச் சளைத்தவர்களில்லை. நாடகத் தந்தை சம்பந்த முதலியார் போன்றவர்கள், தாங்கள் ''பொழுது போக்கு நடிகர்கள்'' என்று சொல்வதில் பெருமைப்பட்டனர். புதுமைகளைப் புகுத்தி, நல்ல நாடகங்களை மேடையேற்றி வழிகாட்டினர். நல்ல நாடகங்களுக்கு வரவேற்பு என்றுமே உண்டு.

இன்று பிரபல சினிமா நட்சத்திரங்களாக இருப்பவர்களில் பலர் அமெச்சூர் குழுக்களில் தோன்றியவர்கள் என்று பெருமைப்பட வழி இருக்கிறது. ஆகையால் ''பயில் முறை தொழில்'' நடிகர்கள் அல்லது ''புரபஷனல்—அமெச்சூர்ஸ்'' என்று கொள்வது சரி!

கடைசியாக ரஸிகர்களின் விருப்பம் என்பது எதற்கும் பிடிபடாத விசித்திர விஷயம். மகத்தான தயாரிப்புக்கள் மண்ணைக் கவ்வும். மட்டமானது என நினைப்பது வானை எட்டிப் புகழ் அடையும் விந்தைக் காலம் இது. ஆகையால் நித்திய கண்டம் பூர்ண ஆயுசான இந்தத் துறையிலே 'நம் கடன் பணி செய்து கிடப்பதே' என்று இரு சாராரும் 'நடிகன்' என்ற ஒரே பெயரிலேயே கலை வளரப் பரஸ்பரம் உதவி செய்வோம்.

சென்னை—4 வீ. வீ. ரங்கப்பா
10-9-65

**நா**ம் மற்ற நாட்டின் மண் பாகத்தை அபகரிக்க வேண்டுமென்ற எண்ணத்தைக் கனவில்கூட நினைத்ததில்லை. மாற்றான் நமது தேச மண் பாகத்தை அபகரிக்க நினைப்பது மில்லாமல் நம்மைப் போர்க் கோலம் பூண வைத்து, உலகத்தின் கண்முன்னால் நம்மையே குற்றவாளியாக்க முனைகிறானென்பதைக் கேட்கும்போது நமது ரத்தமெல்லாம் கொதிக்கிறது. இன்றைய நிலையில் பாகிஸ்தான் செய்துவரும் அடாத செயல் இஸ்லாத்தின் புனித குறிக்கோளுக்கே மாறுபட்டதாகும். இந்நேரத்தில் நமது பாரத தேசம் அநீதியை எதிர்த்துப் போராடுவதில் ஈடுபட்டிருப்பதால், வாலிபர்களாகிய நாம் தேசத்துக்காக மகத்தான தியாகங்கள் செய்ய மனோ திடத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். தேசத்தில் நெருக்கடியான இவ்வேளையில் நாம் ஈடுபட்டிருக்கும் தொழிலில், வியாபாரத்தில் அல்லது உத்தியோகத்தில் கண்ணியமாகவும் முன்னைப்போனதையும்விட சிரத்தையுடனும் அதிக நேரம் உழைப்பதுடன், தேவை ஏற்படும்போது ராணுவத்தில் சேரவும் முன்வர வேண்டும். தர்மந்தான் நிலைத்து நிற்கக் கூடியது.

பம்பாய், எம். ஏ. லத்தீப்
15-9-55 தென்னிந்திய வாலிபர் கூட்டமைப்பு

**வெ**ல்லத்துக்குப் பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை 'ரிட்டர்ன்' அனுப்பும்படி வேலூர் ஜில்லா சப்ளை ஆபீஸர் அவர்கள் கேட்கிறார். இப்போது வெல்லத்துக்கு விற்பனை வரியும் கிடையாது; கட்டுத் திட்டங்களும் கிடையாது. வெல்லம் விலை ரொம்பவும் அதிகமாகக் குறைந்துவிட்டு, எல்லா ஊர்களிலும் மார்க்கெட்டில் தேங்கிச் சௌகரியமாகக் கிடைக்கிறது.

இந்த நிலையில் ஸ்டாக் ரிட்டர்ன் கேட்டு அதைக் கொண்டு செய்யப் போவது என்ன இருக்கிறது? தற்பொழுது வெல்ல ஸ்டாக்கினால் அரசாங்கத்துக்கோ, பொதுஜனங்களுக்கோ ஆக வேண்டியது ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஏற்கனவே வியாபாரிகளுக்குப் பலவிதத் தொந்தரவுகள் இருந்து வருகின்றன. இந்த வெல்ல ரிட்டர்ன்களால் வீணாகக் காரணமின்றி ஜில்லா சப்ளை அதிகாரி வேண்டுமென்றே அபராதம் போட ஏதுவாகும். அவசியமும் கட்டுத் திட்டங்களும் ஏற்படும் சமயம் சர்க்கார் 'ரிட்டர்ன்' கேட்கலாம். வீண் கெடுபிடி எதற்கு?

திருப்பத்தூர், (வ. ஆ.) ரா. குப்புசாமி
27-8-65 திருப்பத்தூர்
சேம்பர் ஆப் காமர்ஸ்

**கா**ங்கிரஸ் கட்சியிலுள்ள சினிமாக் கவிஞர் ஒருவர் வாரப் பத்திரிகை ஒன்றில், அதுவும் சுதந்திர தின மலரில்,

''நாடும்முன் னேற நலன்கள் பெருக
வேண்டு மென்றால் விதியொன்று செய்வோம்
ஜனநா யகத்தைச் சற்றே நிறுத்தி
சவுக்கை எடுப்போம்! தரித்திரம் நீங்கும்!''

என்ற புரட்சிக் குரலை எழுப்பியுள்ளார்.

கடந்த ஜூலை மாதம் வரை ஜனநாயகத்துக்கு விழா எடுத்துவிட்டு, மாசேதுங்கையும், அயூப்கானையும் பற்றி நாப்பறை கொட்டி முழங்கி விட்டு, சர்வாதிகாரக் கொடுமைகளைக் குறித்து இகழ்ந்துரைத்து விட்டு, ''இனி சவுக்கை எடுப்போம்'' என்றால் 'அவன் கிடக்கிறான் குடிகாரன், எனக்குப் போடு இரண்டு மொந்தை' என்ற கதையாக அல்லவா இருக்கிறது இது!

எனவே மாஸேதுங்கின் ஆக்கிரமிப்பையும், அயூப்கானின் நெறி கெட்ட செயலையும் அடக்குவது — ஒடுக்குவது மட்டுமல்ல நமது வேலை, அதோடு ஆதிக்க வெறி பிடித்தலையும் அதிகார வர்க்கத்தினராகிய காங்கிரஸ்காரர்களையும் பதவியிலிருந்து இறக்க வேண்டும். அதற்காக நாம் பாடுபட வேண்டும்; அதுவே நம் கடமையும் கூட.

திருப்புகலூர்
30—8—65 முல்லைவழுதி

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

# ஸ்வஸ்திக்

## பர்:ப்யூம்டு காஸ்டர் ஆயில்

படியாத கேசத்தையும் படியச் செய்கிறது—நாள் முழுவதும் மழமழப்பாய் வைக்கிறது



நேர்த்தியாக வாரிவிடப்பட்ட கவர்ச்சி மிக்க கேசம்... கண்ணைக் கவரும் பளபளப்புள்ள கரும் கேசம்—நாள் முழுவதும் மழமழப்புடன் திகழச் செய்வது ஸ்வஸ்திக் பர்:ப்யூம்டு காஸ்டர் ஆயில்.

Shilpi SOM 24 Tam

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon